# சர்க்கரை நோயிலிருந்து முழுப் பாதுகாப்பு!

# மூலிகை மருத்துவத்தின் புதிய பரிமாணம்!

—த்தட்ட— மூன்று
...ரி கவடிகளுடன் போராடி
...சரு பகுதியை ஆங்கிலத்தில் ...
பெயர்த்தேன். அதன் பின், ஓலைச் சுவ...
யில் உள்ளபடி கடுக்காய், மஞ்சள், நெல்
என்று ஒன்பது வகையான மூலிகைகளைக்
கொண்டு சர்க்கரை வியாதிக்கான
மாத்திரைத் தயாரிப்பில் இறங்கினேன். கிட்
டத்தட்ட 99 லட்சம் ரூபாய் செலவு செய்
தேன். என் முயற்சியின் விளைவாக இந்திய
மருத்துவக் கழகம், நான் தயாரித்த மாத்தி—
...ரத்தத்தில் சர்க்கரையின் அள...
...தையும் ...

கல்கி 28.2.99

* இந்திய மருத்துவ கழகத்தின் அங்கீகாரம் பெற்றது.
* டாக்டரின் ஆலோசனைப்படி சாப்பிட வேண்டிய மூலிகை மாத்திரை.

## COGENT db கோஜெண்ட் db

தமிழ்நாடு முழுவதும் ஆங்கில மருந்து கடைகளில் கிடைக்கும்.

சென்னை நகர விற்பனையாளர்கள்:

1. பாரத் டிரேடிங் கம்பெனி, 7, அல்சா ரீஜன்ஸி பேஸ்மெண்ட், 165, எல்டாம்ஸ் ரோடு, சென்னை - 600 018. போன் : 4354016.
2. சரத் எண்டர்பிரைசஸ், 1/2, ரேடியல் நகர் ரவுண்டு பில்டிங், கலெக்டர் நகர், அண்ணாநகர் மேற்கு விரிவாக்கம், சென்னை - 600 101. போன் : 6241563

சூப்பர் ஸ்டாக்கிஸ்ட் :

**அலங்கார் ஹெல்த் & மெடிகேர்,**

(தமிழ்நாடு, அந்தமான் மற்றும் பாண்டிச்சேரி.)

**பிளாக் நம்பர் 496, L பிளாக் 1A, அண்ணாநகர் கிழக்கு,**

**சென்னை - 600 102. போன் : 6446417**

# “மூப்பனாரைப் கலைஞர்கிட்ட



• தெய்வானை யம்மாள்

**கோவை, பல்லடம் தாலூகா – கே. கிருஷ்ணாபுரம் ஊராட்சி மன்றத் தலைவி தெய்வானையம்மாள். சமீபத்தில் இவரது பதவியை முடக்கி, உள்ளாட்சி நிர்வாகத்தை பி.டி.ஓவை கவனிக்கச் சொல்லி உத்தரவிட்டுள்ளார் மாவட்ட ஆட்சியாளர். "காரணமில்லாமல் என்னைப் பழிவாங்கி விட்டார்கள்" என்று குமுறும் தெய்வானை அம்மாளைச் சந்தித்தோம்.**

“இங்கே ஊராட்சி மன்றத்துல எந்தக் கூட்டமும் கூட்டமா நடக்கிறதில்லை. நியாயமான பேச்சுக்கு மதிப்பே இல்லை! கண்ட வார்த்தை பேசிட்டு அடிக்க அடிக்க வர்றாங்க! பாதுகாப்புக்காக என் புள்ளைக ரெண்டு பேரைக் கூடக் கூட்டிட்டுப் போறேன். எந்தத் திட்டத்தையும் செயல்படுத்த விடாம தொடர்ச்சியா கூச்சல் குழப்பம் போட்டா எப்படீங்க? எம் பதவிய முடக்கறதுக்கு என்ன காரணமுன்னு வேண்டாம்? அப்படித் துணிச்சல் உள்ளவங்க, பதவி நீக்கம்னு அறிவிச்சுட்டு மறுதேர்தல் நடத்தட்டும் பார்க்கலாம்? அதை விட்டுடுட்டு, ஒத்துமையா இருந்த கவுன்சிலர்களைப் பிரிச்சுவச்சு, எனக்கெதிரா தூண்டி விட்டு விளையாடறதுக்கு இந்தத் தொகுதி எம்.எல்.ஏ என்ன இங்கே ராஜாவா?"

கோபமாகக் கேட்கும் தெய்வானையம்மாவுக்கு வயது 65. படிப்பு வெறும் 5-வது. த.மா.கா காரர். கணவர் பஞ்சாயத்துத் தலைவராக இருந்து, இறந்த பின்னர் நீண்ட காலம் கழித்து வந்த உள்ளாட்சித் தேர்தலில் பெண்களுக்கு ஒதுக்கப்பட்ட இப்பகுதியில் ஜனங்களும், தன் மகன்களும் ஆசைப்பட்டதற்கிணங்க நின்று வென்றதாகக் கூறுகிறார்.

இவருக்குக் கடந்த ஆறு மாத காலமாக சில கட்சிக்காரர்களும், வார்டு மெம்பர்களும் கொடுக்கும் 'இம்சை' கொஞ்ச நஞ்சமல்லவாம். உண்ணாவிரதம், சாலை மறியல், இவருக்கெதிராகப் பிரசார நோட்டீஸ் விநியோகம், போஸ்டர் யுத்தம், மேலிடத்திற்குப் பெட்டிஷன் மேல் பெட்டிஷன் கொடுத்த நிலையில் மாவட்ட ஆட்சித் தலைவர் முடங்கிக் கிடக்கும் ஊராட்சி வேலைகளை நடத்திட இவர் பதவியை முடக்கி, பி.டி.ஓவை (வட்டார வளர்ச்சி அலுவலர்) நிர்வகிக்க உத்தரவிட்டுள்ளார். இதற்கெல்லாம் மறைமுக – நேர்முகப் பின்னணி, தம் தொகுதி எம்.எல்.ஏ எனச் சொல்லி கொதித்துப் போய்த் தம் கட்சிக்காரர்களை – கிராம மக்களைத் திரட்டி அரசுக்கெதிராக – தொகுதி எம்.எல்.ஏ பொன்முடிக்கெதிராகப் பல்வேறு போராட்டங்களில் இறங்கியுள்ளார் தெய்வானையம்மாள்.

"இது தமிழ்நாட்டில எங்கேயும் நடக்காததுன்னு ஹைகோர்ட் வக்கீல்களே சொல்றாங்க. இங்கே இருக்கிற துணைத் தலைவர் (செல்வராஜ்) தேர்தலுக்கு முந்தியே ஒரு புறம்போக்கு இடத்தை ஆக்கிரமிச்சு பரிபாலனை செஞ்சுட்டிருந்தார். அதை நான் பதவிக்கு வந்த பின்னாடி ஒரு கட்டத்துல இங்கிருக்கிற ஹரிஜனங்களுக்குப் பட்டா போட்டுக் கொடுத்துட்டது அரசாங்கம். அதுக்கும் எனக்கு துளி கூடச் சம்பந்தமில்லை. ஆனா, அந்த மனுசன் அது நான் செஞ்ச வேலைன்னு எம்.எல்.ஏ கிட்டப் போயிட்டார். அவர் கவுன்சிலர்களைத் திரட்டி வேணும்னே நிர்வாகத்தை முடக்கத் திட்டம் போட்டு கூட்டம் நடத்த விடாம செய்தார். ஒரு கரண்ட் பில் கட்ட முடியலை. ஊழியர்களுக்கு சம்பளம் கூடக் கொடுக்க முடியாம பண்றாங்க."

"உங்க மகன்கள் இல்லாமக் கூட்டம் நடத்த முடியாதா நீங்கள்? உங்க பேர்ல உள்ள குற்றச்சாட்டே அதுதானே?"

"முடியாம என்னங்க? அப்படிப் போனா வயசான பொம்பளை எனக்கு என்ன பாதுகாப்புங்க? அந்தக் காலமாட்டம் இங்கே யாராவது மட்டு மரியாதையோட நடந்துக்கறாங்களா? எப்பப் பாரு ரகளை! பொம்பளை காதைப் பொத்திக்கிற மாதிரி வார்த்தைகள். என் வீட்டுக்காரர் இருந்தப்ப ஒரு மரியாதை ஒழுங்கு இருந்தது. ஊர் ஜனங்க ஆசைப்பட்டாங்களேன்னு நான் நின்னு ஜெயிச்சு வந்தேன். இப்படியெல்லாம் நடக்கும்னு நினைச்

## குமுறுகிறார் ஓர் ஊராட்சித் தலைவி

# பார்க்கப் போறேன்; முறையிடப் போறேன்!”

சுக் கூடப் பார்க்கலை. 'ஊரைக் கொள்ளை யடிச்ச, உலையில போட்ட தெய்வானையம் மா'ன்னு எதுக்கு போஸ்டர் அடிச்சாங்க? பல லட்சம் சுருட்டினேன்னு எந்த ஆதாரத்துல நோட்டீஸ் அச்சடிச்சுக் கொடுத்தாங்க? இதை நான் விடப் போறதில்லை. இப்ப இருந்த உண்ணாவிரதம் ஒன்றில்லை. ஊர் ஜனங்க எல்லோரையும் கூப்பிட்டுட்டு மூப்பனார் கிட்டவே போய் நியாயம் கேட்கப் போறேன். கலைஞர்கிட்டவே முறையிடப் போறேன்... அந்த எம்.எல்.ஏவோட சதியைப் புட்டுப் புட்டு வைக்கப் போறேன்...!”

இவர் இப்படிக் குமுறினாலும், இதில் சம் பந்தப்பட்டதாக – சதி செய்ததாகக் கூறப்படும் தி.மு.க. எம்.எல்.ஏ. (பல்லடம் தொகுதி) பொன் முடியின் கருத்தோ, வேறு மாதிரியாக உள்ளது.

“எனக்கும், அந்தம்மாவுக்கு துளி கூடச் சம் பந்தமில்லை. அவருக்கும் அந்த ஊராட்சி துணைத் தலைவருக்குமான தனிப்பட்ட பிரச்னை. தேவையில்லாம என்னையும் வம்புக் கிழுத்து, எனக்கெதிரா எதுக்கு உண்ணாவிரதம் இருக்கிறார்னு விளங்கலை. ரெண்டு மூணு தடவை ஊராட்சி மன்றத்தைக் கூட்டுங்கன்னு நான் போனேன். கூட்டவேயில்லை. அந்தம்மா வெறும் பொம்மை. மகன்க ரெண்டு பேரும்தான் வருஷத் துல ஆறுமாசம், ஆறுமாசம் முறைவச்சு நிர்வாகம் பண்றதா தெரியுது. இதென்ன மக்க ளாட்சியா நிலப் பிரபு ஆட்சியான்னு கவுன் சிலர்கள் கிட்டே, ஜனங்க ஏகப்பட்ட ரிப் போர்ட். உள்ளாட்சி தேர்தல் நடந்த பின்னாடி அங்கே எந்த நலத் திட்டமும் செயல்படுத் தப்படவே இல்லை. ரெண்டு பேர் தனிப்பட்ட சண்டையில நிர்வாகத்தையே முடக்கிப் போட் டுட்டாங்க. அதுக்காக கலெக்டர் நடவடிக்கை எடுத்திருக்கார். இப்ப பி.டி.ஓ நிர்வாகத்துல எல் லாம் நல்லபடியா நடந்துட்டிருக்கு. இப்பவும் ஊராட்சி மன்றத் தலைவர், துணைத் தலைவர் மற்றும் மெம்பர்கள் ஒற்றுமையா எழுதிக் கொடுத்தா எந்தப் பிரச்னையுமில்லையே? செய் வார்களா?”

பெண்களுக்கு இட ஒதுக்கீடு பார்லி மெண்ட் வரை செயலாக்கம் பெற்றுவிட்ட சூழ் நிலையில் நிர்வாகத்திற்கு வரும் பெண்கள் – குறிப்பாக கிராமப்புறப் பெண்களுக்கு அதற் கான அடிப்படைக் கல்வியறிவும், சமயோசித மும் தன்னம்பிக்கையுடன் நிற்கும் மனோபாவ மும், எதனையும் எதிர் கொள்ளும் துணிச்சலும் இருந்தாலன்றி எந்த ஓர் இட ஒதுக்கீடும் அர்த்த மற்றுப் போகும். அதற்கு ஓர் உதாரணம் – தெய்வானையம்மாள்.

சந்திப்பு : **கேயெஸ்வி**



# "பீஹாரில் பொம்மை ஆட்சி!"

## — லாலு கட்சி எம்.எல்.ஏ

பீஹார் மாநிலத்தில்—கடந்த 29 ஆண்டுகளில்—கொத்துக் கொத்தான கொலைகளின் மூலம் 1500க்கு மேற்பட்டவர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். (பகல்பூர் கலவரத்தில் 1054 பேர் கொல்லப்பட்டது தனிக் கணக்கு) 48 முறை நடந்த இந்தக் கொலைச் சம்பவங்களில் பெரும்பாலானவை மத்திய பீஹாரிலேயே நடைபெற்றுள்ளன. அதிலும் குறிப்பாக ஜெகன்னாபாத் மாவட்டத்தில்தான் அண்மையில் நடந்த செனாரி படுகொலைகள் வரை 17 சம்பவங்கள் நடந்துள்ளன. இதில் மொத்தம் 258பேர் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் 195 தலித்துகள்; 58 உயர்ஜாதியினர்; 5 பேர் பிற்படுத்தப்பட்டவர்கள். இவை தவிர, பீஹார் மாநிலத்தில் சராசரியாக தினசரி ஐந்து கொலைகளாவது நடந்து கொண்டிருக்கின்றன. ஏன் இந்த அவல நிலை? பாட்னாவிலுள்ள பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்களிடமும் பேசினோம்...

"மேலோட்டமாகப் பார்த்தால் இதுவொரு சட்டம்-ஒழுங்குப் பிரச்னை போல்தான் தோன்றும். உண்மை அதுவல்ல. மேல் ஜாதிக்காரர்களுக்குத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்கிற ஜாதியுணர்வோடு ஜமீன்தார் மனோநிலையும் அசைக்க முடியாத அளவுக்கு இருப்பதே பல கலவரங்களுக்குக் காரணமாக இருக்கின்றன.

"பீஹாரில் நில உடைமை என்பது மேல் ஜாதிக்காரர்களிடமே அதிகம் இருப்பதால்—இங்குள்ள ஏழைகளில் 90% தலித்துகளாகவே இருப்பதால் ஆரம்பத்தில் ஏற்பட்ட போராட்டம் என்பது ஒரு வர்க்கப்

• ராஜேந்திரபிரசாத் யாதவ்



• சுசீல் குமார் மோடி



• பிரபாத் குமார்





## சட்டமன்றத்தில் ராப்ரி!

"பீஹார் சட்டமன்றம் எப்படி நடக்கிறது என்பதை நீங்கள் பார்க்க வேண்டாமா? உங்களிடம் அடையாள அட்டைகள் இருக்கிறதல்லவா? அப்புறம் என்ன? வந்து பாருங்கள்!" என்று ஓர் எம்எல்ஏவே அழைப்பு விடுத்தார். போனோம்.

நாங்கள் சென்றபோது, கேள்வி நேரம் நடந்து கொண்டிருந்தது! கிராமப்புற வளர்ச்சிக்காக ஒதுக்கப்பட்ட நிதியில் ஐந்து சதவிகிதம் கூட கிராமப்புறங்களுக்குப் போய்ச் சேரவில்லை என்று பி.ஜே.பியினரும் பிற எதிர்க்கட்சியினரும் சபாநாயகருக்கு முன்னால் வந்து கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். லாலு கட்சியினரும் பதிலுக்குக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள்.

முதல்வரான ராப்ரி என்ன செய்து கொண்டிருந்தார் தெரியுமா? பாஷை புரியாத எங்களைப் போலவே அவரும் தேமே என்றுதான் உட்கார்ந்திருந்தார்!

சபாநாயகர் சபையை மாலைவரை ஒத்தி வைக்க, எங்களைப் போலவே அவரும் எழுந்து போனார்!

போராட்டமாகவே இருந்தது. ஆனால் அது போகப் போக திசை மாறி, இன்றைக்கு ஜாதிப் போராட்டமாகவும் கொலைகளாகவும் மாறிவிட்டது. இதற்கு ஒரு முடிவு ஏற்பட வேண்டுமானால், உடனடியாக நிலச்சீர்திருத்தம் நடந்தாக வேண்டும்; குறைந்த பட்சக் கூலி நிர்ணயம் செய்யப் பட்டாக வேண்டும். இதற்கு வன்முறை தீர்வு அல்ல; எல்லாத் தரப்பினரும் உட்கார்ந்து பேசித்தான் தீர்வு காண வேண்டும். இதுதான் எங்கள் கட்சிக் கொள்கையும் கூட!" என்றார், பீஹார் மாநில சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவரான (பி.ஜே.பி) சுசில் குமார் மோடி.

**கூறுகிறார்!**



• ராம் ஷ்ராய் பிரசாத் சிங்



• ராம் சந்தன் சின்ஹா



• ரஜனீஷ் ஆனந்த்

"பீஹாரில் மாத்திரம் ஏன் இந்தக் காட்டுமிராண்டித்தனமான கொலைகள்?" என்று சட்டமன்ற காங்கிரஸ் கட்சித் தலைவரான ராம் ஷ்ராய் பிரசாத் சிங்கிடம் கேட்டபோது, "உங்களூர் சட்ட மன்றத்தில் ஏன் ஒரு எம்.எல்.ஏ., அமைச்சர் ஒருவரின் மூக்கில் குத்தினார்?" என்று நம்மிடம் கேட்டுவிட்டு, அவரே தொடர்ந்தார்.

"இங்கே, வேறெங்கைக் காட்டிலும் ஜாதியுணர்வு அதிகம் உள்ளதை நான் ஒப்புக் கொண்டு தான் ஆக வேண்டும். அரசாங்கத்தின் வளர்ச்சித் திட்டங்கள் சரியானபடி கிராமப்புறங்களுக்குச் சென்றடையவில்லை என்பதும் உண்மை. கிராமங்கள் புறக்கணிக்கப்படுகின்றன. இதற்கு லாலுவின் அரசு மட்டுமல்ல; எல்லாக் கட்சியினருமே பொறுப்புத்தான்.

"இதற்காக நாங்கள் வெட்கித் தலை குனிகிறோம். நாகரிகமானதொரு சமுதாயத்தில்தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோமா என்கிற கேள்வியும் எழுகிறது. இதற்கு எல்லோரும் ஒன்றாகக் கூடிப் பேசித்தான் தீர்வு கண்டாக வேண்டும். இல்லையென்றால் பீஹார் சீரழிந்து போய்விடும்!" என்றார்.

"இப்படிப்பட்டதொரு சூழ்நிலையில் ராப்ரி அரசுக்கு உங்கள் காங்கிரஸ் கட்சி ஆதரவு தருவதேன்? ஒருபுறம் ஆதரவு தந்து கொண்டே மறுபுறம் தார்மீக ரீதியில் ராப்ரி

அரசு பதவி விலக வேண்டும் என்று சொல்வது உங்கள் கட்சியின் இரட்டை நிலையை அல்லவா காட்டுகிறது?'' என்ற நமது கேள்விக்கு பொறுப்பான சட்டமன்றக் கட்சித் தலைவராக இருப்பதால், ராம் ஷ்ராய் பிரசாத் சிங்கால் தாம் நினைத்ததை அப்படியே சொல்ல இயலவில்லை!

என்றாலும் மாநில காங்கிரஸின் துணைத் தலைவர்களில் ஒருவரும் முன்னாள் அமைச்சருமான ராம் சத்தன் சின்ஹா வெளிப்படையாகப் பேசினார்.

''நீங்களே பார்த்தீர்கள் செனாரியில்! நான் அங்கே வந்த போது அவர்கள் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். சோனியா காந்திக்கு எதிராக கோஷம் போட்டார்கள். காரணம் என்ன? ஜனாதிபதி ஆட்சி அமல் செய்யப்பட்ட பீஹாரில் மறுபடியும் ராப்ரி அரசு வருவதற்குக் காங்கிரஸ்தான் காரணம் என்பதால் ஏற்பட்ட எதிர்ப்பு அது. சோனியா தவறு தான் செய்து விட்டார். இதன் காரணமாக பீஹார் மக்களிடம் எங்கள் செல்வாக்குக் குறைந்து விட்டது என்பதும் உண்மைதான்!

''உண்மையிலேயே பீஹார் நிலைமை சீரடைய வேண்டுமானால், ஜனாதிபதி ஆட்சிதான் நீடிக்க வேண்டும். இன்னும் சொல்லப் போனால், கொஞ்ச காலத்துக்காவது பீஹார் மாநிலப் பொறுப்பை ராணுவத்திடம் ஒப்படைக்க வேண்டும். அப்போதுதான் இந்த ஜாதிக் கொலைகளில் அரசியல்வாதிகள் குளிர் காய்வது நிறுத்தப்பட்டு, நிலைமை சீரடைய ஆரம்பிக்கும்!'' என்றார்.

தெற்கு பீஹாரைச் சேர்ந்த கூடா தொகுதி எம்.எல்.ஏவும் காங்கிரஸ்காரருமான ரஜினீஷ் ஆனந்தும், ''ஜனாதிபதி ஆட்சி வாபஸ் ஆனதில் எனக்கும் பெருத்த ஏமாற்றமே! பாபர் மசூதி இடிப்பு விவகாரத்தில் தவறு செய்தது போலவே பீஹார் விஷயத்திலும் காங்கிரஸ் தவறு செய்து விட்டது. உண்மையில் மனைவிக்குப் பின்னால் இருந்து கொண்டு காட்டாட்சி செய்து கொண்டிருப்பவர் லாலுதான்!

''இங்கே 75 அமைச்சர்கள் இருந்தாலும், லாலுவின் சம்மதமில்லாமல், எந்தவொரு அமைச்சராலும் தமது பியூனைக் கூட இடமாற்றம் செய்ய முடியாது. இந்த நிலைக்குக் காங்கிரஸும் துணை போகிறதே என்கிற கவலை எங்களுக்கு இருந்தாலும், எங்கள் ஆலோசனைகளை டெல்லியிலுள்ள கட்சித் தலைமை கேட்டால்தானே!'' என்று வருத்தத்தோடு சொன்னார்.

## லாலுவின் ஜோக்!

**''கிரிக்கெட் கிரவுண்டு, புட்பால் கிரவுண்டு, டென்னிஸ் கிரவுண்டு என்றால் எனக்குத் தெரியும். அதிலெல்லாம் நான் விளையாடியிருக்கிறேன். ஆனால், சோனியா காந்தி சொல்லுகிற 'மாரல் கிரவுண்டு' பற்றி இதுவரை நான் கேள்விப்பட்டதேயில்லை. அப்படியொன்று இருக்கிறதா என்ன?''**

**'மாரல் கிரவுண்டில், ராப்ரி தேவி அரசு ராஜினாமா செய்ய வேண்டும்' என்று சோனியா சொன்னதற்கு லாலுவின் பதில் தான் இது!**

''தமிழ்நாட்டில் சமூகநீதிப் போராட்டத்தைப் பலகாலத்துக்கு முன்பே ஆரம்பித்து வெற்றி கண்டு விட்டீர்கள். நாங்கள் இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறோம்!'' என்றார் பீஹார் மாநில ராஷ்ட்ரீய ஜனதா தள (லாலு கட்சிதான்) பொதுச் செயலாளரான ராஜேந்திரபிரசாத் யாதவ்.

''சமூக நீதிப் போராட்டம் என்றால் சரி. அதற்காகக் கொலைகள் எப்படிச் சரியாக முடியும்?''

''வேறு என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? இங்கிருக்கிற உயர் ஜாதியினர் லாலுவை முன்பு எப்படி அழைத்தார்கள் தெரியுமா? 'லாலுவா' என்றுதான் அழைத்தார்கள். அதற்கு 'அட அற்பமானவனே!' என்று அர்த்தம். இது நியாயமா? வி.பி.சிங் ஆட்சியில் மண்டல் கமிஷன் அறிக்கை அமல் செய்யப்பட்டபோது, அதற்கு பயங்கரமான எதிர்ப்புத் தெரிவித்தார்கள். வேறு வழியின்றி நாங்களும் கத்தி, அரிவாள்களுடன் அதற்கு பதிலடி கொடுக்க வேண்டியிருந்தது.

''கடந்த 63–67–ல் கே.பி.சஹாய் காங்கிரஸ் முதல்வராக இருந்தார். அவர் நிலச் சீர்திருத்தத்துக்கு முயற்சி செய்தார். இதைக் காங்கிரஸில் ஊடுருவியிருந்த உயர் ஜாதிக்காரர்கள் எதிர்த்தார்கள். தங்களின் மேலாதிக்கம் பறிபோய் விடுமோ என்கிற கவலையில் அவரைத் தோற்கடிக்கவும் செய்தார்கள். இன்று அதே உயர் ஜாதிக்காரர்கள் பி.ஜே.பியில் ஊடுருவிக் கொண்டு, பிற்படுத்தப்பட்டவர்களுக்கும் தலித்துகளுக்கும் எதிராகச் செயல்பட்டுக் கொண்



டிருக்கிறார்கள். இதற்கு பதிலடியாகத்தான் நாங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். உண்மையில் நாங்கள் நடத்துவது வன்முறை அல்ல; சமூக நீதிக்கான போராட்டம். இதை உயர் ஜாதி ஆதிக்கத்தில் உள்ள பத்திரிகைகள்தான் வன்முறையாகத் திரித்து எழுதுகின்றன!''

''பழிக்குப் பழி என்று கொலைகள் நடந்து கொண்டே இருந்தால் எப்படித் தீர்வுகாண முடியும்? சமாதானமாகப் பேசித் தீர்த்துக் கொள்ள முடியாதா?''

"பேச்சு வார்த்தைக்கு நாங்கள் தயார். அவர்கள் தான் தயாராக இல்லை. ஏனெனில் எந்தச் சூழ்நிலையிலும் அவர்கள் தங்கள் மேலாதிக்கத்தை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை!" என்றார்.

இந்தச் சூழ்நிலையில் பீஹாரில் உள்ள தலித்துகள் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அரசாங்கமே ஆயுதங்களை வழங்க வேண்டும் என்று கோரிக்கை வைத்திருக்கிறது பீஹார் மாநில சி.பி.ஐ.(எம்.எல்) விடுதலை முன்னணி. "இது சரியான அணுகுமுறைதானா?" என்று அக்கட்சியின் மாநில தலைமை அலுவலகப் பொறுப்பாளரான பிரபாத் குமாரிடம் கேட்டோம்.

''1995-லிருந்தே நாங்கள் இரண்டு கோரிக்கைகளைத்தான் வலியுறுத்தி வருகிறோம். ஒன்று: நிலச்சுவான்தார்களின் படையான ரண்வீர் சேனாவின் தலைவர் பரமேஷ்வர் சிங்கைக் கைது செய்ய வேண்டும். இரண்டாவது: ரண்வீர் சேனாவுக்கும் அரசியல் கட்சிகளுக்கும் (குறிப்பாக பி.ஜே.பி., லாலுகட்சியான ஆர்.ஜே.டி.) இடையிலான தொடர்பு பற்றி விசாரணை செய்ய வேண்டும். இதை யாருமே செய்யாத போது வேறு என்னதான் செய்ய முடியும்? தலித்துகள் கொல்லப்படுவதற்கென்றே பிறந்தவர்களா?

"ரண்வீர் சேனாவுக்குப் பதிலடி கொடுப்பதற்காகத்தான் கிராமங்கள் தோறும் 'ரக்ஷாதளம்' என்கிற தற்காப்புப் படையை ஆரம்பித்திருக்கிறோம். கடந்த ஜனவரியில் சங்கர்பிகா கிராமத்தில் 23 தலித்துகள் ரண்வீர் சேனாவால் கொலை செய்யப்பட்டதையறிந்து ரக்ஷா தள ஆட்கள் ஆயுதங்களோடு ஓடிவந்ததால்தான், ரண்வீர் சேனாவினர் 23 கொலைகளோடு நிறுத்திக் கொண்டு ஓடிப் போனார்கள்! ஆக, தலித்துகளின் தற்காப்புக்காகத்தான் நாங்கள் ஆயுதங்கள் கேட்கிறோமே தவிர, தாக்குதலுக்காக அல்ல!"

"செனாரியில் 'பூமிகார்' பிராமணர்கள் கொலை செய்யப்பட்டதற்கும் உங்கள் கட்சிக்கும் தொடர்பு இருக்கிறதா?"

''இல்லை. அதைச் செய்தவர்கள் எம்.சி.சி.(மாவோயிஸ்ட் கம்யூனிஸ்ட் சென்டர்)யினர். சமூக நீதிப் போராட்டம்-வர்க்கப் போராட்டம் என்கிற சித்தாந்தத்திலிருந்து அவர்கள் விலகிப் போய் ஒரு கூலிப் படை-கொள்ளைக்காரர்கள் என்கிற அளவுக்குக் காட்டுமிராண்டித்தனமானவர்களாகி விட்டார்கள். நாங்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. மேலும் நாங்கள் தற்காப்புக்காக ஆயுதமெடுப்பவர்களே தவிர, அப்பாவிகளைக் கொல்வதற்காக அல்ல. தைரியமிருந்தால் எங்களிடம் வந்து மோதுங்கள்; அப்பாவி தலித்துகளைக் கொல்ல வேண்டாம் என்றுதான் ரண்வீர் சேனாவுக்கும் நாங்கள் அறைகூவல் விடுக்கிறோம்" என்றார் அவர்.

இப்படி ஒவ்வொரு அரசியல் கட்சியும் ஒவ்வொரு விதமாகக் கூறுகிற நிலையில், முதல்வர் ராப்ரி தேவி என்னதான் சொல்லுகிறார்? அவரைச் சந்திப்பதற்காக அவரது தனிச் செயலாளரைப் பலமுறை தொடர்பு கொண்டோம். ஒருவழியாக ராமநவமியன்று காலை பத்து மணிக்கு வரச் சொன்னார்கள். சென்றோம்.

அடேயப்பா! பிரதமர் வீட்டில் கூட அத்தனை பாதுகாப்பு இருக்குமா என்கிற சந்தேகம்! நாங்கள் சென்றபோதுதான் லாலுவும் ராப்ரியும் கோயிலுக்குச் சென்று திரும்பினார்கள்.

கேள்விகளை எழுதித் தரச் சொன்னார்கள். தந்தோம். (எல்லாக் கேள்விகளுமே லாலுவுக்கும் ராப்ரிக்கும் எதிரானவைதாம்!) உள்ளே சென்று வந்த செய்தித் தொடர்பு உதவி இயக்குனர் எஸ்.எஸ்.ஷா, "இப்போது உங்களுக்குப் பேட்டியளிக்க முடியாது



''ஏண்டா நேத்து காலேஜுக்கு போகல?''

''எங்க சாரோட, படம் பார்க்கப் போனேன். அதான்!''

– ஆறுபாதி திருமால்



''எங்க அப்பாவோடதும், எங்க தாத்தாவோடதும் அவரோட அப்பா வோடதும் காதல் திருமணம்தான்.''

''அப்படியா?''

''ஆமாம். ஆனா என்னோடது மட்டும் விதிவிலக்கா ஆகப் போகுது.''

– பா. ஜெயக்குமார்



''உங்களை சுறுசுறுப்பாக்குவது எது?''

''என் பெண்டாட்டியோட ஜல்லி கரண்டி யும் பூரிக்கட்டையும்!''

– முத்து வெங்கிட ஆனந்த்

என்று சொல்லிவிட்டார்!" என்றார்.

"கேள்விகளை லாலு பார்த்தாரா?"

"பார்த்தார். பார்த்துவிட்டுத்தான் சொன்னார்."

''சரி, பரவாயில்லை. இருவரையும் போட்டோவாவது எடுத்துக் கொள்கிறோமே!''

மறுபடியும் உள்ளே சென்று வந்த ஷா, ''இன்று ராம நவமி விரதம் என்பதால் போட்டோ எடுக்கவும் மறுத்து விட்டார்!'' என்றார் வருத்தத்தோடு.

சரி, என்று நாங்கள் புறப்படும் சமயம், எங்களுக்கு அறிமுகமானார் அங்கு வந்த லாலு கட்சி எம்.எல்.ஏவான ஷாஹி. இவர் வடக்கு பீஹாரைச் சேர்ந்தவர்.

"இங்கே இப்போது யார் முதல்வராக ஆட்சி செய்கிறார் என்று கருதுகிறீர்கள்?" என்று நம்மிடம் கேட்டார் அவர்.

"லாலுதான்!" என்றோம் நாம்.

"ஆம். அந்தக் காலத்தில் ராஜாக்கள்தான் தமக்கு அடுத்த வாரிசை நியமிப்பார்கள். ஜனநாயகத்தில் அது நடக்குமா? பீஹாரில் நடந்திருக்கிறது. அதை லாலு சாதித்திருக்கிறார். ராப்ரியை ராஜினாமா செய்யச் சொல்கிறார்கள். ராப்ரியா இங்கு முதல்வர்? இந்தப் பொம்மை போனால், இன்னொரு பொம்மைதானே வர முடியும்? ஜனநாயகத்தில் நடக்க முடியாத ஒரு கேலிக் கூத்துதான் பீஹாரில் நடக்கிறது!" என்றவர், "இதையெல்லாம் நீங்கள் எழுதுவீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் இதையெல்லாம் நான் உங்களிடம் சொல்லவேயில்லையே!" என்றார் சிரித்துக் கொண்டே.

("எங்களுக்கும் வன்முறையாளர்களுக்கும் தொடர்பே இல்லை. ஜனநாயக சமாதான வழிதான் எங்கள் வழி!" என்று எல்லா கட்சி அரசியல்வாதிகளும் சொன்னாலும் உண்மை அதுவல்ல. அவர்களின் போஷாக்கால்தான் வன்முறையாளர்களும் கொலையாளர்களும் வளர்ந்து வருகிறார்கள்; அவர்களே விரும்பினாலும் அரசியல்வாதிகள் அவர்களைத் திருந்த விடுவதில்லை என்பதே உண்மை. இது பற்றிய விரிவான கட்டுரை அடுத்த இதழில்!)

பாட்னாவிலிருந்து: **இளங்கோவன், மு. சிவலிங்கம்.**

படங்கள்: **ராஜ்குமார்**

## ஒன் மேன் பட்டி மன்றம்

# இன்றைய வாழ்க்கை
# டிராஃபிக் ஜாம் ஆகாமல் இருக்க

**விரைவது அவசியமா?** | **சிக்னல் தடை...அவசியமா?**



சுதந்திரத்தின் பிரதிபலிப்பு - ஸ்பீடு. நாடி நரம்புகள் புடைக்க வண்டியை அதிவேகமாக ஓட்டுவது. மற்ற வண்டிகளை ஓவர் டேக் செய்வது. யாருக்கு தேவை சிக்னல்களும், ஸ்பீடு பிரேக்களும்?

வாழ்க்கை ஒரு நெடுந்தூரப் பயணம். நமது வேகமும் விரைதலும் ஒரு நொடியில் தப்பி விட்டாலும் - விளைவு பெரும் விபத்து. அதுவே பேராபத்து. ஸ்பீடு பிரேக்கர் என்பது எச்சரிக்கை சின்னம். "வருமுன் காப்பீர்" என்றுமே நன்மைதானே?

வேகமும் விவேகமும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். வாழ்க்கையில் வேகமாக செல்ல எண்ணினால்,அதற்கான பக்கபலமான விவேகமும் உங்களிடம் உண்டு. - சேமித்து வைப்பதைப் போல. சிட் மூலம் சேமிக்கத் தொடருங்கள். நேற்றைய தினத்திற்கு சிறந்தது. இன்றைய தினத்திற்கு உகந்தது. நாளைய தினத்திற்கு அத்தியாவசியமானது.

தமிழ் புத்தாண்டு சிட்டு விழா
ஏப்ரல் 5 - 30

**Ram Kaashyap**
Chits Private Limited

14/3, தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை - 600 017

**சீட்டு = தலை சிறந்த சேமிப்பு திட்டம், எக்காலத்திற்கும்.**

● க. நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? கீதை ஒரு இடைச்செருகலே என்று நெடுஞ்செழியன் கூறியிருக்கிறாரே...?

! வண்டிக்கு அச்சாணி என்பது இடைச் செருகல்தான். அது இல்லாமல் வண்டி ஓடுமா?

● க. சாந்தி, காட்பாடி.

? வக்கீல்கள், ஆடிட்டர்களுக்கு இருக்க வேண்டிய சமூகப் பொறுப்புகளாக எதைக் குறிப்பிடுவீர்கள்...?

! முறைகேடாக சொத்து சேர்ப்பதற்கும் வரி ஏய்ப்புச் செய்வதற்கும் உதவும் வகையில் ஆலோசனைகள் வழங்கக் கூடாது.

● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

? 'ஜெ' வைக் கைது செய்தால் தமிழகம் சுடுகாடாக மாறிவிடும். நானே பத்து பஸ்களைக் கொளுத்துவேன். நீங்களும் உங்கள் பகுதியில் உங்கள் பங்கைச் செய்ய வேண்டும்' என்று தாமரைக்கனி தன் ரத்தத்தின் ரத்தங்களைக் கேட்டுக் கொண்டுள்ளது பற்றி...?

! இதற்காக அவரை இன்னொரு முறை கைது செய்யலாம்.

● ராஜி, கமுதி.

? இந்த வருடம் பதிமூன்று பௌர்ணமிகள் வருவதால் ஏதேனும் விளைவுகள் உண்டா?

! உண்டே! கூடுதலாக ஒரு முழு நிலவை ரசிக்கலாம்!

● ப. கந்தசாமி, திருச்செங்கோடு.

? தற்போதைய தமிழ் எழுத்தாளர்களில் வாசகர்களின் இதயத்தைத் தொடுபவர்; மூளையைத் தொடுபவர் என்று யாரைச் சொல்லலாம்?



• போலி...



• ...பூகம்பம்!

! இதயத்தைத் தொட எத்தனையோ பேர் இருக்கிறார்கள். மூளையைத் தொட்ட ஒருத்தர் வாலண்டரி ரிடையர்மென்ட் வாங்கிக் கொண்டு விட்டாரே!



• கூஜா இறக்குமதி!



• மூளையைத் தொட்டவர்!

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? கற்பழிப்பு இன்சூரன்ஸ் திட்டம் தேவைதானா சார்...?

! ஆட்சேபணைக்குரிய அந்தச் சொல்லை மாற்றி விட்டார்கள் – 'தாக்குதல் – பலாத்காரக் காப்பீடு' என்று. ஆனால் தம் மீது தாக்குதல் நடந்தாலும் அதைப் பெண்கள் நிரூபித்து இன்ஷூரன்ஸ் பணத்தைப் பெறுவது பிரம்மப்பிரயத்தனமாகவே இருக்கும். அடிப்படையில் இப்படி ஒரு திட்டம் தேவை என்று கருதப்படுவது நம் நாட்டின் பண்பாட்டுக்கு வந்துள்ள அபாயத்தையே சுட்டிக்காட்டுகிறது.

● ந. வந்தியக்குமாரன், சென்னை – 41.

? ஆடிட்டர் தொழிலுக்குப் படித்தால் 'நல்லா வாங்கலாமா?' (அட சம்பளம்ங்க...!)

! தேறுவதே ரொம்பக் கஷ்டம். (அட, நான் பரீட்சையைச் சொல்றேனுங்க!)

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

? காங்கிரஸில் ஜனநாயகம் இல்லை. கூஜா தூக்கும் பழக்கம்தான் உள்ளது என்கிறாரே ரங்கராஜன் குமாரமங்கலம்?

! அதனால்தான் அங்கிருந்து வந்த அவர் அந்தப் பழக்கத்தை பி.ஜே.பிக்குள்ளேயும் புகுத்தி, பரவ வைத்து விட்டார் போலும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? சமீபத்தில் தங்கள் மனத்தை நோகடித்த சம்பவம்...?

! ஆந்திராவில் நடக்கும் குழந்தை ஏற்றுமதி அக்கிரமம்! அனாதைக் குழந்தைகள் – குறிப்பாகப் பெண் குழந்தைகள் – வெளிநாடுகளுக்கு தத்துக் குழந்தைகளாக அனுப்பப்பட, அவர்கள் உடல் உறுப்பு மாற்று அறுவைச் சிகிச்சைகளுக்காகப் பயன்படுத்தப்படுவதாகத் தெரியவந்துள்ளது!



• புதிய கீதை!



• 'பஷ்' கேட்டவர்!



• கடமையும்...



# சட்டமன்றத்தில் த.மா.கா பணி எப்படி?

● எஸ். ஏ. கேசவன், கோவில்பட்டி.

*? கசப்பான மெய் ஒன்றும் இனிப்பான பொய் ஒன்றும் கூறுங்களேன்..?*

! வட இந்தியாவில் பூகம்பம் – கசப்பான மெய்; 'புதுடெல்லியில் அரசியல் பூகம்பம்' என்ற ஜெ கூற்று அவருக்கு இனிக்கலாம் – ஆனால் பொய்! சோனியா பிடிகொடுக்கவில்லை.

● எஸ். சந்திரா, திருச்சி – 17.

*? பல்வேறு துறையினர் அமரர் கல்கிக்கு அஞ்சலி செலுத்தும் இந்த நேரத்தில் திரைப்படத் துறையினர் மட்டும் ஒதுங்கியிருப்பது ஏனோ? அவரது நாவல்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் திரைப்படமாகத் தயாரிக்கலாமல்லவா?*

! திரைப்படத்துறை ஏ, பி, சி சென்டர்களை மனத்தில் கொண்டு, வேண்டாத காட்சிகளைச் சேர்த்து கதைகளைக் கெடுக்காமலிருப்பதே மேல்! தொலைக்காட்சி, வானொலி துறைகள் ஓரளவுக்குச் சிறப்பாகச் செய்து வருகின்றன. லேட்டஸ்ட் : தூர்தர்ஷனில் சோலைமலை இளவரசி.

● கே. நாகராஜன், திருச்சி – 14. ❑

*? ஆண்டொன்றுக்கு நாநூறு கோடி ரூபாய் வரை நஷ்டத்தில் இயங்கும் தமிழக அரசு போக்குவரத்துத் துறையைத் தனியாரிடம் ஒப்படைத்து விட்டால் நஷ்டம் தவிர்க்கப்படுவதோடு, வரி மூலம் வருமானம் பெருகவும் வாய்ப்பு இருக்கிறது அல்லவா...?*

! தனியார் துறை மின் உற்பத்தி நிலையம் ஜி.எம்.ஆர். வாஸவி, திட்டமிட்டதற்கு 21 மாதங்கள் முன்னதாகவே தொடங்கப்பட்டிருக்கிறது! திறப்பு விழாவில் இதை முன்னுதாரணமாகப் பொதுத் துறை நிறுவனங்கள் கொள்ளட்டும் என்று பேசியுள்ளார் முதல்வர். ஆனால், அரசுத் துறைக்கே உரிய மெத்தனம் மாறுமா! மாறாவிட்டால், தனியாரிடம் விடுவது காலப்போக்கில் நிகழ்ந்தே தீரும்.

● கே. வி. ராமன், சென்னை – 73.

*? திரிபுரா மாநிலத்தில் ஒரு கிராமவாசி பட்டினியால் வாடி, பத்து கிலோ அரிசிக்காகத் தம் நான்கு வயது மகனை விற்றாராமே... தம் நாட்டில் உணவு உற்பத்தி போதுமான அளவுக்கு (self-sufficient) இருக்கிறது என்று எவ்வாறு கூற முடியும்?*

! உற்பத்தியில் பழுதொன்றுமில்லை. வாங்கும் சக்தியற்ற ஏழைகளின் எண்ணிக்கை குறைவதற்கு பதில் அதிகரித்து வருவதுதான் சோகம்!

● வீ. அருண்சொல்லரசு, திருமங்கலம்.

*? சட்டமன்றத்தில் தமிழ் மாநில காங்கிரசின் பணி பற்றி உங்கள் கருத்து என்ன?*

! கடமையுணர்ச்சியும் பொறுப்புணர்ச்சியும் மாறாமல் இயங்கி வருகிறார்கள். அழகிரி, சொக்கர் போன்ற உறுப்பினர்கள் உருப்படியாகப் பேசியிருக்கிறார்கள். சமீபத்தில் கூட கிராமப் பகுதிகளுக்குச் சென்று குறை கேட்டுள்ளனர். மக்கள் முறையீட்டை சட்டசபையில் சமர்ப்பிக்கப் போவதாகவும் நடவடிக்கை எடுக்கப்படாவிடில் மக்களுடன் இணைந்து போராடப் போவதாகவும் அறிவித்திருப்பது நல்ல யுக்தி.

> ❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
> கே. நாகராஜன்,
> B-2/393, கைலாசபுரம்,
> திருச்சி – 620 014.

**நீங்கள் கேட்டவை – தராசு**

திடீரென்று அரசு மருத்துவமனைக்கு சபரியைப் பார்க்கச் சென்றது பற்றி அப்பாவுக்குத் தெரிந்தால் என்னாகும் என்று தோன்றியது. அதில் என்ன தவறு? பாய்லர் சரிந்து கொதிக்கும் நீர் கையில் சிதறி, வேதனையோடு இருக்கும் ஒரு நோயாளியைச் சந்திப்பதில் என்ன தவறு? அப்படியானால், அதைத் தானே அப்பாவிடம் சொல்லி விடுவதே சரி என்று நினைத்தாள்.

பாட்டி இவளைப் பார்த்து ஆச்சர்யப் பட்டாள்.

"என்னடி.. காலேஜ் இல்லே?"

"ம். ஏதோ லீவ்..." என்றவள், "அப்பா எங்க பாட்டி?" என்றாள்.

"வெளிய போயிருக்கான். என்ன?"

"எங்கூட சபரினு ஒருத்தர்..."

"இந்தக் கவிதை அமைப்பு வச்சிருக்கானு சொன்னியே அவனா?"

பாட்டியின் கைகள் மல்லாட்டைப் பருப்புகளை உடைப்பதில் வேகமாக இருந்தன. எல்லாவற்றையும் வேகவைத்து வெல்லம் போட்டு இடித்து, உருட்டி கையில் கொடுப்பாள். மகாலெக்ஷ்மி அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

## தமயந்தி

"எப்போ உருண்டை உருட்டுவே பாட்டி?"

"என்னாச்சு அந்தப் பையனுக்கு?"

"அவங்க அம்மா அப்பா தங்கச்சினு எல்லோரும் கோவை குண்டு வெடிப்புல இறந்துட்டாங்க இல்லே? பிழைப்புக்காக இங்க ஒரு டீக்கடை வச்சு நடத்திட்டு, படிச்சிட்டும் இருக்கார். இன்னைக்கு காலைல, பாய்லர் கைல சரிந்து கை பூரா வெந்து போச்சு பாட்டி."

பாட்டி மல்லாட்டை உடைப்பதை நிறுத்தி, "ச்சச்சசோ" என்றாள்.

"அதான் லீவு விட்டுட்டாங்களா?"

"அதில்ல பாட்டி. லீவெல்லாம் விடுறதுக்குக் காரணம் இருக்கா என்ன? அது வேற பாட்டி. எதுக்குனு தெரியாம வர்ற விடுமுறை. இப்ப, பிரச்னை என்னான்னா..."

"என்னடி? என்னாச்சு?"

"நானும் தமிழும் ஆஸ்பத்திரில போய், சபரியப் பார்த்தோம் பாட்டி" என்றாள். கைகள் வேர்க்கத் தொடங்கியது.

"எப்படிருக்கிறான் அந்தப் பையன்?"

"அவர் நாளைக்கு டிஸ்சார்ஜ் ஆறார். முழங்கை வரைக்கும் கொப்பளமாயிருச்சு. பிரச்னை என்னான்னா..."

"பணமா? இல்ல, கை ஆறாதாம்மா?"

"இல்ல பாட்டி..." என்றவளுக்கு, அவனுக்குப் பணத் தேவை இருக்குமா என்பதைக் கேட்க மறந்ததை நினைத்து, தன்னையே வைது கொண்டாள்.

"வந்து... நான் ஆஸ்பத்திரிக்குப் போய் வந்ததைப் பத்தி அப்பாட்ட..."



"அவன் என்னடி சொல்வான்? ஆபத்து நேரத்துல மனுஷர் ஒருத்தருக்கு ஒருத்தர் உதவியா இல்லன்னா, என்னடி பிரயோஜனம் மகா? அதுவும், கஷ்டம்னா என்னன்னு உணர்ந்த நம்மால, கஷ்டத்துல இருக்கறவனைக் கவனிக்காம, தாண்டி போக முடியுமா? போய்ப் பாரு. தெனம் பாரு."

"பாட்டி..."

"அப்படி ஏன் பாக்கறே? நீ சிரிக்கறது எனக்கு சந்தோஷமாருக்கு. நீ இந்த வீட்டுக்குத் திரும்பி வந்தப்போ, மனசு நிறைய புழுக்கத்தையும் பாரத்தையும் கொண்டு வந்திருக்கேனு, உன் முகம் சொல்லுச்சு. இப்ப சமீப காலமா, நீ சிரிக்கறே. நீ சிரிக்கறதால, நாங்களும் சிரிக்கிறோம்."

மகா ஆணி அறைந்தாற்போல் உட்கார்ந்திருந்தாள். பாட்டி சொல்வதும் உண்மை தான். அப்பா முகத்தில் இறுக்கம் குறைந்திருக்கிறது. மருத்துவரிடம் போய் வருகிற முறைகள் குறைந்துள்ளன. நீண்ட நாட்களுக்கு அப்புறம், அம்மா போன வாரம் பால் பாயசம் வைத்தாள். "அண்ணாமலை நாதனே, எல்லாரையும் நல்லா வை" என்று வாய்நிறைய வேண்டினாள்.

பாட்டி சொன்னது போல் சபரிக்குப் பணத் தேவை ஏதுமிருக்குமானால், எப்படியாவது அப்பா மூலம் உதவி செய்ய வேண்டும். அவனிடம் இப்போதே கூட போய், "பணம் வேணுமா?" என்று கேட்கலாம். ஒரு சைக்கிள் வாங்கிக் கொண்டால் வசதி. அப்பாவிடம் கேட்க வேண்டும்.

# கறுப்பு வெள்ளைக் கனவுகள் 3



**ம**த்தியானம் சாப்பிட்டான பிறகு, அவளையறியாமலே தூக்கம் அவளைப் போர்த்திக் கொண்டது. கனவுகள் ஏதுமில்லாத, திசை தப்பாத தூக்கம். தூங்கி எழுந்த போது, அப்பா வாசலில் உட்கார்ந்திருந்தார். பாட்டி சபரியைப் பற்றி சொல்லியிருக்க வேண்டும். இவளைப் பார்த்ததும், "யாரோ பையனுக்குக் கையில வெந்நீர் சிதறிருச்சாமே?" என்றார்.

"நம்ம சபரிதான்ப்பா..."

"ஓ!"

"அவருக்குப் பணத்தேவை எதுவும் வேணுமானா, நம்மளால கொடுத்து உதவ முடியுமாப்பா?" என்றாள் தயக்கத்தினூடே.

"பார்ப்போம்" என்று அவர் எழுந்தார்.

"அப்பா..."

"என்னம்மா மகா? சுத்தி சுத்தி வர்றே?"

"ஒரு சைக்கிள் இருந்தா வசதியாயிருக்கும்."

அவர் ஒரு நிமிஷம் நிமிர்ந்து பார்த்தார். புருவங்கள் சுருங்கின. பிறகு, புன்னகைத்தார்.

"சரிம்மா."

சைக்கிள் இருந்தால் சபரியை உடனே பார்க்கப் போயிருக்கலாம். இப்போது கூடப் பார்க்கப் போயிருக்கலாம். யாருமற்றவன். பாவம். வலியும் வேதனையும் மறக்க முடியாத ஒரு மனநிலையில் தான் அவன் காலையில் இருந்தான். கைகள் கறுத்து, கொப்பளங்கள் எழும்பியிருந்தன. எத்தனை வேதனையிருக்கும்?

மகா முகம் கழுவி பொட்டிட்டுக் கொண்டாள். பாட்டி அடுக்குமல்லிச் சரம் கோத்திருந்தாள். அதைத் தலையில் வைத்துக் கொண்டாள். முதல் முறையாக, வெளியே போகும் போது பூ வைக்கிறோம் என்கிற எண்ணம் மனத்தில் தோன்ற, கண்ணாடியில் முகம் பார்த்தாள். அதே மகா. பழைய மகா. அவளுள் சந்தோஷ வெடிப்புகள் தோன்றின.

"தமிழ் வீடு வரை போயிட்டு வர்றேன் பாட்டி."

"சரி மகா. பாத்துப் போ."

தெருவில் இறங்கி நடந்த போது கால்கள், அவளை மருத்துவமனைக்கே இட்டுச் சென்றன. இவளைப் பார்த்த சபரி ஆச்சர்யப்பட்டது கண்களிலேயே தெரிந்தது.

"வாங்க மகா."

"எப்படிருக்கு?"

"இப்ப, கொஞ்சம் பரவால்லே. வலி நிவாரணிகள் வேலை செய்யுதுனு அர்த்தம். இல்லே?"

அவன் பேசாது உட்கார்ந்திருந்தான்.

---

**"எங்க தலைவர் எப்பவுமே அடுத்தவங்க கையை எதிர்பார்க்க மாட்டார்...!"**

**"அப்படியா...?"**

**"ஆமாம். கூட்டத்துல பேசும் போது கூட அடுத்தவங்க கை தட்டட்டும்னு எதிர்பார்க்காம அவரே கையைத் தட்டிக்கு வார்னா பாரேன்...!"**

**— ஸ்ரீதர்**



---

அவன் பாரதிதாசனின் கவிதைப் புத்தகத்தை வைத்திருந்தான்.

"வாசிக்க முடியுதா?"

"கைரண்டும் இல்லைனாலும், சிரத்தையெடுத்து வாசிச்சிருவேன்னு தோணுது. கண் போனாதான் கஷ்டம். வேற யார் வாசிச்சாலும், நாமளா வாசிச்சு உள்வாங்கிக்கிற சுகம் வருமா?" என்றவன், அவளைப் பார்த்து, "நீங்க சாயங்காலமும் வருவீங்கன்னு நெனக்கலை மகா. ஆனா, நீங்க வந்தது மகிழ்ச்சியாயிருக்கு. நமக்குனு யாராவது இருக்காங்கங்கிற உணர்வு, சுகமானது இல்லையா?"

"உங்களுக்குப் பண உதவி ஏதும்.... அதைக் கேட்கத்தான் வரணும்னு இருந்தேன்."

"இருக்கு மகா. நன்றி. அப்புறம்... பூச்சரத்தோட உங்க முகம் எடுப்பா இருக்குது மகா."

"................"

"கண்ணதாசன் எழுதுவார்... கணவனை இழந்தப் பெண்கள் தலைலருந்து பூக்களை எடுப்பது, செடியிலிருக்கும் பூக்களைக் கொய்ற மாதிரினு. கல்கியோட 'கேதாரியின் தாயார்' வாசிச்சிருக்கீங்களா?"

"ம். விதவைப் பெண்களின் சடங்குகள் பற்றிச் சொல்லுமே. அந்தக் கதைதானே?"

"ம். அதேதான் மகா."

மகா எழுந்தாள். "நான் கிளம்பட்டா? நாளை பார்க்கலாம்."

"சரி, மகா. கல்லூரில குறிப்புகள் ஏதுமிருந்தா தந்துதவ முடியும்னா, தாங்க. இன்னும் பதினைஞ்சு நாளைக்கு அந்தத் திசைக்கு வர முடியும்னு தோணலை."

"நான் நாளை சாயங்காலம் உங்க அறைக்கு வந்து தர்றேன்."

மறுநாள் சாயங்காலம், புத்தகங்களோடும் குறிப்பேடுகளோடும் அவன் அறைக்குப் போன போது, சபரி முகம் தெளிந்திருந்தான். சில குறிப்புகளை அவனுக்காக எழுதிக் கொடுக்க வேண்டியிருந்தது. டீக்கடைக்கு முழு நேரமும் ஆள் போட்டிருந்தான்.

அடுத்த வாரம் அப்பா சைக்கிள் வாங்கிக் கொடுத்தார். ஓரிடத்திலிருந்து இன்னொரு இடம் போய்வர அது பெருமளவு உதவி செய்தது. ஆனாலும், அடிக்கடி சபரியின் அறைக்கே திரும்பத் திரும்ப சைக்கிள் இட்டுச் செல்வதையும் அவளால் உணர முடிந்தது. கூடவே, செல்வாவின் நினைவு

# ALL INDIA INSTITUTE OF Career STUDIES

29, Lazarus Church Road, R.A. Puram, Chennai - 600 028.
Phone : 044-4956833/4933210, Fax : 044-4952692/4933259.
E-mail:aiicas@hotmail.com

## SIX MONTHS DIPLOMA COURSES

- International Business Management
- Business Organisation & Management
- Personnel Management & Industrial Relations
- Labour Welfare & Labour Laws
- Human Resources Development
- Financial Management
- Networking & Internet Application
- Management Information Technology
- Management Information System
- Computers in Office Management
- Computer Application
- Hospital Administration
- Teacher Training Education
- Educational Management
- International Safety Management
- Foreign Trade Management
- Hotel Front Office Operation
- Food & Beverage Management
- Housekeeping Operation
- Food Production Management
- Hire purchase & Leasing Finance

## ONE YEAR DIPLOMA COURSES

- Business Management
- Business Administration
- Marketing Management
- Total Quality Management & QS 9000/ISO 9000
- Materials Management
- Export & Import Management
- Banking & Insurance Management
- Hotel/Hospitality Management
- Catering Management
- Travel & Tourism Management

**AIICAS** offers **SIX MONTHS** and **ONE YEAR DIPLOMA COURSES** by Correspondence. (Distance Education Programme) Six Months Diploma has 4 Written Papers and One Year Diploma has 8 Written Paper (Two Semester - Each Semester 4 papers)

**TOTAL FEES :** Rs 1900/- for One Year Payable in Two Instalments (Rs. 1000 & 900). Rs. 1000 - for Six Months.

**EXAMINATION :** Will be held at more than 60 Centers all over India.

**ELIGIBILITY :** Matriculation Passed or above - Minimum Age : 16 Years and above.

**APPLICATION AND PROSPECTUS :** Send Rs. 15/- Stamped Envelope to the above Institute.

---

ஓம் நமசிவாய



# நாடி ஜோதிடர் R. ராமலிங்கம் B.A.

# ஸ்ரீ அகத்தியர்

## நாடி ஜோதிட நிலையம்

**எதிர்கால பலன்கள்**







பழங்காலத்தில் வாழ்ந்த சப்தரிஷிகள், பதினெட்டு சித்தர்கள் வான் இயல், மருத்துவம், ஜோதிடம் ஆகியவற்றில் உள்ள இரகசியங்களை வாழையடி வாழையாக வரும் மனித சமூகம் தெரிந்து கொள்வதற்காக வேண்டி ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்துள்ளனர். அவ்வாறு எழுதப்பெற்ற ஓலை சுவடிகள் மூலம் கை பெருவிரல் ரேகையைக் கொண்டும், ஜாதகத்தைக் கொண்டும், பிறப்பு முதல் ஆயுள் வரையிலான கல்வி, தொழில் வியாபாரம், உத்யோகம், கலைப்பணி, பொதுப்பணி, திருமணம், திருமணத்தைப் பற்றிய விவரங்கள், குழந்தைகள், சொத்துக்கள் அடையும் காலங்களையும் அவற்றின் நிவர்த்திகளையும் சுகர் அகத்தியர் சிவவாக்கியர் வசிஷ்ட்டர் போன்ற மகரிஷிகளால் எழுதப்பெற்ற ஓலைச் சுவடிகள் மூலம் படித்து எழுதியும் தருகிறோம்.

எண் 6, லேக் ஏரியா, 2வது குறுக்குத் தெரு.
(பத்ம சேஷாத்திரி (ஸ்கூல்) அருகில்,
வள்ளுவர் கோட்டம், நுங்கம்பாக்கம், சென்னை – 600 034.

**Ph. 8264665**

**மண்ணில் நல்லவண்ணம் வாழ எங்களை நாடி வாருங்கள் நன்மைகள் பெறுவீர்**



''என்ன இது, அந்த ஜோசியரிடம் யார் போய்க் கையைக் காட்டினாலும் உங்களுக்கு லாட்டரியில அதிர்ஷ்டம் அடிக்கும்னு சொல்றார்?''

''அந்த ஜோசியரோட மகன் தெரு முனையில லாட்டரிச் சீட்டு விற்கிறாரே, அதனால தான்.''

– ஆர். சித்ரா



''என்னிடம் உள்ள கெட்ட பழக்கம் ஏழைகளுக்கு அள்ளி அள்ளி வழங்குவது தான்!''

''மொட்டையா சொல்லாதீங்க தலைவரே! உறுதிமொழிகளைன்னு சேர்த்துச் சொல்லுங்க!''

– கு. அருணாசலம்

''பொண்ணோட அப்பா தொலைக்காட்சியில வேலை பார்க்கிறாராம்.''

''அதுக்காக மந்திரத்துக்கு பதிலா விளம்பரம் ஓதச் சொல்றது நல்லா யில்லே!''

– குடந்தை. கே. ஆர். ரவிக்குமார்



கள் மங்கி வருகிறதோ என்கிற சந்தேகமும் வந்தது. ஏதோ ஒரு குற்றவுணர்வு, இரவு தூக்கத்தை மறக்கச் செய்தது. தள்ளாடும் ஓடம் போல மனத்தைத் தத்தளிக்க வைத்தது. ஒரு வாரம் போல சபரியைப் பார்ப்பதைத் தவிர்க்க முடிவெடுத்தான். ஒரு இடைவெளிக்கு அப்பால் நின்று கொள்வது, நட்பைத் தக்கவைத்துக் கொள்ளும்.

என்றாலும், அவனைச் சந்திக்காமலிருக்கும் நாட்களில் அவன் பற்றிய நினைவு அதிகரித்ததை மறுக்க முடியவில்லை. அவ்வப்போது, தமிழ் அவனைச் சந்தித்ததாகச் சொல்லும்போது கூட, மேற்கொண்டு எதுவும் கேட்காது மனத்தில் கடிவாளம் போட்டான். ''நீ சபரியைப் பார்க்கப் போகலையாமே மகா? சபரி விசாரிச்சான்'' என்று தமிழ் பேச்சுவாக்கில் சொன்னது, அன்று தூக்கத்தைக் கெடுத்தது.

மனத்தளவிலான போராட்டங்கள், கொடுமையானவை என்று உணர்ந்தான். காற்றடித்த செடியாய் அலைக்கழிப்பது எது? காதலா? இல்லை. அதில்லை. செல்வாவை எப்படி நான் ஒதுக்க முடியும்?

அடுத்த நாள் மாலை, கல்லூரி முடியும் சமயம், சபரி வாசலில் நண்பர்களோடு பேசிக் கொண்டிருந்தான். இவனைப் பார்த்ததும் முன்னேறி வந்தான். இவனது கால்கள் சைக்கிள் பெடல் போலிருந்தன. கிளம்புவதற்கு எத்தனிக்கும் போது, சபரி ஹேண்டில்–பாரில் கைகளை வைத்தான்.

''உங்களைப் பார்க்கத்தான் வந்தேன் மகா. வரவே இல்லையே? உடம்பு நல்லாருக்கு இல்லே?''

''ம்.''

''என் கை நல்லா ஆறிடுச்சு மகா.''

எப்படியிருக்கிறான் என்று கேட்டிருக்கலாம். சட்டென்று அறுத்துப் போட்டு விட்டு, ஓடிப் போகிற விலங்கின் பிணைப்பு போல இருந்த நட்பல்லவே? மகா அவனைப் பார்த்துப் புன்னகைக்க முயன்றான்.

''மனசுல இந்தப் பத்து நாளா பெரிய போராட்டம் மகா. சும்மா இருக்கிற மனசுல சாத்தான் விளையாடுதோனு நினைச்சேன். அப்படி இல்லைனு தெரிஞ்சிது. கவிதைகள், பாடங்கள் போக உங்ககிட்ட என் மனசையும் பரிமாறிட்டேன்னு தோணுதுங்க.''

அவன் அவனை ஆவலுடன் பார்த்தான். ஒரு பெரிய அலை மனக்கரையோரம் வந்து மோதியது.

(தொடரும்)




1999 ஏப்ரல் 11
வெகுதான்ய பங்குனி 28
மலர் : 57
இதழ் : 37

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# சென்றார், பார்த்தார், தோற்றார்!

நூற்றுக்கணக்கான உயிர்களை பலிகொண்டிருக்கிறது வடமாநிலங்களில் நிகழ்ந்த பூகம்பம். இயற்கையின் சீற்றத்தால் விளைந்த இந்தத் துயர நிகழ்ச்சியை சொற்சிலேடையாக்கி, சோனியாவுடனான தமது சந்திப்பை 'அரசியல் பூகம்பம்' என்று ஜெயலலிதா வர்ணித்திருப்பது அவரது உள்ளத்தின் வறட்சியைத்தான் காட்டுகிறது!

அ.தி.மு.க. தலைவியின் டெல்லி பயணம் படுதோல்வியடைந்தது என்று சொன்னால் அவர் ஒப்புக் கொள்ளப் போவதில்லை. எனினும், ஒவ்வொரு கட்ட தோல்வியிலும் தமது நிலையை ஜெ எப்படி மாற்றிக் கொண்டார் என்பதைப் பார்த்தால் அவரது பரிதாபகரமான வீழ்ச்சி தெரியும்!

டெல்லி போய் இறங்கிய தினத்தில் பிரதமருடன் சிரித்தபடி போட்டோவுக்குப் போஸ் கொடுத்தார் ஜெயலலிதா. 'சோனியாவைச் சந்திக்கிற உத்தேசமெதுவுமில்லையே...' என்று பத்திரிகையாளர்களிடம் கைவிரித்தார்.

பி.ஜே.பி. கூட்டணிக் கட்சிகளின் ஒருங்கிணைப்புக் குழு கூட்டத்தில், விஷ்ணு பகவத் விவகாரத்தை விசாரிக்க பார்லிமெண்டரி குழு அவசியமில்லை என்று தீர்மானமாகியது. பாதுகாப்பு அமைச்சர் பெர்னான்டஸை எப்படியும் பதவியிறக்குவது என்ற தீர்மானத்துடன் டெல்லி சென்ற ஜெயலலிதாவுக்கு இந்த முடிவு முதல் தோல்வி. உடனே 'சோனியா வந்தால் சந்திக்கத் தயார்' என்ற நிலையை மேற்கொண்டார் ஜெ!




அ.தி.மு.க., காங்கிரஸுடன் கைகோக்கத் தயார் என்று இவ்வாறு ஜெயலலிதா மறைமுகமாக உணர்த்திய பின்னரும் பிரதமர் மனம் மாறாது உறுதியாய் இருந்திருக்கிறார்.

'பெர்னான்டஸைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும்' என்ற ஜெயலலிதாவின் வெளிப்படையான வற்புறுத்தலுக்கு இணங்க மறுத்திருக்கிறார்.

விஷ்ணு பகவத் விவகாரம் தொடர்பான கோப்புகளுடன் பெர்னான்டஸ் ஜெயலலிதாவைப் பார்க்கப் போக, அவர் அவற்றைப் பார்க்காமலே தமக்கு விவகாரத்தின் ஆழ அகலங்கள் தெரியுமென்று முகத்திலடித்திருக்கிறார்! பகவத் மீண்டும் பதவியில் அமர்த்தப்பட வேண்டும் என்றும் பெர்னான்டஸ் விலக்கப்பட வேண்டும் என்றும் மீண்டும் வலியுறுத்தியிருக்கிறார்.

அப்போதும் பிரதமர் அசைந்து கொடுக்கவில்லை...

பார்த்தார் ஜெயலலிதா... 'சோனியாவை சந்திக்கத் தயார்' ஆகிவிட்டார். சுப்ரமண்யம் சுவாமி அளித்த தேநீர் விருந்துக்கு முக்கிய பி.ஜே.பி தலைவர்களுக்கு அழைப்பு இல்லை! ஏராளமான காங்கிரஸ்காரர்கள் கலந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுள் சிலர் ஜெயலலிதா துதியும் பாடியிருக்கிறார்கள்.

பத்து நிமிடங்கள் வந்திருந்து டீ பார்ட்டியை 'கௌரவித்த' சோனியாவுடன் கைகுலுக்கி போட்டோவுக்குப் போஸ் கொடுத்திருக்கிறார் ஜெ!

'தேநீர் விருந்துக்குச் சென்றது வெறும் உபசாரத்துக்காகத்தான்' என்று சோனியா கூறிவிட, 'அரசியல் பூகம்பம்' என தாம் அறிவித்த சந்திப்பில் மிகச் சிறிய நிலநடுக்கம் கூட இல்லை என உணர்ந்திருக்கிறார் ஜெயலலிதா.

'அப்படியொரு பூகம்ப உவமையைச் சும்மா விளையாட்டுக்காகப் பயன்படுத்தினேன்.. எங்கள் சந்திப்பு வெறும் மரியாதை நிமித்தமே...' என்று மறுநாளே மாற்றிப் பேசியிருக்கிறார்.

பிரதமரிடம் தாம் பேசிப் பெற நினைத்த பேரங்கள் ஒவ்வொன்றாகப் பிசுபிசுத்துப் போக, 'சோனியா சினேகம்' என்கிற அஸ்திரத்தை ஜெயலலிதா நாடியிருப்பது மிகத் தெளிவாகத்




தெரிகிறது.

இப்போதைக்கு சோனியாவும் பிடிகொடுத்துப் பேசத் தயாராயில்லையென்பதால் வெறுங்கையை வீசிக் கொண்டு திரும்பி வந்திருக்கிறார்!

ஆடிட்டர் தாக்குதல், சட்டசபையில் தாமரைக்கனி விவகாரம் போன்றவற்றினால் எழுந்த அதிர்ச்சி அலைகளைச் சமனப்படுத்தி தமது 'பராக்கிரமத்தை' நிரூபிக்கும் முயற்சிகளைத்தான் ஜெ டெல்லி பயணத்தில் மேற்கொண்டார் என்பது அரசியல் கணிப்பு. ஜெயலலிதாவின் அரசியல் சரித்திரத்தைக் கூர்ந்து கவனிப்பவர்கள் அவருடைய இந்த 'கவனம் திருப்பும்' அணுகுமுறையை நன்கு அறிவார்கள்.

இம்முறை தோல்வியை மறைக்க அவர் மேற்கொண்ட முயற்சிகளும் தோல்வியிலேயே முடிந்திருக்கின்றன. அவற்றை மூடி மறைக்க வளமான கற்பனை அறிக்கைகளை வெளியிடுவதோடு, புதிய மிரட்டல் முயற்சிகளையும் ஜெயலலிதா மேற்கொள்ளக்கூடும்.

இத்தகைய அறிக்கைகளையும் திசை திருப்பும் முயற்சிகளையும் கண்டு மக்கள் ஏமாந்துவிடக் கூடாது என்பது மிகவும் முக்கியம். அதனினும் முக்கியம், அவருடன் கைகுலுக்கிப் போயிருக்கும் சோனியா காந்தி கனவிலும் அதிமுக கூட்டணி குறித்துச் சிந்திக்கக் கூடாது என்பதே!

தமிழகத்திலும் இந்தியாவிலும் அரசியல் நிலைமையை மிக அபாயகரமானதாக்கக்கூடியது அந்தக் கூட்டணி முயற்சி. மேலும், தற்போது பி.ஜே.பி ஆட்சி ஜெயலலிதாவிடம் படுகிற பாட்டை நாளை காங்கிரஸ் பட வேண்டியிருக்கும். இந்த உண்மை சோனியாவுக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லை. ஆனால், ஜெயலலிதாவை 'சத்தியமேவ ஜெயலலிதா' என்று துதிக்கும் அளவுக்குச் சில காங்கிரஸ் தலைவர்கள் இறங்கியிருக்கிறார்களே! இப்படிப்பட்ட முதுகெலும்பற்ற அசத்திய சக்திகளைத்தான் ஜெயலலிதா வலைவிரித்துத் தேடிக் கொண்டிருக்கிறார். வலையில் விழாமலிருப்பது சோனியாவின் சாமர்த்தியம். ●

# ஏ.எஸ்.ஆர் அனுப்பிய

நுங்கம்பாக்கம் லேடீஸ் ரிக்ரியேஷன் கிளப் என்று ஒரு மாதர் சங்கம் இயங்கி வந்தது. என்னைப் போலப் பல இல்லத்தரசிகள் அதில் உறுப்பினர்களாக இருந்தனர். வழக்கமான மாதர் சங்கம் போலத்தான் எங்கள் சங்கமும் செயல்பட்டுக் கொண்டிருந்தது. உபரியாக நாங்கள் ஒரு நூல் நிலையமும் நடத்தி வந்தோம். ஒய்.ஜி.பி., அவருடைய சகாவான பட்டு இருவரும் நாடகக் குழு நடத்தி வந்தார்கள் என்பதால், எங்களுக்கும் மேடை நாடகத்தின்பால் ஒருவித ஈர்ப்பு ஏற்பட்டது. அவர்கள் இருவரும் நாடகங்களை ரசிக்கும் ரசிகர்களாக மட்டுமில்லாமல், நாடகத்தில் நடிக்க வேண்டும் என்கிற ஆர்வத்தையும் எங்கள் மாதர் சங்க உறுப்பினர்களிடையே ஏற்படுத்தி விட்டார்கள். விளைவு? எங்கள் மாதர் சங்கத்தின் ஆண்டு விழா போன்ற சமயங்களில் நாங்களும் நாடகங்கள் போட்டால் என்ன என்ற எண்ணத்தை ஏற்படுத்தியது.

ஒரு தடவை, லேடீஸ் கிளப் சார்பில் நாங்களும் நாடகம் ஒன்றை மேடை ஏற்ற ஆர்வமாக இருக்கிறோம் என்று ஒய்.ஜி.பியிடம் தெரிவித்தபோது அவர், "சபாஷ்! நானே உங்களுக்குப் பயிற்சி தருகிறேன். பேஷாக நாடகம் போடுங்கள்" என்று உற்சாகமூட்டினார். சிறிதும் பெரிதுமாகப் பல விஷயங்களில் அவர் எனக்கு அளித்த உறுதுணை, எங்கள் பி.எஸ்.பி.பி. பள்ளி தொடங்கவும் உதவியது.

என் மகன் ஒய்.ஜி. மகேந்திரா அப்போது டான் பாஸ்கோ பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். அந்தப் பள்ளிக்கூடத்தில் கற்பிக்கப்பட்ட கான்வென்ட் கல்வி முறை, மாணவர்களை படிப்பில் புத்திசாலிகளாக்கியது உண்மைதான். ஆனால், அங்கே இந்திய நாட்டுக் கலாசாரம், பண்பாடு இவற்றை ஒதுக்கித் தள்ளி விட்டு, மேற்கத்திய கலாசாரத்துக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. சில ஹிந்து பண்டிகைகளுக்குப் பள்ளிக்கூடம் லீவு விட மாட்டார்கள். லீவு போட்டு விட்டால் தண்டனை தான். இவையெல்லாம் எங்களுக்கு ஏற்புடையதாக இல்லை. பல்லைக் கடித்துக் கொண்டுதான் பொறுத்துக் கொண்டிருந்தோம்.

ஒரு தடவை, விநாயக சதுர்த்தி சமயத்தில் மகேந்திரா, ஒரு சிறிய சைஸ் பிள்ளையார் பொம்மையை ஸ்கூலுக்கு எடுத்துக் கொண்டு போய் விட்டான். வகுப்பு ஆரம்பிப்பதற்கு முன் அந்தப் பிள்ளையார் பொம்மையை வகுப்பறையில் வைத்து சில ஸ்லோகங்கள் சொல்லி நமஸ்காரம் செய்திருக்கிறான். இந்த விஷயம் பள்ளிக்கூட நிர்வாகிகளின் கவனத்துக்குக் கொண்டு செல்லப்பட்டது. பள்ளிக்கூடத்திலிருந்து சஸ்பெண்டு செய்து விட்டனர். இந்தச் சம்பவம், ஒய்.ஜி.பி.யை ரொம்பவே உசுப்பி விட்டது.

இந்தத் தருணம் பார்த்து, எங்களது மாதர் சங்கம் இயங்கி வந்த இடத்துக்குச் சொந்தக்காரர், இடத்தைக் காலி பண்ணச் சொன்னார். மிகக் குறுகிய காலத்தில் நாங்கள் இடத்தைக் காலி பண்ண வேண்டியிருந்ததால், வேறு இடம் கிடைப்பது அத்தனை சுலபமாக இல்லை. நானும், ஒய்.ஜி.பி.யும் கலந்தாலோசித்து ஒரு ஐடியா கொடுத்தோம். எங்கள் வீட்டு மொட்டை மாடியிலேயே ஒரு கொட்டகை போட்டு, அதையே லேடிஸ் கிளப் ஆபீசாக வைத்துக் கொள்ளுவது என்பதுதான் எங்கள் ஐடியா. உறுப்பினர்கள் அனைவரும் இதனை ஏற்றுக் கொண்டார்கள். எங்கள் வீட்டு மொட்டை மாடியில் ஒரு கீற்றுக் கொட்டகை போடப்பட்டது. நுங்கம்பாக்கம் லேடிஸ் ரிக்ரியேஷன் கிளப் அங்கே இடம்பெயர்ந்தது.

மகேந்திரா விவகாரத்தைத் தொடர்ந்து ஒய்.ஜி.பி. ஒரு கேள்வியை எங்கள் முன் வைத்தார். "உங்கள் மாதர் சங்கத்தில் எத்



• 'பாவம் பலராமன்' நாடகத்தில் நடித்தபோது....

# செங்கற்கள்!

தனையோ படித்த பெண் மணிகள் இருக்கிறீர்கள். பலரும் வேலைக்குச் செல்லாதவர்கள். இப்படி இருக்கும்போது, நீங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஏன் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்து நடத்தக் கூடாது? பள்ளிக்கூடத்தில் படிக் கிற மாணவ மாணவிகளுக்கு நீங்கள் என் னென்னவெல்லாம் கற்றுக் கொடுக்க வேண் டும் என்று எதிர்பார்க்கிறீர்களோ, அவற் றையெல்லாம் நீங்களே ஏன் சொல்லித் தரக் கூடாது?" என்று கேட்டார். இந்தக் கேள்வி எங்கள் மாதர் சங்கத்துப் பெண்மணிகள் அனைவரையும் சிந்திக்க வைத்தது. ஒய்.ஜி.பி. போட்ட விதை எங்கள் மனத்தில் வேரூன்றி முளை விட்டது.

பள்ளிக்கூடம் ஆரம்பிப்பது என்று முடிவாகி விட்டது. பள்ளிக்கூடம் நடத்த இடம் வேண்டுமே, என்ன செய்வது? அதற் கும் ஒய்.ஜி.பி.தான் வழி சொன்னார். 'முத லில் கிண்டர் கார்டன் வகுப்புதானே நடத் தப் போகிறீர்கள்? அதற்குப் பெரிசாக இட மெல்லாம் எதற்கு? நம் வீட்டு மொட்டை மாடியில், லேடீஸ் கிளப்புக்காகப் போடப் பட்டிருக்கிற கொட்டகையிலேயே வகுப்பை நடத்தினால் போச்சு!" என்றார். இதற்கும் சங்க உறுப்பினர்கள் மத்தியில் ஏகோபித்த ஆதரவு.

அப்போது சென்னை மாநகரத்தின் மேயராக இருந்தவர் திருமதி. தாரா செரி யன். அவரை சிறப்பு விருந்தினராக அழைத் தோம். ஒரு மாதர் சங்கம், கல்விக்கு முக் கியத்துவம் கொடுத்து ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கிறது என்று அறிந்தபோது, அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். எங்கள் வீட்டு மொட்டை மாடியில் திருமதி. தாராசெரி யன் குத்துவிளக்கு ஏற்றி வைக்க, நுங்கம் பாக்கம் லேடிஸ் ரிக்ரியேஷன் கிளப் சார்பில் கே.ஜி. வகுப்புடன் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டது. மொத்தம் பதிமூன்று மாணவர்கள். என் இரண்டாவது மகன் ராஜேந்திரா உட்பட!

கிண்டர் கார்டன் குழந்தை களுக்கு மற்ற பள்ளிக்கூடங்களில் சொல்லிக் கொடுப்பது போலவே ஏ,பி,சி,டி, ரைம்ஸ், ஒன், டூ, த்ரீ... போன்றவை தவிர, நம் குழந் தைகளுக்கு நம் கலாசாரம், பண் பாடு சம்பந்தமாக என்னென்ன சொல்லித்தர வேண்டும் என்று ஆசைப் பட்டோமோ அவற்றையும் சொல்லிக் கொடுத்தோம்.

ராமாயணம், மகாபாரதம் போன்ற இதி காசங்கள், பண்புகளைச் சொல்லித் தருகிற புராணக் கதைகள், பஜன் பாடல்கள், ஸ்லோகங்கள், பாட்டு, டான்ஸ் என்று பல புதிய விஷயங்களையும் எங்கள் பள்ளிக் கூடக் குழந்தைகள் கற்றுக் கொண்டார்கள்.

ஆரம்பம் முதலே நாங்கள் ஒரு விஷயத் தில் மிகத் தெளிவாக இருக்கிறோம். பாடத் திட்டத்தைப் பொறுத்தவரை, கான்வென்ட் பள்ளிக்கூடங்களில் என்ன சொல்லித் தரப்படுகிறதோ, அதிலிருந்து துளியும் தரம் குறையாமல் சொல்லித்தர வேண்டும். அதே சமயம் இந்தப் பழம்பெரும் பாரததேசத்தின் மகான்கள் சொல்லித் தந்த பண்பாடு, மற் றும் கலாசாரத்தை சிறு வயது முதலே ஊட்டி வளர்க்கும்படியாகப் பள்ளி அமைய வேண்டும். அதை அன்று தொடங்கி, இன்று வரை நாங்கள் தொடர்ந்து நடைமுறைப் படுத்தி வரு கிறோம்.

திருமதி ஒய்.ஜி.பி

முதல் வருடம், பதிமூன்று மாணவர்களுடன் ஆரம்பித்த பள்ளிக்கூடத்தில் மறு வருடம், இன்னும் சில குழந்தைகள் சேர்ந்தார்கள். அப்படியே முதல் வகுப்பு அப்புறம் இரண்டாம் வகுப்பு என்று பள்ளிக்கூடம் வளர்ந்தது.

பள்ளிக்கூடத்துக்கு என்று தனியாக இடம் எங்கேயாவது கிடைக்குமா' எனத் தேட ஆரம்பித்தோம். ஒரு நண்பர் மூலமாக, நுங்கம்பாக்கம் லேக் ஏரியாவில் ஒரு இடம் (இப்போது வள்ளுவர் கோட்டத்தையொட்டி, எங்களுடைய மெயின் ஸ்கூல் இருக்கிறதே, அந்த இடம்தான்) இருப்பதாகக் கேள்விப்பட்டு, போய்ப் பார்த்தோம்.

நாலு கிரவுண்டு இடம். அது அரசாங்கத்துக்குச் சொந்தமான இடம்.

தலைமைச் செயலகத்தின் படிகளில் கால் கடுக்க ஏறி இறங்கினோம். ஒருவழியாக, வருடத்துக்கு ஒரு கிரவுண்டுக்கு ஒரு ரூபாய் வீதம் பதினைந்து ஆண்டு காலத்துக்கு நாலு கிரவுண்டு இடத்தை, எங்களுக்கு அரசாங்கம் குத்தகைக்குக் கொடுத்தது.

புதிய இடத்தில் சாதாரணமான முறையில் சுவர் எழுப்பி, மேற்கூரை போட்டு, வகுப்புகளை நடத்திக் கொண்டிருந்தோம்.

பள்ளிக்கூடத்துக்காக நல்ல கட்டடமில்லையே என்ற ஏக்கம் எங்களுக்கு இருந்தது. ஆனால், எங்கள் மாதர் சங்கத்தின் பொருளாதார நிலை பள்ளிக்கூடக் கட்டடம் கட்டும் அளவுக்கு பலமாக இல்லை. கட்டடம் கட்டப் பணம் திரட்ட வேண்டுமே!

**"உங்களுக்கு ஆபரேஷன் பண்ணியாகணும்னு சொன்னவுடனே திடீர்னு ஃபோனைக் கையில எடுக்கறீங்களே... வீட்டுக்குப் போன் பண்றீங்களா?"**

**"இல்லே... போலீஸுக்கு...!"**

– கே. டி. ஸ்ரீதர்



வேறு என்ன செய்திருப்போம்? ஒரு நாடகம் போட்டு நிதி வசூல் செய்ய முடிவானது.

'பாவம் பலராமன்'. இதுதான் அந்த நாடகத்தின் தலைப்பு. பட்டுதான் அதை எழுதினார். நான்தான் பலராமன் வேடத்தில் நடித்தேன். என் மனைவியாக நடித்தவர் யார் தெரியுமா? நடிகையர் திலகம் சாவித்திரி! பட்டுவின் மனைவியும், இப்போது என்னுடன் பள்ளியை கவனித்துக் கொள்கிறவருமான குமுதா உட்பட ஏழெட்டுப் பெண்கள் நடித்தோம். எதிர்பார்த்த அளவுக்கு நிதி வசூல் ஆனதில் எங்கள் அனைவருக்கும் ரொம்ப சந்தோஷம்.

நாடகம் மூலமான நிதி வசூல் தவிர, தனிப்பட்ட முறையில், வசதியான பிரமுகர்களை நேரில் போய்ச் சந்தித்து, பள்ளிக்கூடம் கட்டும் திட்டம் பற்றி எடுத்துச் சொல்லி நன்கொடை கொடுக்கும்படியும் கேட்டுக் கொண்டிருந்தோம்.

சிம்சன் அதிபர் அனந்தராமகிருஷ்ணனைப் போய்ச் சந்தித்தோம். விஷயத்தைச் சொன்னவுடன், "எவ்வளவு நன்கொடை வேணும்?" என்றார். "ஒரு வகுப்பு கட்டுவதற்கு ஐயாயிரம் ரூபாய் செலவாகும் என்று கணக்குப் போட்டிருக்கிறோம்" என்றவுடன்,

"அப்படியா? ஒரு கிளாஸ் ரூம் கட்ட நான் நன்கொடை தருகிறேன்" என்று மறு நிமிடம் ஐயாயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்தார்.

ஜெமினி கணேசனைச் சந்தித்தபோது, முதலில் தயங்கினாலும், சாவித்திரியின் சிபாரிசின் பேரில் நன்கொடையாக ஐயாயிரம் ரூபாய் கொடுத்தார். அவ்வளவு ஏன்? சாவித்திரி கூட ஐயாயிரம் ரூபாய்க் கொடுத்தார்.

அப்போது பிரபல நட்சத்திரமாய் விளங்கிய எஸ்.எஸ். ஆரைப் போய்ப் பார்த்து, நன்கொடை கேட்டபோது, "நான் வீடு கட்டிக் கொண்டிருக்கிறேன்! நன்கொடை கொடுக்க இயலாதே!" என்று சொன்னார். ஆனாலும் நான் விடவில்லை. "அப்படியெனில், ஐயாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள செங்கல் கொடுத்து உதவுங்கள். அதுகூட எங்களுக்கு உபயோகமாகத்தான் இருக்கும்" என்றேன். 'சரி' என்று சம்மதித்த எஸ்.எஸ்.ஆர். ஐயாயிரம் ரூபாய் மதிப்புள்ள செங்கற்களை நன்கொடையாக அனுப்பி வைத்தார்!

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# அக்னிசர்மா பக்கம்

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்க வசீகரம் வெளிப்படற வாரம். நண்பர், சொந்தக்காரங்கன்னு பலரும் உதவறதுக்குப் போட்டி போட்டுக்கிட்டு ஓடி வருவாங்க. விருந்து, கேளிக்கைன்னு உல்லாச மான நேரங்கள் கூடிவரும். புதுசா புடைவை, பேண்ட்-ஷர்ட்டுனு வாங்குவீங்க. பெரியவங்க ளோட பாராட்டும் கிடைக்கும். ஆனாலும் புது முயற்சிங்க எதுவும் இந்த வாரம் வேணாம். கணவன் - மனைவி உறவுல சிறுசிறு சலசலப்பு கள் வந்தாலும் வந்த வேகத்துலயே மறைஞ்சும் போயிடும். உடல் ஆரோக்கியத்தில் - குறிப்பா தந்தையின் உடல் நலத்துல அதிக அக்கறை காட் டுங்க.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எதிர்ப்புகள் அடங்கி, நீங்கள் நினைத்தபடி நடக்கும் வாரம். வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பங்கள் ஏற்படும். போட்டி - பந்தயங்களில் பங்கு கொண்டால் வெற்றி பெறுவதற்கான சான்ஸ் அதிமாவே இருக்கு. வெளிநாட்டுத் தொடர்பால சிலருக்கு நன்மைன்னா, வேறு சிலருக்கு வெளிநாட்டுக்குப் போறதுக்கான சான்ஸே இருக்கு. எழுத்து - பத்திரிகை தொடர் பான வேலையிலுள்ளவர்களுக்குச் செழிப்பான வாரம். புதிய பதவி, புரமோஷன், பட்டங்கன்னு கிடைக்கலாம். சிலர் வீடு, நிலம்னு சொத்துக்கள் ஏதும் வாங்கலாம். தொழிலதிபர்களுக்கு லாபம் கூடி உற்சாகம் பெருகும். எல்லோருக்குமே பண விஷயத்தில் அபிவிருத்தி தெரியும்.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

வெற்றிக்கான சந்தர்ப்பங்கள் உங்க வீட்டு வாசல்ல கியூவுல வந்து நின்னுக்கிட் டிருக்கு. நீங்கதான் பயன்படுத்திக்கணும். சிலருக் குத் திடீர்னு நல்ல திருப்பங்கள் வந்து சேரும். டாக்டர்கள் செய்யும் ஆபரேஷன்கள் டபுள் சக்சஸ் ஆகும். தோட்ட - சுரங்கத் தொழிலாளி களுக்கும் ஓகோ வாரம்தான். உத்தியோகஸ்தர் களுக்குப் பதவியுயர்வோ, பரிசு, பட்டங்களோ வந்து சேரும். சிலருக்குப் பொருள் சேர்க்கை இருக் கும். ஆனாலும் சிறுசிறு தொல்லைகளைத் தவிர்க்க முடியாது. குடும்பத்தில் சலசலப்புகள் ஏற்படும். பயணத்தைத் தவிர்க்கறதுதான் நல்லது. பத்திரிகையாளர்கள் பொறுப்போடும் உண்மை யோடும் எழுதணும். இல்லேன்னா, பெரிய சிக் கல்ல மாட்டிக்குவாங்க.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எடுத்த காரியங்கள் நிறைவேறும்; வெளிநாட்டி லோர்ந்து உற்சாகமான சேதி வரும்; குடும்பத்தில் நல்ல காரியங்கள் நடக்கும். இத்தனையும் இருந் தாலே மனகல சந்தோஷம் குதிபோடத்தானே செய்யும்! பண விஷயத்திலும் திருப்தின்னா கேட் கவே வேணாம். இத்தனைக்கும் மேல, சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கான சான்ஸும் இருக்கு. தொழிலதிபர்கள், வியாபாரிகளுக்கும் சந்தோஷ மான வாரம்தான். கலைத்துறையினருக்கு மட்டும் ரேஷன் மாதிரியான பலன்தான். கூட்டுத் தொழில் செய்யறவங்க உஷாரா இருக்கணும். வீடு, மனை, நிலம் வாங்கறதுக்கு இந்த வாரம் சரி யில்லை.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடுற வாரம் இது. அதனால எந்தக் காரியமானாலும் கடுமையா உழைச்சு ஜெயிச்சுக் காட்டுவீங்க. பொறியாளர்கள், மெக்கானிக்கு களுக்கு அமோகமான வாரம். சட்டம், காவல் துறையினருக்கும் சுபிட்சத்துக்குப் பஞ்சமில்லை. கலைத்துறையினருக்குப் பாராட்டு உறுதி. வியா பாரிங்க மட்டும் அகலக் கால் வைக்காம இருக் கணும். எல்லோருமே உடல் ஆரோக்கியத்தில் கவனம் காட்டணும். அரசு விவகாரங்களிலும் பண விஷயங்களிலும் உஷாரா இல்லேன்னா சங்கடங்களுக்கு ஆளாயிடுவீங்க. பேச்சுல நிதா னம் காட்டுங்க. உத்தியோகஸ்தர்கள் அஜாக்கிர தையா இருந்தா அதிகாரிங்க கிட்ட டோஸ் வாங்க வேண்டியிருக்கும்.

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பேச்சுல சாமர்த்தியமும் சாதுர்ய மும் பளிச்சினு வெளிப்படற வாரம். கூடவே உங்க வசீகரமும் வெளிப்படும். வியாபாரிகளுக்கு இது வளர்பிறை வாரம். பெண்களுக்கு நகை, புடைவைன்னு வாங்கற அதிர்ஷ்டம் இருக்கு. கவிஞர்களுக்குக் கற்பனை ஊற்று கங்கையாய்ப் பிரவேசிக்கும். வெளியூர் அல்லது வெளி நாட்டுத் தொடர்பால சிலருக்கு ஆதாயம் கிடைக்கும். எல்லோருக்குமே பண விஷயத்தில் அபிவிருத்தி தெரியும். ஆனாலும் குடும்பத்தில் ஊடல் வர லாம். அதால குழப்பம் கூட வரலாம். வேலை யாட்களால சில பிரச்னைகளும் வரலாம். எதிலும் அவசரமோ பதற்றமோ காட்டாதீங்க.

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

சூரியனும் ராகுவும் தவிர மற்ற கிரகங்களெல்லாம் உங்களுக்குச் சாதகமாவே இல் லீங்க. அதனால தடங்கலும், குறுக்கீடுகளும் வந்துக்கிட்டேதான் இருக்கும். அதனால எந்த

நடக்குமென்பார்



**துலாம் ராசிக் காரரான குஷ்புவுக்கு பயணத்தால ஏதோ அனுகூலம் இருக்கு!**

## ஏப்ரல்
## 7 முதல் 13 வரை

விஷயமானாலும் தீவிரமா யோசிச்சு முடிவெடுக்கறது அவசியம். பயணத்தால அனுகூலம் கிடைக்கற சான்ஸ் இருக்குன்னாலும் பயணத்துல எச்சரிக்கை அவசியம். கைமாத்து, ஸ்பெகுலேஷன் விஷயமெல்லாம் இந்த வாரம் வேணாம். பெண்களிடம் உஷாரா பழகாட்டி சங்கடத்துல மாட்டிக்குவீங்க. வியாபாரிகளும் தொழிலதிபர்களும் புது முயற்சிகளைத் தவிர்த்திடணும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

தெரிஞ்சவங்க, சொந்தக்காரங்க, பிரண்ட்ஸுங்கன்னு எல்லோருமே உங்களுக்கு உதவ ஓடி வருவாங்க. வியாபாரிகளுக்கு இது ஏறுமுக வாரம். எழுத்தாளர்கள், விஞ்ஞானம், பத்திரிகையாளர்களுக்கு முன்னேற்றம் உறுதி. அலுவலகப் பணியாளர்களுக்கு புரமோஷன் உறுதி. மருத்துவர்களுக்குப் பாராட்டுகள் குவியும். ஏஜெண்டுகளுக்கு அதிக கமிஷன் கிடைக்கும். குடும்பத்தில் குதூகலம் கொப்பளிக்கும். சுப காரியங்களில் கலந்துக்கற சான்ஸ் இருக்கு. வெளிநாட்டுப் பயணம் உங்களுக்கு லாபகரமாவே அமையும். பொருளாதாரம், பண விஷயம் திருப்திகரமா இருக்கும்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நீங்கள் சும்மா இருந்தாலும் 11-ம் இடத்துல இருக்கற செவ்வாய் சும்மா இருக்க மாட்டார். உங்க திறமையைப் பளிச்சினு வெளிப்படுத்துவார். எஞ்ஜினியர்களுக்கு ஆதாயமான வாரம். சட்டம், காவல் துறையினருக்கு வெற்றிகரமான வாரம்; சாதனைகள் செய்து பாராட்டுப் பெறுவார்கள். போட்டி பந்தயங்களில் வெற்றி கிடைக்கவே சான்ஸ் இருக்கு. வழக்கு கிழக்குன்னு ஏதும் இருந்தா இந்த வாரம் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். வீடு, நிலம், மனை விஷயங்களில் அளவோடு லாபம் கிடைக்கும். ஆனாலும் சனியும் புதனும் திருப்திகரமா இல்லாததால குடும்ப அமைதிக்கு பங்கம் வர்றதுக்கு சான்ஸ் இருக்கு.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரம் உங்க பக்கம் சாதகமா இருக்கறதால உங்க ஆற்றலும் செல்வாக்கும் அமோகமா வெளிப்படும். அரசியல்வாதிகள், நிர்வாகத் துறையினருக்கு 'பேஷ் பேஷ்' வாரம். வியாபாரிகளுக்குக் கூடுதல் லாபம் உறுதி. இலக்கியத் துறையினருக்கு நன்மையான வாரம். சட்டம் - போலீஸ் துறையினருக்கு வெற்றி நடைபோடும் வாரம். அரசுப் பணியாளர்களுக்கு முன்னேற்ற வாரம். குருவோட பலம் குறைவா இருக்கறதால கேஷியர் மாதிரியான வேலை பார்ப்பவர்கள் உஷாரா இருக்கணும். பொதுவா அலைச்சலுக்கும் பண விரயத்துக்கும் அதிக சான்ஸ் இருக்கு. எதிலும் நிதானத்தோடு செயல்படறதுதான் நல்லது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க திறமை வழக்கத்தைவிட கூடுதலா வெளிப்படுகிற வாரம். விருந்து, கேளிக்கைன்னு மனசு உல்லாசத்தில் மிதக்கும். கலைத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். அலுவலகப் பணியாளர்களுக்கு புரமோஷன் சான்ஸ் இருக்கு. கூட்டுத் தொழில் அல்லது கூட்டுறவுத் துறையில் பணிபுரிபவர்களுக்கு முன்னேற்றம் தெரியும். சிந்தனாவாதிகளுக்குக் கற்பனைத் திறன் கூடும்; பாராட்டும் கிடைக்கும். பண விஷயம் திருப்தியாவே இருக்கும். கொடுக்கல் வாங்கலில் அளவோடு லாபம் கிடைக்கும். அலைச்சலைத் தவிர்க்கலைன்னா, உஷ்ணாதிக்கம் தொடர்பா அவஸ்தைப்பட நேரிடலாம்!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

அனுகூலமான பலன்கள் ஏற்படும்னு சொல்ல முடியாத நிலைல இருக்கீங்க. பிரச்னைகள், இடைஞ்சல்கள் வந்துகிட்டேதான் இருக்கும். துணிச்சலோடும் தன்னம்பிக்கையோடும் நீங்க அதை எதிர் கொண்டே ஆகணும். பெரியவங்க ஆலோசனைகளைக் கேட்டு நடந்தா பிரச்னைகளை ஓரளவுக்குத் தவிர்க்கவும் சமாளிக்கவும் முடியும். கடுமையா உழைக்க வேண்டியிருந்தாலும் பண விஷயம் சாதாரணமாத்தான் இருக்கும். கொடுக்கல் - வாங்கலில் உஷாரா இல்லேன்னா கைப் பொருள் நஷ்டமாயிடும். உத்தியோகஸ்தர்களுக்கு விரும்பத்தகாத இடத்துக்கு மாறுதல் கிடைக்கலாம்.

# நடக்கும்!




# காந்திஜியின்

சுமார் ஒன்றரை வருஷங்களுக்கு முன்பு ஒரு சர்ச்சை கிளம்பியது. மகாத்மா காந்தி எழுதிய கட்டுரைகள், கடிதங்கள் போன்றவற்றின் கையெழுத்துப் பிரதிகளைத் தம்மிடம் வைத்திருந்த சென்னையைச் சேர்ந்த கல்யாணம் என்பவர், லண்டனில் உள்ள ஏலக் கம்பெனி ஒன்றின் மூலமாக ஏலம் விடப் போகிறார் என்று தெரிந்தது. காந்திஜியின் கையெழுத்துப் பிரதிகளை ஏலம் விடுவதற்கு அனுப்பியது, இந்த நாட்டின் தன்மானத்துக்கே இழுக்கு என்றும் பரபரப்பாகப் பேசப்பட்டது. எப்பாடுபட்டாவது இந்த ஏலத்தைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும் என்று குரல் எழுப்பப்பட்டது.

அப்புறம் என்ன ஆச்சு? இப்போது அந்தக் கையெழுத்துப் பிரதிகள் எங்கே இருக்கின்றன?

சென்னையில் வசிக்கும் கல்யாணத்தைக் கேட்டோம். கல்யாணம் பிறந்து வளர்ந்தது டெல்லியில். 1944 ஜூன் முதல் காந்திஜி சுட்டுக் கொல்லப்பட்டதுவரை அவர் கூடவே உதவியாளராக இருந்தவர்.

"1996ம் வருடம் நவம்பரில் காந்திஜியின் ஒரிஜினல் கையெழுத்துப் பிரதிகள் லண்டனில் உள்ள பிரபல ஏலக் கம்பெனி மூலமாக ஏலம் விடப்படுவதாக இருந்தது. அப்போதுதான், காந்திஜியின் கையெழுத்துப் பிரதிகளை ஏலம் விடுவது மாபாதகச் செயல் என்பது போலப் பலரும் கூக்குரலிட்டார்கள். இன்னும் சிலர், காந்திஜியின் எழுத்துக்களின் காப்பிரைட், அகமதாபாதில் உள்ள நவஜீவன் டிரஸ்ட் வசம் உள்ளது. எனவே, காந்திஜியின் கையெழுத்துப் பிரதிகளை ஏலம் விடுவதற்குக் கல்யாணத்துக்கோ, வேறு எவருக்குமோ சட்டப்படி உரிமை இல்லை" என்று வாதிட்டனர்.

"நான் என் தரப்பு விளக்கங்களை வெளியிட்டேன். எழுத்தின் காப்பிரைட் உரிமை என்பது, கையெழுத்துப் பிரதியினின்று மாறுபட்டது. காந்திஜியின் உதவியாளராக நான் இருந்தபோது அவர் கட்டுரைகள், கடிதங்கள் என்று பலவற்றைத் தம் கைப்பட எழுதி என்னிடம் கொடுத்து, டைப் செய்யச் சொல்லுவார். நான் டைப் செய்து கொடுத்தவற்றைக் கையெழுத்திட்டு, சம்பந்தப்பட்டவர்களுக்கு அனுப்பி வைப்பார்.

"டைப் செய்யப்பட்ட பிரதிகளை அனுப்பி வைத்த பிறகு, கையெழுத்துப் பிரதிகளைக் குப்பைத் தொட்டியில் கிழித்துப் போடுவதுதான் வழக்கம். சில சமயங்களில் யாராவது காந்திஜியின் கையெழுத்துப் பிரதியை அவரது ஞாபகார்த்தமாக வைத்துக் கொள்ள விரும்புவதாகக் கூறிப் பெற்றுச் சென்றது உண்டு.

நானும் சேகரிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அவற்றை பத்திரப்படுத்தவில்லை. காந்திஜி மரணமடைந்த பின், பிர்லாஹவுசில், எனக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறையை காலி செய்துகொண்டு புறப்பட்டபோது, மற்ற சாமான்களுடன் கையெழுத்துப் பிரதிகளையும் நான் எடுத்துக்கொண்டு வந்தேன்.

"இவற்றை எல்லாம் சொந்த லாபத்துக்காகப் பயன்படுத்த நான் ஒருபோதும்

# கையெழுத்துப் பிரதிகள்

நினைத்தது கிடையாது. காந்திஜியின் மறைவுக்குப் பின், பலருக்கும் காந்திஜி நினைவாக நான் அவரது கையெழுத்துப் பிரதிகளைக் கொடுத்திருக்கிறேன். இது நவஜீவன் டிரஸ்ட் சம்பந்தப்பட்டவர்களுக்கும் நன்றாகவே தெரியும். காந்திஜி மறைந்த 48ம் வருடம் முதல் 96 வரை யாரும் இதுகுறித்து எந்தவித ஆட்சேபணையும் எழுப்பியது கிடையாது.

"ஒரு விஷயம் சொன்னால் உங்களுக்கு வியப்பாக இருக்கும். நவஜீவன் டிரஸ்டில் முக்கியப் பொறுப்பு வகித்தவரும், குஜராத் மாநில கவர்னராக இருந்தவருமான ஸ்ரீமன் நாராயண் அகர்வால் ஒருதடவை எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். 'போப் ஆண்டவர் இந்தியா வந்திருந்த சமயத்தில், மும்பை ஆர்ச் பிஷப், இந்தியர்கள் சார்பாக போப் ஆண்டவருக்கு விலை மதிக்க முடியாத ஒரு பரிசை அளிக்க விரும்புகிறார். காந்திஜியின் ஒரிஜினல் கையெழுத்துப் பிரதிகள் உங்களிடம் இருக்கின்றன அல்லவா? அவற்றில் ஒன்றை நீங்கள் கொடுத்து உதவினால், நான் ஆர்ச் பிஷப்புக்கு அனுப்பி வைப்பேன்' என்று அதிலே கேட்டிருந்தார். அதன்படி நான் ஒரு கையெழுத்துப் பிரதியை அனுப்பி வைத்தேன். ஆனால், அதே நவஜீவன் டிரஸ்ட் பின்னர் ஆட்சேபணை எழுப்பியது விசித்திரம்!"

"சரி! அந்தக் கையெழுத்துப் பிரதிகளை ஏன் ஏலம் விட முன் வந்தீர்கள்?"

"என்னிடம் பல காலமாக இருந்த அவற்றை, ஏலம் விட்டு அதன் மூலம் கிடைக்கும் தொகையை பாலி தீவில் உள்ள இந்துமத டிரஸ்ட் ஒன்றுக்கு வழங்க விரும்பினேன்."

"ஏலம் நடந்ததா?"

"இல்லை. ஏலம் விடுவதற்குக் கடுமையான ஆட்சேபம் எழுந்தது. நான் கேட்டுக் கொண்டால் மட்டுமே ஏலத்தை நிறுத்த முடியும் என்று ஏலக்கம்பெனி சொல்லி விட்டது. லண்டனில் இருந்த இந்திய தூதர் சங்வி, என்னுடன் டெலிபோனில் பேசி, ஏலத்தை நிறுத்தச் சொல்லுங்கள்; இது இந்திய அரசின் வேண்டுகோள்" என்று கேட்டுக் கொண்டார். நான், ஏலத்தை நிறுத்தி விடும்படிக் கேட்டுக் கொண்டேன். ஏதாவது நஷ்டஈடு செலுத்த வேண்டுமெனில் அதை இந்திய அரசு ஏற்க வேண்டும் என்றேன். நஷ்டஈடு தரப்பட்டதா என்று தகவல் ஏதுமில்லை. ஏலம் நிறுத்தப் பட்டது.

"இந்திய அரசின் கோரிக்கையை நான் ஏற்றுக் கொண்டதால், பரிவுத் தொகையாக ஒரு கோடி வழங்கப்பட வேண்டும். அது சரி பாதியாய் காஞ்சி மடத்துக்கும், அன்னை தெரசாவின் அமைப்புக்கும் வழங்கப்பட வேண்டும்; எனக்கு கால் காசுகூட வேண்டாம்" என்று சொன்னேன். என் கோரிக்கை புறக்கணிக்கப்பட்டது.



கல்யாணம்

"லண்டனிலிருந்து காந்தியின் கையெழுத்துப் பிரதிகளை எடுத்துக் கொண்டு டெல்லி வந்தார் சங்வி. அவற்றை ஜனாதிபதியிடம் ஒப்படைக்க வேண்டும் என்பது என் கண்டிஷன். ஆனால் சங்வி, பிரதமர் தேவ கௌடாவைச் சந்திக்க முயற்சி செய்தார். ஆனால் தேவகௌடாவின் பதவி பறி போய் விடும் சூழ்நிலை அப்போது நிலவியது. எனவே சிறிது காலம் பொறுத்திருந்து, குஜ்ரால் பிரதமரானவுடனேயே ஒப்படைத்தார்.

"தம் பதவியை ஸ்திரப்படுத்திக் கொண்டதுடன் பத்மபூஷன் கௌரவமும் பெற்றுக் கொண்டார். இப்போது தன் மகனுக்கும் பதவி வாங்கிக் கொடுத்துவிட்டார். காந்திஜியின் கையெழுத்துப் பிரதிகளை பத்திரப் படுத்தி வைத்திருந்தது நான்; அதன் மூலமாகப் பயன் அடைந்தவர் சங்வி."

"சரி, இப்போது கையெழுத்துப் பிரதிகள் எங்கே உள்ளன?"

"டெல்லியில் உள்ள காந்தி மியூசியத்தில்! அந்தக் கையெழுத்துப் பிரதிகளின் ஜெராக்ஸ் பிரதியை எனக்குக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறேன்! ஆனால் இந்த சாதாரண மனிதனின் குரல் அவர்கள் காதில் எப்படி விழும்?"

சந்திப்பு: **கௌதம்**

படம்: **ஸ்ரீஹரி**

# அடிக்கவா?

● விஜி

"ஆயிரம் முறை சொல்லியாச்சு... கேட்க மாட்டேங்கறே.. அடி, பின்னிடுவேன் உன்னை!"

"இப்படிப் பேசினா நாக்கை இழுத்து வைச்சு சூடு போடுவேன்..."

"இன்னொரு தடவை ரப்பரைத் தொலைச்சா தோலை உரிச்சுடுவேன்..."

– இப்படியெல்லாம் நிச்சயமாகச் செய்யப் போவதில்லை என்று தெரிந்தும் குழந்தைகளை பயமுறுத்திப் பணிய வைக்கிறோம். சுலபமான இந்த அணுகுமுறை, குழந்தைகளின் பார்வையில் நம் மரியாதையைக் குறைப்பதற்கான குறுக்கு வழி!

குழந்தைகளை ஏன் தண்டிக்கிறோம்...?

நாம் எதிர்பார்க்கும் விதத்தில் அவர்கள் நடந்து கொள்ளவில்லை என்பதால்; நாம் சொன்னபடிச் செய்யவில்லை என்பதால்; நாம் வகுத்த விதிகளை மீறியதால்...

நீதிமன்றம், விசாரணை, இ.பி.கோ எதுவுமில்லாத தனிநபர் தர்பாரின் அட்டூழியம்தான் இத்தகைய தண்டனைகள்!

ரப்பரைத் தொலைப்பதோ, கண்ணாடி தம்ளரை உடைப்பதோ, கணக்கைத் தவறாகப் போடுவதோ, குறைந்த மதிப்பெண் பெறுவதோ தண்டனைக்குரிய குற்றங்களா...?

இத்தகைய காரணங்களுக்காக அவமானப்படும்படி குழந்தைகள் தண்டிக்கப்படும்போது, அந்தத் தண்டனைகள் அப்படியே மனத்தில் வடுவாகத் தங்கி, டீன் ஏஜ் பருவத்தை பாதிக்கும் என்கிறார்கள் மனவியல் வல்லுனர்கள். அடிப்பதோ, மூலையில் போய் சுவரைப் பார்த்து நிற்கச் சொல்வதோ, தனியறைக்குள் பூட்டி வைப்பதோ அபாயகரமான விளைவுகளை ஏற்படுத்தும்.

அப்படியானால், குழந்தைகள் என்ன செய்தாலும் பேசாமல் பொறுத்துக் கொண்டிருப்பதா?

அல்லது, 'போனால் போகிறது, இனிமேல் உடைக்காதே!' 'அடுத்த முறை நிறைய மார்க் வாங்கலாம்' 'திரும்பவும் தொலைக்காதே...' போன்ற சமாதான வாக்கியங்களைப் பேசுவதா?

இரண்டுமே பொறுப்பின்மைக்குத்தான் வழிவகுக்கும்.

கண்ணாடி தம்ளர் கைநழுவி விழுந்து உடைகிறது.

"ஏண்டா உடைச்சே, ராஸ்கல்!"

"ஆமாம்! நான் வேணும்னா உடைச்சேன்? போன வாரம் கூட அப்பா ஒரு டீ கப்பைத் தவறிப் போய் உடைச்சுட்டாங்க... நீ இப்படியா திட்டினே...!"

– குழந்தைகள் அப்படியே வா பாயின்டில் பிடிப்பார்கள்!

ஒரே 'தவறுக்கு' இரு வேறு நபர்களுக்கு இருவித பின்விளைவுகள் என்ற ஏற்றத்தாழ்விலுள்ள அநீதி, விரோதத்தை வளர்க்கும்.

"ஐயோ! உடைஞ்சு போச்சா! சரி... போய் துணி, துடைப்பம் எடுத்து வா... நீயே சுத்தம் பண்ணக் சுத்துக்கோ..." என்று பக்கத்திலிருந்து உதவி செய்யலாம். மிகச் சிறிய குழந்தையானால் நாம் சுத்தம் செய்கிறவரை அவ்விடத்தை விட்டு அகலக் கூடாது என்று நிபந்தனை விதிக்கலாம். ஒரு தவறு நடந்தால் அதற்கொரு பின்விளைவு உண்டு என்பதை இது உணர்த்தும்.

அப்பா தம்ளரை உடைக்கும் போதும் இதே போல் சுத்தம் செய்ய அவர் உதவியாக வேண்டும் என்பதை மறந்து விட வேண்டாம்!

"போன வாரம்தான் வாங்கின புது ரப்பர்... இப்படித் தொலைக்கலாமா...?"

"தொலைஞ்சு போச்சு..."

"இதுதான்



# அனைணக்கவா?

வாண்டு
சைகாலஜி

கடைசி முறை. இனிமே தொலைச்சா ரப்பர் கிடையாது...'' என்று சொல்வது நடைமுறை சாத்தியமில்லாதது. மாறாக, "இன்னும் ஒரு வாரத்துக்குப் புது ரப்பர் வாங்க முடியாது. அது வரைக்கும் நீ எப்படியோ சமாளிச்சுக்கணும்" என்னும் போது, செய்த தவறுக்கான பின்விளைவு தெளிவாக்கப்படுகிறது.

இப்படி விதித்த பிறகு அந்த நிலையிலிருந்து மாறாது உறுதி யாய் இருப்பது அவசியம்.

"இன்னிக்கு பாஸ்கர்கிட்டே ரப்பர் வாங்கி அழிச்சேனா... கிளாஸ்ல டீச்சர் திட்டினாங்க...'' என்று குழந்தை அழும் போது,

"அடடா! இந்தா புது ரப்பர், பத்திரம்!" என்று மறுநாளே மனமிளகுவது உதவாது.

நாம் விதித்த நிபந்தனையை நாமே மீறுவது தவறான முன்னுதாரணம்.

இரு தினங்களுக்கு மேல் கடுமையாக இருக்க முடியாது என்று எண்ணும் பெற்றோர், 'இரண்டு நாளைக்குப் புது ரப்பர் கிடையாது' என்று பாதுகாப்பாகச் சொல்லி விடலாம்! ஒரு வாரம் கெடு கொடுத்துவிட்டு இரண்டாம் நாளே மனம் மாறுவதைக் காட்டிலும் இதுவே சிறந்தது.

தவறுகளுக்கு இத்தகைய பின்விளைவுகள் உண்டு என்பதை உணர்ந்து விட்டதால் மட்டுமே குழந்தை தவறு செய்யாமல் இருந்துவிடப் போவதில்லை.

"நான் தொலைக்கலை ரப்பரை... அதுவா தொலைஞ்சு போச்சு..."

"கை தவறிதானே உடைச்சேன்..."

"அவன்தான் என்னை முதல்ல அடிச்சான்... அதனால திருப்பி அடிச்சேன்..."

போன்ற விளக்கங்களுடன் மீண்டும் மீண்டும் தவறுகள் நடக்கவே செய்யும். எல்லா சந்தர்ப்பங்களிலும் பொறுமை காக்க இயலாமல் போகலாம். பொறுமை அளவுகடந்த சோத னைக்கு உள்ளாகும்போது கையோங்குவதும் சகஜம்தான்.

தண்டனைப் பிரயோகம் செய்வது தவறு என்றாலும் அடுத்த சில நிமிடங்களுக்குள் மன்னிப்புக் கேட்டு "ஐயோ! பாப்பாக்கு வலிச்சுதா.. அம்மா இனிமே அடிக்க மாட் டேன்டா... நீயும் சமத்தா இரு...'' என்று இறங்கி வருவது விபரீதத்தையே விலைக்கு வாங்கும்.

உள்ளுக்குள் வருந்தினாலும் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு விடுங்கள்.

சரி/தவறு என்பவை குழந்தைகள் வளர்கிற போக்கில் பாகுபடுத்தி, புரிந்து கொள்ளும் விஷயங்கள். எந்தத் தவறையும் அவர்கள் முதன் முறையாகச் செய்யும்போது தவறு என்று உணர்ந்து செய்வதில்லை. ஆனால், அந்த முதல் சந்தர்ப் பத்திலேயே அது தவறு என்பதும் ஏன் தவறு என்பதும் புரிய வைக்கப்படு மானால் திரும் பவும் தவறு நடப் பதற்கான வாய்ப்புக் குறைவு.

விவரமறியாதபோது சுவ ரில் கிறுக்குவதைப் பார்த்து கைகொட்டி ரசித்துவிட்டு, மூன்று வயதானதும் அதைத் தடுக்க முயற்சி செய்வது அனர்த்தம்.

ஒரு வயதுக் குழந்தை சுவ ரில் கிறுக்கப் போகிற சந்தர்ப் பத்தில், "நோ! செய்யாதே!'' என்று எச்சரித்துக் கொண் டிராமல் அதை அப்புறப் படுத்தி, கையிலிருக்கும் பென் சில் அல்லது சாக்பீஸை பல வந்தமாக வாங்கி விட வேண் டும்.

செய்ய முயன்ற காரியம் தவறு என்பது இதன் மூலம் தெளிவாக உணர்த்தப்படும்.

இதைச் செய்யாமல், குழந் தைகளுக்குத் தண்டனை வழங் குவதென்பது குரூரம். அந்தத் தண்டனை மூலம் நமது கோபத்துக்கும் இயலாமைக் கும் வடிகால் தேடிக் கொள் வது அதைவிடக் குரூரம்! எந்தச் சட்டப்படியும் தண்ட னைக்குள்ளாகாத குற்றம்!

கடந்த சில வாரங்களாக இந்தப் பகுதியில் சொன்னவை வழிகாட்டு நெறிகள்தான். சந்தர்ப்ப சூழ்நிலைக்கு ஏற்ப அவை மாறத்தான் செய்யும். எனினும் ஒரு பொது விதியை எப்போதும் நினைவில் கொள் ளலாம். குழந்தை வளர்ப்பில் அன்புக்கும் பொறுமைக்கும் நாம் தருகிற அளவு முக்கியத் துவம் நேர்மைக்கும் தரப்பட வேண்டும்; குழந்தையிடம் நேசத்துடன் நம்பிக்கையும் கொள்ள வேண்டும். ●

(முடிந்தது)

# யப்பா... யப்பா... படையப்பா!



• ஜெகந்நாதன்



• அனந்தராமன்



• லக்ஷ்மண்



• புருஷோத்தமன்



• பழநி

தமிழ்நாடு முழுவதும் தீ வைத்தாற்போன்ற பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது, 'படையப்பா' கேஸட்.

நீண்ட தூரப் பேருந்துகள் ஒதுங்கும் மாமண்டூரிலும், துவரங்குறிச்சியிலும், பழைய டேப் ரிகார்டர்களிலிருந்து, "எம்பெரு படையப்பா, இளவட்ட நடையப்பா" என்று எஸ்.பி.பி. தமது கம்பீரக் குரலில் ரஜினி ரசிகர்களைச் சுண்டியிழுத்துக் கொண்டிருக்கிறார். "தாலாட்டி வளர்த்தது தமிழ்நாட்டு மண்ணப்பா" என்று பாடும் போது, "தலைவா அப்படிப் போடு'' என்று சிலாகிக்கிறார்கள் ரசிகர்கள். சென்னை வேலர்ஸ் சாலையில் உள்ள மொத்த கேஸட் விற்பனைக் கடைகளில், முதல் நாளன்று 48 ரூபாய் கேஸட் நூறு ரூபாய்க்குப் போனது! கடை வாசலில் நீண்ட வரிசை. டேப் ஒலிக்க தெருவில் ஆட்டம், கொண்டாட்டம்தான்.

மொத்தம் ஐந்து பாடல்கள். அத்தனையும் ரசிகர்களுக்கு வைரம், முத்து. எஸ்.பி.பி. தவிர, ஸ்ரீராம், நித்யஸ்ரீ, மனோ, ஹரிணி, மலேஷியா வாசுதேவன் ஆகியோரும் தங்கள் திறமையைக் காண்பித்திருக்கிறார்கள்.

படையப்பா... பாட்டப்பா... கலக்கலப்பா என்கிறார்கள் நாம் சந்தித்த ரஜினி ரசிகர்கள். (போலி கேஸட் போட்டால் உதைக்க வரும் உசைனியின் படையப்பா!)

**ஜெகந்நாதன் :**

"ஓஹோஹோ கிக்கு ஏறுதே... ஓஹோஹோ வெட்கம் போனதே'' சூப்பர் பாட்டு! தலைவர் படத்துல எப்படியாவது ஒரு பாட்டுல தத்துவ மழையா பொழிஞ்சுடுவாரு. 'முத்து'வில் 'மண்ணின் மீது மனிதனுக்கு ஆசை' அருணாசலத்தில் 'பிறர்க்கென வாழ்பவன் இறந்துமே இருக்கின்றான்' என்று பாடல் வரிகள் உண்டு. இதோ படையப்பாவிலும் பாடுகிறார் :

''பிறப்பைத்
தேர்ந்தெடுக்கும்
இறப்பைத்
தேர்ந்தெடுக்கும்
உரிமை உன்னிடத்தில்
இல்லை''

தாயை மதிக்கும் பண்பு, அனைவரிடமும் அன்பாக இருத்தல், பிறர்க்கு உதவி செய்வது போன்றவற்றை வலியுறுத்துவது தலைவர் பாட்டுக்கள் மட்டுமே! எங்களுக்கெல்லாம் அவர் பாட்டுங்க மல்டி வைட்டமின் மாதிரி. எங்களை மனிதனா பண்பட வைக்குது அவர் பாட்டுக்கள். இந்தப் பாட்டைப் பொறுத்தமட்டில் குடித்து விட்டுப் பாடுவது போல் படத்தில் வரும் என்று நினைக்கிறேன். ஆனா

பாருங்க ஸார், சும்மாக் குடிச்சா மாதிரி நடித்து பாடற காட்சியா இருக்கும். எம்.ஜி.ஆர். மாதிரிதான்! படம் எப்போ வரும்னு காத்துக்கிட்டிருக்கோம். கேஸட் கேட்டது வெறும் இலை போட்டு பதார்த்

'குலுவாலிலே' உண்டாக்கிய கலக்கலை இந்தப் பாட்டும் உண்டாக்கும் என்பதில் சந்தேகமில்லை. ரஜினி படத்தில் ஆன்மீகச் சிந்தனை, இளைஞர்களுக்கு அட்வைஸ் என்ற ரீதியில் பாட்டுக்கள் இருந்தாலும் இதுபோன்ற பாட்டுக்களும் இருப்பதால் தான் எங்களுக்கெல்லாம் குஷியா இருக்கு. ஏன் சொல்கிறேன் என்றால், கசப்பு மாத்திரையைத் தேனோடு தாங்க கலந்து தரணும்! அப்படிப் பார்க்கையில் இந்தப் பாட்டு ரகுமானின் உழைப்பில் கூடுதலாகவே இனிக்கிறது.

**லக்ஷ்மண் :**

**'ஆ**... மின்சாரப் பூவே... பெண் பூவே...' காதுலே சுத்திக்கிட்டே இருக்கு. அதுவும் 'மின்சாரக் கண்ணா' என்று நித்யஸ்ரீ குரலில் ஒரு ஏறு ஏறும் போது, ஸார் உண்மையைச் சொல்றேன். கொஞ்சம் மயக்கம் வர்றாப் போல இருக்கு! 'உயிரே'யில் ரகுமான் அடித்தார் அல்



தங்கள் போட்டாப் போலத்தான். மனோ அசத்தலா பாடியிருக்கார். ஆனா 'இருவர்' படத்தில் மோகன்லால் பாடும் 'கண்ணைக் கட்டிக் கொள்ளாதே தோழா' பாட்டின் வாசனை இதிலும் இருப்பதை ரகுமான் தவிர்த்திருக்கலாம்.

**அனந்தராமன் :**

**எஸ்**.பி.பி., ஹரிணி குரல்களில் 'சுத்தி சுத்தி வந்தீக... சுட்டு விரலால் சுட்டீக'' என்ற வரிகளைக் கேட்கும் போது உற்சாகத்தில் சீட்டி அடிக்கத் தோன்றுகிறது.

லவா... நெஞ்சினிலே நெஞ்சினிலே என்று. அதுல சூப்பர் தவில் பி.ஜி.எம். எல்லாம் உண்டு. கொஞ்சம் அந்தச் சாயலில், இந்தப் பாட்டிலும் தவில், மிருதங்கம் என்று வெளுத்துக் கட்டுகிறார். ரம்யா கிருஷ்ணன் பரதநாட்டியம் ஆட, தலைவர் பாடறாப் போல வர்ற சீன் இது என்று நம்ம மன்றத் தலைவர் சொன்னாரு. துடிச்சிட்டு இருக்கேன் ஐயா! ஆனா, பாட்டு விஷயத்துல, 'அருணாசலம்' போல பழனி பாரதிக்கும் ரஜினி வாய்ப்புக் கொடுத்திருக்கலாம்.



'படையப்பா'ரஜினி!

பாடல்கள்! படையப்பாவில் ஒரு படி மேலேயே போய் சொல்லுகிறார் :

"என் உடல் பொருள் ஆவியை தமிழுக்கும், தமிழர்க்கும் கொடுப்பது முறையல்லவா"

ரவிக்குமார் – ரஹ்மான் – வைரமுத்து டீம் தலைவரோட இமேஜை ஜிவ்வென ஏற்றி விட்டிருக்கிறது!

பழநி :

**பி.**டி. உஷா ஏஷியாட் தடகளத்தில் ஓடியது போல ஒரு வேகம். அதான் ஸார் இந்தப் பாட்டு.

"வெற்றிக் கொடி கட்டு
மலைகளை முட்டும் வரை முட்டு
லட்சியம் எட்டும் வரை எட்டு"

– அசத்தியிருக்கிறார் மலேஷியா வாசுதேவன். இந்தப் பாட்டுல எந்த வரியைச் சொல்வது? கேட்கக் கேட்க நரம்புகள் முறுக்கேறுது! எதிரே வர்றவனை ரெண்டு தட்டு தட்டினா என்ன என்கிற அளவுக்கு 'ரவுசு' பண்ணுது இந்தப் பாட்டு. அருணாசலத்தில் வரும் 'சிங்கம் ஒன்று புறப்பட்டதே' பாடலின் சாயல் லேசாக இருக்கிறது. "உடன் வர மக்கட் படையுண்டு... முடிவெடு படையப்பா" என்று வரிகள் வருகின்றன. சும்மா சொல்லக் கூடாது ஸார். லட்சக்கணக்கான ரஜினி ரசிகர்களின் மனத்துடிப்பை வார்த்தைகளாகப் போட்டிருக்கிறார் வைரமுத்து. ஏப்ரல் ஒன்பது எப்போ வரும்னு காத்துக் கிட்டிருக்கோம் ஸார்!

புருஷோத்தமன் :

**'பா**ட்ஷா' படத்துல மனித வாழ்க்கையின் எட்டு பருவங்களைப் பாடலிலேயே சொல்லி வருவார். 'முத்து'வில் 'ஒருவன் ஒருவன் முதலாளி...' அருணாசலத்தில் 'அதாண்டா இதாண்டா...' அண்ணாமலையில் 'வந்தேண்டா பால்காரன்' இதுல 'எம்பேரு படையப்பா... இளவட்ட நடையப்பா'– இந்தப் பாட்டுக்களெல்லாம், ரஜினிக்குள் இருக்கும் ரஜினியை வெளிப்படுத்துபவை. கொஞ்சம் கூர்ந்து கவனித்தால், ஒன்று புரியும். தம்மை வளர்த்து விட்ட தமிழ்நாட்டை, தமிழ் மக்களை, எந்தச் சூழலிலும் மறக்காத பண்பை வெளிப்படுத்தும் வரிகள் கொண்ட

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : ஸ்ரீஹரி

'படையப்பா' படங்கள் உதவி : நக்கீரன்

# நிறங்கள்

ஒற்றை ரோஜாப் பூவைக் கையில் வைத்தபடி, பஸ் ஸ்டாண்டில் எதற்காகவோ காத்திருந்தான் அந்தக் கண்பார்வையற்றவன். இவன் கண்ணில் அக்காட்சி பட்டபோது, நிறமற்ற வாழ்க்கையை நினைத்து பயமேற்பட்டது.

சினிமாவின் முடிவில் விழும் திரை போல, கறுப்பான சாயமிறங்கி சகலமும் மறைக்கும் இருள். கறுப்பும் நிறம்தான். ஆனால் தொடர்ந்து ரசிப்பதற்கில்லை. ராத்திரி திரையில் தீட்டப்பட்ட மின்னோவியங்களின் கண்சிமிட்டலைப் பொறுக்காமல் அதன் மேல் சரேல் என்று ஊற்றும் கருப்பு மையின் திண்ணத்தோடு தெளிக்கப்படும் மின்வெட்டுக் கறுப்பு மனசை உறைய வைக்கும். மரணத்தின், சோகத்தின் சாயல் கொண்ட கறுப்பைத் தவிர மற்ற நிறங்கள் அவனுக்குப் பிடித்தவையே.

மழை விழுந்த தாரில்லாத தெருவில் குழம்பியிருக்கும் மண்ணின் செம்மை. கண்களைச் சற்றே மூடி இரப்பைகளின் இடுக்குகளில் மங்கிய மஞ்சள் புகையாய் வெளிச்சமிடும் ஸோடியம் விளக்குகள் காட்டும் வண்ணச் சிதறல்கள். சாயங்கால வானத்தில் தினந்தவறாமல் தீட்டப்படும் கம்யூனிசச் சித்திரங்கள். சின்ன சோப்புக் குமிழிக்குள்ளே ஒளிந்திருக்கும் வானவில். பச்சை இலையின் பரப்பில் அம்மாவின் சிரிப்பைப் போல அவன் மனசின் நிறமாய் அவள் நித்தம் பரிமாறும் சாதத்தின் வெண்மை. காலையில் வானத்தில் பரந்து, காற்றிலும் மனசிலும் கூட வியாபிக்கும் நீலம். கல்லறைக்குப் பக்கத்திலும் கர்வமாய் காற்றில் ஆடும் பூச்செடிகளின் நிறக்கலவைகள். வீட்டு ஜன்னல் கம்பியில் வந்து உட்கார்ந்து முதுகு தேய்த்துக் கொள்ளும் சிட்டுக்குருவியின் சிறகில் ஒளிந்திருக்கும் கருநீலப் பட்டை என நிறங்களின் அதிசயத்தில் ஒன்றிப் போகும் இவன் மனசை அந்தக் குருடனும் அவன் கையில் தடிக்குப் பதிலாய் முரண்பட்டிருந்த சற்றே நிறமிழந்த சிவப்பு ரோஜாவும் உறுத்தியது. அவனிடம் யார் இந்தப் பூவைக் கொடுத்திருப்பார்கள்? ஒரு குருடனிடம் என் ஞாபகமாக இந்த ரோஜாவை வைத்துக் கொள் எனக் கொடுப்பவன் எவ்வளவு வக்கிரமானவனாக இருப்பான்? இல்லை, ஒருவேளை அவன் பூக்கடையில் வாங்கியிருப்பானோ?

இவன் காத்திருக்கும் தொழிற்சாலை பஸ் இன்னமும் வரவில்லை. போன வாரத்தில்தான் இவன் அந்த தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்தான். மில்லிங் இயந்திரத்தில் நீல நிறத்தில் க்ரீஸ் கறை கலந்த வரைபடத்தில் இருக்கும் வடிவை அதன் அளவுகளோடு அலுமினியத் துண்டில் செதுக்கும் வேலை. போன வாரம், முதல் வாரமென்பதால் எட்டரை மணிக்கு பொது ஷிஃப்டிற்கு வரச்சொல்லியிருந்தார்கள். இந்த வாரத்திலிருந்து முதல் ஷிஃப்ட். காலை ஏழரைக்கு ஷிஃப்ட் ஆரம்பம். மணி ஏழு பத்தாயிற்று. இனிமேல் பஸ் வந்து போய்ச்சேரும் பொழுதில் டைம்கார்டைப் பஞ்ச் செய்து உள்ளே ஓடத்தான் நேரமிருக்கும்.

இப்படிப்பட்ட ஓடல்களே வாழ்க்கை. காலை எழுந்ததிலிருந்து இரவில் சோர்ந்து கண்மூடும் வரை பல வித ஓடல்களில் நாளும் ஓடிவிடுகிறது. இதனிடையில் சில கணங்களில் தப்பித்தலாய், தன் இருத்தலின் அடிப்படைக் காரணத்தின் மேல் நம்பிக்கை வரும் விதமாய், அந்தக் குருடனின் கையிலிருந்த சற்றே நிறமிழந்த ரோஜா.

அந்தப் பார்வையற்றவன், குருடர்களுக்காக உண்டாக்கப்பட்ட விதியை மீறாமல், அவன் கண்களில் நிகழ்ந்திருக்கும் சோகத்தை, அதன் குரூரத்தின் அவலம் பிறர் கண்களை உறுத்தக் கூடாது என்று



கறுப்புக் கண்ணாடியில் கண்களை மறைத்திருந்தான். இவனுக்கு வெயில் எவ்வளவு கண்களை உறுத்தினாலும் கறுப்புக் கண்ணாடி அணிந்து வெளியில் இறைந்திருக்கும் நிறங்களை மறைத்துக் கொள்வதில் இஷ்டமில்லை. பார்வை இல்லாததே ஒரு கறுப்புக் கண்ணாடிதான். விழியற்ற நிலையில் உள்ளுக்குள் வண்ணங்கள் விரிய, நிறங்களின் வேறுபாடுகளைக் கற்பனை செய்ய முடியுமா?

இவனும் கண்களை மூடிக் கொண்டுப் பார்த்தான். இமைகள் துடிக்க, உள்ளே எல்லையற்று விரியும் கனத்த இருள் வெளியில் நிற்க ஆதாரமின்றி அலைவது போல் அரண்டு போனான். பயத்தில் விழிகளை விரித்து வெளிச்சத்தில் சுற்றுப்புறத்தின் நிறங்களின் நிச்சயத்தில் பாதுகாப்பானான். இப்படிப்பட்ட பயங்கர நிலைதானா விழியற்று இருப்பது? வேதனையாக இருந்தது. அந்தப் பார்வையற்றவனின் கைகளைப் பற்றி அவன் கையிலிருக்கும் ரோஜாவின் இதழ்களின் நிறங்களிலுள்ள அதிசயங்களை, அற்புதங்களை அவனுக்கு எப்படியாவது உணர வைக்க வேண்டும் என்று பட்டது.

பட்டாம்பூச்சிகள் இன்றி விருந்து வெள்ளை நிறச் சட்டையும் நீல நிறப் பாவாடையும் மட்டுமே அணிய வேண்டுமென்ற யாரோ ஒரு கொடுங்கோலன் உத்தரவிற்குப் பணிந்தது போல, யூனிபார்மையும் களங்கமற்ற முகத்தையும் அணிந்து பள்ளி பஸ்ஸின் வரவு நோக்கிச் சின்னஞ்சிறு குழந்தைகள் வந்தார்கள்.

முதுகில் நீலப் புத்தக மூட்டையுடன், நீண்ட நாட்களாய் தேடிக் கிடைக்காமல் கிடைத்த அரிதான ஒன்று கிடைத்த சந்தோஷ முகத்துடன், ஒரு பெண் குழந்தை அந்தப் பார்வையற்றவனை நோக்கி ஓடுவதைப் பார்த்தான். அந்தப் பெண் அவனிடம் போய், கைகளைப் பற்றிக் கொண்டாள். அந்தக் குருடன் வாய் அகலச் சிரித்து, கை பற்றிய பெண்ணின் தலையை வருடி அவள் கைகளைத் தேடி, தன் கையிலிருந்த அந்தச் சற்றே நிறமிழந்த ரோஜாவைக் கொடுத்தான். ரோஜாவைக் கையில் பத்திரமாக வைத்துக் கொண்டு அவளும் அவனும் பேசியது இவன் காதில் விழவில்லை.

அற்புதமான வண்ணங்களை வாழ்க்கை எல்லோருக்கும் ஒவ்வொரு விதத்தில் காண்பிக்கிறது என்று இவனுக்குத் தோன்றியது.

தூரத்தில் இவனுடைய பஸ் வந்து கொண்டிருந்தது. ●

# ஒரு காதல் டைரி

ஐந்தாவது இரவு மீண்டும் தேவிக்கு ஒரு கடிதம் எழுதினேன். இளம் ரோஜா நிறத்தில் ஒரு பெரிய 'லெட்டர்பேடை' தேவிக்குக் கடிதம் எழுதவென்றே வாங்கினேன். எழுதிய பதில் ஒன்பதாவது. மீதி எட்டையும் கிழித் தெறிந்தேன். அவை அறையின் மூலையில் கிடக்கின்றன.

ஒன்பதாவது:

"பிரியமுள்ள தேவி,

எதிர்பாராத அனுக்கிரகம் போல என்னைத் தேடி வந்த உங்கள் கடிதங்கள் என்னிடமே இருக்கட்டும். நிரந்தரமாக. திருப்பி அனுப்பப் போவதில்லை. ஆண்மையற்ற செயலாக இருக்கலாம். பரவாயில்லை. ஆனால் திருப்பித் தரக் கோருவது பெண்மையாகாதே!

தேவி என்னை மன்னியுங்கள். பதில் தாமதித்துவிட்டது. மறந்ததினால் அல்ல. எழுதாததாலும் அல்ல. ஆறேழு தடவை நான் எழுதினேன். இதயம் சற்று அதிகமாகக் காகிதத்தில் வெளிப்பட்டு விட்டதாகப் பயம் வந்தது. சுக்கல் சுக்கலாகக் கிழித்து எறிந்தேன். என்னைத் தவறாக நினைக்க வேண்டாம். எனக்கு சரவஸ்வதி தேவியைப் பிடிக்கிறது. மரியாதை உண்டு. தேவி ஒரு நல்ல பெண்ணென்று நான் கருதுகிறேன்.

நீங்கள் எனக்காகப் பிரார்த்தித்தீர்களா? வெறும் உபசார வார்த்தைகளோ?

எழுதி வைத்துள்ள கதைகளை இங்கே அனுப்புங்கள். இங்கே என்றால் – நான் எனது அறையில் இருந்து கொண்டு எழுதுகிறேன். நேரம் இரவு மூன்று மணிக்கு மேலாகியிருக்கும். விடிவதற்கு இன்னும் அதிக நேரம் இல்லை.

இந்தக் கடிதம் எழுதி முடித்து வெளுத்ததும் அஞ்சல் நிலையத்தில் சேர்த்து விட்டு கொஞ்சம் டீயும் குடித்துவிட்டு வந்து படுப்பேன். என் நிலையான முகவரி மேலே கொடுத்திருக்கிறேன். இந்த ஊரில் இருந்து போவது வரை முகவரி அதுதான்.

நீங்கள் கேட்ட புத்தகத்திற்காக நான் கடிதம் எழுதியிருக்கிறேன். அங்கு எங்காவது இருந்தால் கிடைக்கும். இங்குள்ள புத்தகக் கடைகளில் எல்லாம் விசாரித்தேன். அந்த வகைப்பட்டது எதுவும் இல்லை.

உங்களை ஒரு மொழி பெயர்ப்புக்காரியாகக் காண்பதல்ல என் ஆவல். உங்களுக்கும் அனுபவங்கள் இல்லையா? அதையெல்லாம் சுதந்தரமான கலைப் படைப்புகளாக உருவாக்கி மிளிரச் செய்யுங்கள்.

உங்கள் வெற்றிக்கு வாழ்த்துகிறேன். வெறும் உபசார வார்த்தையல்ல. என் இதயபூர்வமான



# வைக்கம் முகம்மது பஷீர்

வாழ்த்துக்களை ஏற்கவும். மனத்தில் ஒரு லட்சியம் நிலவட்டும். நீங்கள் ஒரு நாவல் எழுத வேண்டும். உங்களுடைய சுயசரிதை.

உங்கள் எல்லா அனுபவங்களும், எல்லா எதிர்பார்ப்புகளும், வீழ்ச்சிகளும், கனவுகளும் எல்லாம் அதில் நிழல்களாய்ப் படரட்டும். நான் சொல்வது தேவியின் சொந்தக் கதை என்கிற அளவில் அல்ல.

ஒரு நாயர் யுவதியின் கதையாக அது அமையட்டும். இரண்டு நாயர் குடும்பங்களின் நிஜ வாழ்க்கைச் சித்திரமாக வரவேண்டும். எல்லாச் சிக்கல்களும் பிரச்னைகளும் அதில் வெளிவரட்டும். ஆனால் மக்களை நல்வழிப்படுத்தி மேன்மைப்படுத்துவதே கலையின் லட்சியம் என்ற ஒரே நம்பிக்கை கொண்டதாக அந்தப் படைப்பு அமைந்து விடக்கூடாது.

நீங்கள் சொல்ல வருவது ஒரு கதை. அதில் எல்லாம் வரும் என்பதை வெளிப்படுத்த வேண்டும். இதன் தொடர்பாக உங்களிடம் பலதும் பேச வேண்டி உள்ளது. அதை நேரில் பேசும் போது பார்த்துக் கொள்ளலாம்.

தேவி, ரிஷி நாட்டின் மகாபுருஷருடைய சுயசரிதை எனக்கு வேண்டாம். உங்கள் பெயர் எழுதியதனால் களங்கமுற்று விட்டது என்பதற்காக அல்ல. களங்கமுற்ற பகுதிக் காகிதத்தைக் கிழித்து அனுப்பி விட்டால் போதுமே!



ஆனால் ஒன்றும் இல்லாமலேயே உங்களை நினைவில் வைத்துக் கொள்ள என்னால் முடியும். ஒரு ரசமான விஷயம் சொல்லட்டுமா? எல்லாக் கடிதங்களையும் திருப்பி அனுப்ப வேண்டுமென்ற கண்டிப்பான உத்தரவுடன் வந்த இரண்டாவது கடிதம் படித்ததும் எனக்குக் கோபம் வந்தது. முழுமையான கோபம் அல்ல. கொஞ்சம் சங்கடமும் பிறவும் கலந்த ஓர் அழகான கோபம்.

நான் நினைத்தேன்.

ஓ... ஒரு முஸ்லீமின் கையில் ஒரு இந்துப் பெண்ணின் புனிதமான கடிதங்கள் இருப்பதை நினைத்து தூக்கம் பிடிக்கவில்லையா? என்றால் அதைத் திருப்பி அனுப்பி வைக்கிறேன்.

தவிர, நான் போய் ஒரு புதிய கிராமபோன் ரெகார்ட் வாங்கினேன். அதன் மீது 'ஏ ஸாட் ஸ்வீட் போயம்' என்று எழுதி வைத்தேன். அப்புறம் இங்கே வந்து கிராமபோனில் பாட வைத்துக் கேட்டேன். இரண்டு நல்ல பாட்டுகள். பாடுவது, அனுக்கிரகம் பெற்ற பங்கஜ் மல்லிக்.

ஒரு முஸ்லீமின் கவிதை.

துயரும் இனிமையும் கொண்டது.

மனசில் தங்கி நிற்பது.

"ஜப் சாந்த் மேரா நிக்கலா"

மறுபக்கம்.

"ஜிஸே மேரி யாத் ந ஆயே!"

இப்படி, இரண்டு பாட்டுக்கள். 'என் பூ நிலா உதித்தபோது...' 'அவளுக்கு என் ஞாபகம் வராமல் இருக்கட்டும். காணங்கள்... பெரும்பாலும் அவற்றை நான் கேட்பதுண்டு. இன்னும் என்னென்னவோ எழுத வேண்டும் என்று தோன்றுகிறது. தேவீ, உங்கள் சிறு கதையை அனுப்பி வையுங்கள்.

பதிலை விரைவில் அனுப்பவும். பழிவாங்கலாம் என்று தாமதம் செய்யாதீர்கள். மிகவும் கோபக்காரி என்று தோன்றுகிறது. அன்று இரவு ஏன்

**தமிழில் : வையவன்**

அவ்வளவு கோபம்? நான் சொன்ன சமா தானம் உங்களுக்கு உண்மையென்று தோன்ற வில்லையா?

எந்த வேலியிலும் ஒட்டிக் கொள்ளாத ஒரு கலைஞன் நான். வேறேதுமல்ல. இதை நீங்கள் நம்ப வேண்டும்.

பொழுது விடிகிற நேரம். ஒவ்வொரு வாக்கியங்களின் முன்னும் நான் சும்மா தேங்கி நின்று விட்டிருக்கிறேன். உங்களைப் பற்றிய நினைவே என் இதயத்தில் எப்பொழுதும் உள்ளது என்பதைக் கருத்தில் கொள்ளவும்.

நீங்கள் இப்பொழுது விழித்து விட்டிருப் பீர்களா? என்ன நேர்ந்தாலும் இனிமேல் நான் தூங்க முடியாது. உடனே பதில். நான் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் மன மும் உடலும் சௌக்கியமாய் இருக்க வாழ்த்துக் கூறி நல்லன்புடன்..."

அனுப்பிய கடிதத்திற்குப் பதில் வர வில்லை. நாட்கள் இப்படிக் கடந்து போயின.

ஒரு நாள் வழியில் நான் தேவியைச் சந்தித்தேன்.

"கடிதம் கிடைக்கலியா?" – நான் கேட்டேன்.

"கிடைத்தது" என்று மட்டும் சொன்னாள். கூட வேறு மாணவிகள் இருந்ததால் பேச முடியவில்லை.

அன்று தேவியின் தம்பி அவளுடைய கதை யுடன் வந்தான். அது பதிலாக இருக்குமென்று நினைத்தேன். ஆனால் கதை என்னுடைய ஒரு கதையின் வறண்ட தழுவல். எந்த ஒரு உணர் வும் அனுபவமும் இல்லாதது. "துயரின் இனிமை கலந்த மோகன காவியம்!"என்ற வாக்கியம் நடுவில் இருந்தது.

"அக்கா இன்னிக்கே திருத்திக் குடுக்கச் சொன்னாங்க."

திருத்த ஒன்றுமில்லை.

"இன்னிக்கே ஏன்?"

"எங்கியோ அனுப்பணுமாம்."

"பெரிய சிறுகதைப் போட்டிகளுக்கு இதை அனுப்ப வேண்டாம். நான் வேறு ஒன்று எழுதித் தருகிறேன். அதைப் பிரதி எடுத்து அனுப்பவும்." இப்படி ஒரு குறிப்பு மட்டும் எழுதிக் கொடுத்தனுப்பினேன்.

அது தேவியை மிகவும் வருத்தப்படுத்தி விட்டிருக்கும் என்று நான் நினைக்கவில்லை. அன்று மாலை தேவியைச் சந்தித்தேன்.

"என் கதை நல்லா இல்லியா?" என்று மிகவும் சங்கடத்தோடு அவள் கேட்டாள்.

"அனுபவத்தை வச்சுத்தான் எழுதணும்!"

"அப்படின்னா எங்கிட்ட அதைக் குடுத் துடுங்க. கிழிச்சுப் போட்டுடறேன்."

"அது வேணாம்! கதையை எங்கே அனுப் பணும்?"

அவள் சொல்லவில்லை.

நான் ஒரு வேறு புதிய கதை எழுதினேன். அவள் கதையின் பகுதியை வைத்துக் கொண்டு.

இரவு அவள் வீட்டிற்குப் போனேன். கூப் பிட்டேன்.

"தங்கம் இப்போ வருவா" – ஒரு சகோதரன் சொன்னான்.

காற்றும் மழையும் சூழ்ந்தன.

நான் காத்திருந்தேன். இரண்டு மணி நேரம்!

தேவி வரவில்லை.

நான் திரும்பினேன். இரவு நான் கதையை முழுதாக எழுதி முடித்தேன்.

அடுத்த நாள் அவளைச் சந்தித்தேன். அப்போதுதான் சங்கதி புரிந்தது. தன் கதைக்கு அவள் ஒரு பிரதி வைத்திருந்தாள். அதை எங்கேயோ அனுப்பி வைத்து விட்டாள்.

"அந்த சமாசாரம் சிறுகதையல்ல! அது மாதிரி மாணவர் ஃபெடரேஷன்காரர்கள் நடத் தற போட்டிகளே நெறய வந்திருக்கு. நான் தான் பார்த்து பரிசு முடிவு பண்ணியவன். போகட்டும்! இனிமே அனுபவம் இல்லாம எதையும் எழுத வேணாம்!"

கதையில் 'சீமான் மகள்' முதலிடம் பெற் றிருந்தாள். நான் அந்த வார்த்தையைப் பிரயோ கித்தேன். தேவி பொங்கியெழுந்தாள்.

"நான் சீமான் மகள்தான்! அதில் எனக்கு நேர்மையுணர்வு உண்டு."

தேவியின் ஒரு சுற்றுச் சூழல் அவள் எழுதிய கதையில் இருந்தது; தொடக்கத்தில். ஏழாவது சந்தானம், சீமான் மகள்.

நான் தொடர்ந்தேன்.

"அது சலிப்பான கதை."

"அப்படின்னா நான் இனிமே எழுதப் போறதில்லே!"

---

"மாமியாருக்கு லெட்டர் எழுதறியா?"

"எப்படிக் கண்டு பிடிச்சே?"

"முதல் வரிலயே 'நலம். நலமறிய வெறுப்பு' என்று எழுதிருக்காயே!"

– அம்பை தேவா



"எழுதணும். என்னைத் தழுவி இல்லே... யாரையும் தழுவ வேணாம். நான் அனுபவத்தை வச்சுட்டுத்தான் எழுதறேன். அது போல எழுதுங்க. சொந்த அனுபவத்தை வச்சுக் கிட்டு."

நாங்கள் பேசிக் கொண்டே முன்பு நான் குடியிருந்த வீட்டிற்குப் போனோம். தேவி அங்கே மீண்டும் அவர்களிடம் தர்க்கம் செய்தாள். அறியாத விஷயம் பற்றி, ஒத்துப் போக முடியாத அவளின் அந்த நிலை எனக்கு மிகவும் வருத்தம் தந்தது. என் இதயம் அழுதது.

விஷயத்தை மாற்றுவதற்காக நான் டீ வாங்கி வரச் சொன்னேன். ஒரு கம்யூனிஸ்டுத் தோழர் பாத்திரம் எடுத்துக் கொண்டு போய் டீ வாங்கி வந்தார். நானே ஒரு கிளாஸில் ஊற்றித் தேவிக்குக் கொடுத்தேன்.

தேவி அதில் பாதியை என் கிளாஸில் ஊற்றினாள். "எனக்கு இவ்வளவு அதிகமா வேணாம்" என்றபடி.

டீ குடித்து முடிந்ததும் எழுந்து இந்தியில் என்னிடம் விடை பெற்றாள்.

"மை ஜாத்தீ ஹூம்."

"அச்சீ பாத் - பிரபு குமாரி."

தேவி போய்விட்டாள்.

இரவு ஏழெட்டு மணிவரை நான் அங்கேயிருந்தேன். கலாட்டாவும் விஷயங்களும். அதனிடையே என் சிந்தனை அவளைச் சுற்றியே வட்டமிட்டது.

சரஸ்வதீ தேவி!

தேவி என்னை நேசிக்கிறாளா?

என் மீது ஈடுபாடு கொண்டிருக்கிறாளா?

பாவம், மிகவும் வேதனை அனுபவிக்கிறாள்!

இப்படி எல்லாம் சிந்தித்துக்கொண்டிருக்கும் போது தேவியின் குரல். சுவருக்கு அப்பால் ஏதோ கவிதை சொல்கிறாள். கடும் துயரத்தோடு - மிகவும் உரக்க அல்ல. வாய்க்குள் முனகுவது போல. அது நான் கேட்க வேண்டுமென்றா?

"மை ஜாத்தா ஹூம்!" என்று எல்லாரிடமும் உரத்த குரலில் நான் விடை பெற்று, படி இறங்கினேன்.

சரஸ்வதீ தேவிக்கு என் மீது ஈடுபாடு உண்டா?

என்னைத் தழுவி அவள் கதை எழுதியது என்னிடமுள்ள பிரத்தியேக சிநேகத்தினாலா? மற்றவர்கள் கதைகளை வாசித்ததில்லையா? எனில், வாசிக்க வேண்டும். நான் பன்னிரெண்டு புத்தகங்கள் வாங்கினேன்.

பாவி (எதிர்காலம்) - போர்த்திக்கர ராபி (விலை ரூ. 1-0-0)

பொன்னுகுடம் - கெ. சரஸ்வதி அம்மா (விலை ரூ. 1-4-0)



"ஏங்க நம்ம காதல் எங்க வீட்டுக்குத் தெரிஞ்சுபோச்சு!"

"அதுக்கு இப்ப என்ன செய்யணும்?"

"உங்க சம்பளத்த எங்க அப்பாகிட்ட கொடுத்திடுங்க!"

– ஆறுபாதி திருமால்

கடாட்சம் - ஜோஸப் முண்டச்சேரி (விலை ரூ. 1-0-0)

காரூர்க்கதகள் - காரூர் நீலகண்ட பிள்ள (விலை ரூ. 1-4-0)

மூடுபடத்தில் - லலிதாம்பிகா அந்தர்ஜனம் (விலை ரூ. 1-8-0)

அன்னத்த நாடகம் - பி. கேசவதேவ் (விலை ரூ. 2-0-0)

ஹிருதய நாதம் - பொன்குன்னம் வர்க்கி (விலை ரூ. 1-0-0)

தல மர்ம்மரம் - நாகவள்ளி ஆர்.எஸ். குருப்பு (விலை ரூ. 1-0-0)

அபராதிகள் - வி. அச்சுதகுருப்பு (விலை ரூ. 1-4-0)

சங்ஙாதிகள் - தகழி சிவசங்கர பிள்ள (விலை ரூ. 2-0-0)

நீர்ச்சாலுகள் - பி.ஸி. குட்டி கிருஷ்ணன் (விலை ரூ. 1-4-0)

மணிமாளிக - எஸ்.கே. பொற்றெகாட் (விலை ரூ. 1-8-0)

அத்தனை புத்தகங்களையும் பார்சல் கட்டச் செய்தேன். மற்ற சிறுகதை எழுத்தாளர்களின் தொகுதிகளைத் தேடினேன். கிடைக்கவில்லை. புத்தகங்களில் ஒன்றும் எழுதாமல் தேவியின் கல்லூரி முகவரிக்கு அனுப்பி வைத்தேன். வெறும் புக் போஸ்டாக. பிறகு ஒரு கடிதம் எழுதினேன்.

"ஏ சீமான் மகளே,

இந்தக் கடிதம் பிரபு குமாரிக்கு அல்ல. பிரியமான சரஸ்வதீ தேவிக்கு.

தேவி, நான் சில புத்தகங்களை அனுப்பியுள்ளேன். சிறுகதைத் தொகுதிகள். சௌகரியப்படி ஒவ்வொன்றையும் மனசு ஊன்றி வாசிக்கவும்.

இனிமேல் நீங்கள் எழுதுகையில் அனுபவத்தை வைத்து மட்டுமே எழுதவும். இதை மறக்க வேண்டாம். சொந்த வாழ்க்கையைக் கொஞ்சம் திரும்பிப் பார்க்கவும்.

வேதனைக்கனமாகவும், மறக்க முடியாதது மான சில சம்பவங்கள் வாழ்க்கையில் இல்லையா? அதை அழகாகச் சித்திரியுங்கள். ஆவேசத்தோடு, துயரத்தின் சூடு மாறாமல்.

பேச்சு வாக்கில் நான் ஏதாவது சொல்லி இருந்தால் மன்னியுங்கள். வேதனைப்படுத்த வேண்டும் என்றோ, உங்களை நோகச் செய்ய வேண்டும் என்றோ எனக்கு உத்தேசமில்லை. இதை எப்போதும் நினைவில் வைக்கவும்.

உங்களைப் பார்த்தபோது மிகவும் வேதனை அனுபவிக்கிற ஒரு பெண் என்று தோன்றியது. அதனால்தான் துயரின் இனிமை கலந்த மோகன காவியம் என்று எனக்குத் தோன்றியது.

துன்பம் நிறைந்த மோகன காவியம் - இந்தப் பிரயோகம் என்னுடையது. நான் ஒரு புதிய கதையில் சேர்த்துக் கொள்வேன். அதன் காப்பிரைட் என்னுடையது. நினைவிருக்கட்டும்.

தேவியை முதன் முறையாகப் பார்த்த பொழுது அந்த முகத்தில் ரோஜா நிறமுள்ள ஒரு நிறம் இருந்தது.

வேறு விசேஷம் எதுவுமில்லை. மேடைப் பேச்சு அதிகரிப்பது நல்லதல்ல. அதற்கு வேண்டிய சக்தி உங்களிடம் இல்லை. அன்று பார்த்த பொழுது நெஞ்சுவலி என்றோ என்னவோ சொன்னீர்கள். உடலை வலிமைப்படுத்துங்கள். ஆரோக்கியத்தை மீட்டுக் கொள்ளுங்கள். சக்தியைச் சம்பாதியுங்கள். சக்தி!

எல்லா சௌபாக்கியங்களையும் பெற வேண்டி..."

---

"உங்க வீட்ல பேய், நடமாட்டம் இருந்தா சொன்னீங்க. இப்ப ஏதும் பிரச்னை இருக்கா?"

"குடி வந்த புதுசுல கொஞ்ச நாள் ராகிங் பண்ணுச்சு. இப்ப இல்ல!"

— அம்பை தேவா



தேவி பதில் அனுப்பினாள். பல நாட்கள் கழித்து. பதைபதைப்போடு நான் அன்றாடம் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அப்படியிருக்கையில் வந்த பதில். காதல் நிறைந்த இருதயத்தின் பல தளும்பல்களுடன்.

"பிரபு குமாரியிடம் பணம் உண்டு. எனக்காக ஏன் பணம் செலவழிக்கிறீர்கள்? ஏ தரித்திரப் பிரபுவே! மற்றவர்களுக்காகக் கண்டபடி செலவழிக்க நீங்கள் என்ன அவ்வளவு பணக்காரரா? நான் பணமனுப்புவேன்.

பிரபு குமாரியை ஒசி வாசகியாக்க வேண்டாம்! முதலாவது மகள் - ஏழாவது சந்தானம். அவளை ஓசி வாசகியாக்கலாமா? எனது கடிதங்களை எல்லாம் திருப்பி அனுப்பவும். எனக்கு உங்கள் மேல் நம்பிக்கை உண்டு.

துயரின் இனிமை கலந்த மோகன காவியத்தின் துயரம் போக்க நீங்கள் முயல்வதற்கான பிரதிபலனை இறைவன் தங்களுக்கு வழங்கட்டும். அது போதுமே! போதாதெனில் அகம் பொங்கி வழியும் நட்பு போதாதா? தரித்திரப் பிரபுவுக்கு இது போதாதா?

குறைந்த காலத் தொடர்பை அடிப்படையாக்கி மேற்கொண்ட இந்த சுதந்தரத்திற்காக மன்னியுங்கள். நீங்கள் எழுதும் கதைகள் எல்லாம் ஆத்மார்த்தமானவை என்றால் மன்னிக்கும் மனோநிலை உங்களிடம் இருக்கும் என்பதே என் நம்பிக்கை.

இனிமேல் என் முகவரியை இங்கிலீஷில் எழுதி அனுப்பவும். இந்த ஊர்ப் பெண்கள் விஷங்கள்.

நான் இந்த ஆண்டு போட்டியில் தோற்றால் அந்தக் குற்றச்சுமையை உங்கள் வழுக்கைத் தலையில்தான் கட்டி வைப்பேன். இலக்கிய உலகில் பிரவேசிக்கத் துடிக்கும் இந்த மாணவிக்கு குரு ஸ்தானம் ஏற்பீர்களா? பிரதிபலன் ஒன்றும் கிடையாது.

கோபக்காரியானாலும் களங்கமற்ற இந்தப் பெண்ணை நோகச் செய்யாதீர்கள். குடும்ப சம்பந்தமான சில குழப்பங்கள் என் இதயத்தில் சில காயங்களை ஏற்படுத்தி உள்ளன; மோகன காவியத்தை துக்கமயமாக்கியவை.

மாணவியின் ஆக்ஞையை ஏற்பீர்களா! இந்த சிஷ்யையின் குருஸ்தானத்தை ஏற்றுக் கொள்வீர்களா? நாடகம் எழுதித்தர வேண்டும். காதலும் நகைச்சுவையும் சேர்த்து வேண்டும்.

நல்லன்புடன்,
சரஸ்வதி தேவி

இந்தக் கடிதத்தின் பொருள் என்ன? பிரபு குமாரிக்கு என் மேல் மையலா? அல்லது என்னைக் கிண்டல் செய்து பார்க்க இப்படி எழுதி இருக்கிறாளா?

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

## நாலாம் அத்தியாயம்

## தாழைப் புதர்

நடுக்கடலில் படகு தொட்டில் ஆடுவது போல் உல்லாசமாக ஆடிக்கொண்டு சென்றது. இரண்டு நாளைக்கு முன்னால் அங்கே தென்னை மர உயரம் அலைகள் எழும்பி விழுந்தன என்று கற்பனை செய்வதே கடினமான காரியம்.

படகில் இளவரசர் பொன்னியின் செல்வரும் வந்தியத்தேவனும் பூங்குழலியும் இருந்தனர்.

பூங்குழலியின் கையில் துடுப்பு இருந்தது. ஆனால் அதை அவள் விசையாகப் போடவில்லை. வந்தியத்தேவனுக்கும் இளவரசருக்கும் நடந்த சம்பாஷணையை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

அவர்களும் பேச்சில் கவனமாக இருந்தார்கள். படகு விரைவாகப் போக வேண்டுமென்று ஆவல் கொண்டவர்களாகத் தோன்றவில்லை.

படகு கோடிக்கரை சேர்ந்த பிறகு என்ன செய்ய வேண்டும் என்பது பற்றித்தான் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். இளவரசர் தஞ்சாவூருக்குப் போகக்கூடாது என்றும், பழையாறைக்கு வர வேண்டும் என்றும் வந்தியத்தேவன் வாதிட்டுக் கொண்டிருந்தான். அதற்குப் பல காரணங்களை அவன் எடுத்துச் சொன்னான்.

"தங்கள் சகோதரி தங்களை மிக அவசர காரியமாகப் பார்க்க விரும்புகிறார். தங்களைக் கையோடு அழைத்துக்கொண்டு வருவதாக வாக்களித்திருக்கிறேன். அதை நிறைவேற்றி வைக்க வேண்டும்" என்று மன்றாடினான்.

"உன் வாக்கை நிறைவேற்றுவதற்காக என் தந்தையின் கட்டளையை மீறச் சொல்லுகிறாயா?" என்று இளவரசர் கோபமாகக்

அமரர் கல்கி

கேட்டார்.

"அது தங்கள் தந்தையின் கட்டளை யில்லை; பழுவேட்டரையரின் கட்டளை யல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

அதோடு இன்னொன்றும் சொன்னான்: "சக்கரவர்த்தியைத் தாங்கள் பார்க்கப் போவ தாயிருந்தாலும் சுதந்தரமாகப் பார்க்கப் போவது நல்லதா? பழுவேட்டரையர்களின் சிறையாளியாகப் பார்க்கப் போவது நல்லதா? நான் சொல்கிறேன், கேளுங்கள். 'தங்களைப் பழுவேட்டரையர்கள் சிறைப்படுத்தியிருக் கிறார்கள்' என்ற செய்தி பரவ வேண்டியது தான். சோழ நாட்டு மக்கள் எல்லாரும் திரண்டு எழுந்து வந்து விடுவார்கள். தங் களுடைய அருமைத் தாய்நாடு ஒரு பயங்கர ரணகளமாகி விடும். அது நல்லதா என்று எண்ணிப் பாருங்கள்! அப்படிப்பட்ட கேடு சோழ நாட்டுக்கு ஏற்படக் கூடாது என்று தான் கடவுளே பார்த்து அந்தச் சுழற்காற்றை ஏவி விட்டிருக்க வேண்டும். கடவுளின் விருப்பத்துக்கும் விரோதமாகத் தாங்கள் சோழ நாட்டில் கலவரத்தை உண்டாக்க விரும்புகிறீர்களா?" என்று கேட்டான் வந்தியத்தேவன்.

அவ்வளவு நேரமும் அவன் சொல்லி வந்த வாதங்களுக்குள் இது இளவரசரின் மனத்தை ஓரளவு மாற்றியது. தம்மைப் பழு வேட்டரையர்கள் சிறைப்படுத்தியிருக்கிறார் கள் என்று தெரிந்தால் சோழ நாட்டில் கல வரம் உண்டாவது சாத்தியந்தான். மக் களுக்குத் தம்மிடம் உள்ள அபிமானம் எவ் வளவு மகத்தானது என்பது அவருக்கு ஒரு வாறு தெரிந்துதானிருந்தது. ஆகையால் இளவரசர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு "அப்படியே உன் விருப்பத்தை நிறைவேற்ற நான் முடிவு செய்தாலும் அது எப்படி சாத்தியம்? கோடிக் கரையில் பழுவேட்டரையர்களின் ஆட்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருக்க மாட் டார்களா?" என்று கேட்டார்.

"அதற்கு உதவி செய்ய இந்த ஓடக்காரப் பெண் இருக்கிறாள். கரையில் எத்தனை பேர் காத்திருந்தாலும் அவர்கள் கண்ணில் படா மல் கோடிக்கரைக் காட்டுக்குள் நம்மைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவாள். – பூங் குழலி! நான் கூறியது காதில் விழுந்ததா? அவ் விதம் செய்ய முடியுமா?" என்று வந்தியத் தேவன் கேட்டான்.

பூங்குழலி அப்போது ஏழாவது சொர்க்க லோகத்தில் இருந்தாள். இளவரசரைக் கடலிலிருந்து காப்



பாற்றிப் படகிலேற்றி அழைத்துக்கொண்டு வந்தது அவளுக்கு எல்லையில்லாத உள்ளக் களிப்பை அளித்திருந்தது.

கோடிக்கரை சேர்ந்ததும் அவரைப் பிரிய வேண்டுமே என்ற எண்ணம் இடை யிடையே வந்து துன்புறுத்திக் கொண்டிருந் தது. மேலும் அவருக்கு எந்த விதத்திலாவது உதவி செய்ய முடியுமானால், அதைக்காட் டிலும் அவள் பெறக்கூடிய பேறு வேறு என்ன இருக்க முடியும்?

"கோடிக்கரைக்குக் கொஞ்சம் மேற்கே தள் ளிப் படகைக் கொண்டு போனால் அங்கே இருபுறமும் காடு அடர்ந்த கால்வாய் ஒன்று இருக்கின்றது. அதன் வழியாகப் படகை விட்டுக்கொண்டு போகலாம். இருபுறமும் அங்கே சதுப்பு நிலம். சுலபமாக யாரும் வர முடியாது!" என்று பூங்குழலி சொன்னாள்.

"எங்களை அங்கே விட்டு விட்டு நீ கோடிக்கரை போய்த் தகவல் விசாரித்துக் கொண்டு வர முடியும் அல்லவா?"

"முடியும். படகை ஒருவரும் பார்க்க முடி யாதபடி நிறுத்துவதற்கு எத்தனையோ இடம் இருக்கிறது."

"இளவரசே! கேட்டீர்களா?" என்றான் வந் தியத்தேவன்.

"கேட்டேன், அப்பா! என்னுடைய தாய் நாட்டில் என்னைத் திருடனைப் போல் பிர வேசிக்கச் சொல்லுகிறாய். திருடனைப் போல் ஒளிந்திருக்கச் சொல்லுகிறாய்" என் றார்.

படகில் சற்று நேரம் மௌனம் குடி கொண்டிருந்தது. பிறகு இளவரசர் "சமுத் திரகுமாரி! ஏன் படகை அடியோடு நிறுத்தி விட்டாய்?" என்று கேட்டார்.

பூங்குழலி வந்தியத்தேவனைப் பார்த்து விட்டுத் துடுப்பை வலிக்க ஆரம்பித்தாள்.

"பாவம்! இந்தப் பெண் எத்தனை நேரம் தனியாகத் துடுப்பு வலிப்பாள்? நான் கொஞ் சம் தள்ளிப் பார்க்கிறேன். இங்கே கொடு அம்மா, துடுப்பை!" என்றான் வந்தியத் தேவன்.

அவனுடைய எண்ணத்தை அறிந்த இள வரசர் புன்னகை புரிந்தார்.

"நண்பனே! உன்னுடைய சூழ்ச்சிகள் எல்லாம் வீண்தான். நான் பழையாறைக்கும் போகப் போகிறதில்லை; தஞ்சாவூரையும் பார்க்கப் போகிறதில்லை. கடவுள் என் னைக் கைலாசத்துக்கே அழைத்துக்கொண்டு போய் விடுவார் போலிருக்கிறது!" என்றார்.

வந்தியத்தேவனும் பூங்குழலியும் பீதி யடைந்து இளவரசரை உற்றுப் பார்த்தார்கள். அவர் உடம்பு நடுங்கத் தொடங்கியிருப்





பதைக் கண்டார்கள்.

வந்தியத்தேவன் அவர் அருகில் சென்று "ஐயா! இது என்ன? தங்கள் உடம்பு ஏன் நடுங்குகிறது?" என்று கேட்டான்.

"இது குளிர் காய்ச்சல், அப்பனே! இலங்கையில் இந்தக் காய்ச்சல் அதிகம் பரவியிருக்கிறது என்று சொன்னேனே. ஞாபகம் இல்லையா? இந்தச் சுரம் வந்தவர்கள் பிழைப்பது அரிது!" என்று சொன்னார் இளவரசர்.

கடல் நடுவில் கப்பலின் பாய்மரம் இடி விழுந்து பற்றிக் கொண்டபோது கூட வந்தியத்தேவன் அவ்வளவு கலக்கம் அடையவில்லை. இளவரசரின் வார்த்தைகள் அவ்வளவாக அவனை இப்போது கதி கலங்கச் செய்து விட்டன.

பூங்குழலியின் கையிலிருந்து துடுப்பு தானாக நழுவிவிட்டது. உடம்பில் ஜீவ சக்தி அடியோடு மங்கி விட்டது. கண்களில் மட்டும் உயிரின் ஒளி தோன்றியது. அந்தக் கண்களினால் இளவரசரை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

இளவரசரின் உடல் நடுக்கம் அதிக

மாகிக் கொண்டேயிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் தூக்கித் தூக்கிப் போட ஆரம்பித்தது.

"ஐயா! நான் என்ன செய்யட்டும்? சொல்லுங்கள்! ஒன்றும் புரியவில்லையே? படகை எங்கே கொண்டு போகட்டும்? பூங்குழலி! கோடிக்கரையில் வைத்தியர் இருக்கிறார் அல்லவா?" என்று வந்தியத்தேவன் பதறினான்.

பூங்குழலியோ பேசாமடந்தை ஆகியிருந்தாள்.

இளவரசர் திடீரென்று குதித்து எழுந்தார். நடுங்கிக் கொண்டிருந்த அவர் உடம்பு இப்பொழுது நிற்க முடியாமல் தள்ளாடியது.

"என்னை என் தமக்கையிடம் கொண்டு போங்கள்! என்னை உடனே இளைய பிராட்டியிடம் கொண்டு போங்கள்!" என்ற வார்த்தைகள் அவருடைய வாயிலிருந்து குளறலாக வெளி வந்தன.

இதைக் கேட்ட வந்தியத்தேவன் குதூகலம் அடைந்தான். அந்தக் குதூகலத்தில் இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்து நின்றான்.

நடுக்கத்துடன் ஆடிக் கொண்டு நின்ற இளவரசர் அடுத்தகணத்தில், "அக்கா! இதோ வருகிறேன்! உன்னைப் பார்க்க இதோ வருகிறேன்! யார் தடுத்தாலும் இனிமேல் கேட்க மாட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே படகிலிருந்து கடலில் பாயப் போனார்.

நல்லவேளையாக, வந்தியத்தேவன் அப்போது, நிலைமை இன்னதென்பதை உணர்ந்தான். இளவரசர் சுரத்தின் வேகத்தினால் சுய உணர்வு இழந்து விட்டார் என்பதை அறிந்து கொண்டான். கடலில் பாயப் போனவரைச் சட்டென்று பிடித்து நிறுத்தினான்.

ஏற்கெனவே மிக்க பலசாலியான இளவரசர் இப்போது சுரத்தின் வேகத்தினால் பன்மடங்கு அதிகபலம் பெற்றிருந்தார். வந்தியத்தேவனுடைய பிடியிலிருந்து திமிறிக் கொள்ள முயன்றார். தன்னால் மட்டும் அவரைத் தடுக்க முடியாது என்பதை வந்தியத்தேவன் கண்டு, "பூங்குழலி! பூங்குழலி! சீக்கிரம் ஓடி வா!" என்று அலறினான்.

செயலற்று நின்ற பூங்குழலி உயிர் பெற்றாள். ஒரு பாய்ச்சல் பாய்ந்து இளவரசர் அருகில் வந்து அவரைக் கடலில் விழாமல் தடுப்பதற்காக ஒரு கரத்தைப் பற்றினாள். சுர வேகத்தினால் இளவரசர் பெற்றிருந்த மத யானையின் பலம் உடனே மாயமாய்ப் போய்விட்டது. சின்னஞ்சிறு குழந்தையைப் போல் ஆனார்.

"அக்கா! நீ சொல்கிறபடியே பேசாமல் படுத்திருக்கிறேன். என் பேரில் வருத்தப்படாதே. அக்கா! நீ ஒருத்தி இல்லாவிடில் என்னுடைய கதி என்ன?" என்று இளவரசர் கூறிவிட்டு விம்மினார்.

வந்தியத்தேவனும் பூங்குழலியும் இளவரசரை மெதுவாகப் படகில் படுக்க வைத்தார்கள்.

அதன் பிறகு பொன்னியின் செல்வர் சும்மா படுத்திருந்தார். அவருடைய கண்கள் எங்கேயோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தன. அவருடைய வாயிலிருந்து ஏதேதோ வார்த்தைகள் குழறிக் குழறி வந்து கொண்டிருந்தன. சிலவற்றுக்குப் பொருள் விளங்கின. பெரும்பாலும் சம்பந்தமற்ற வார்த்தைகளாகத் தோன்றின.

இளவரசரிடம் ஆலோசனை கேட்பதில் பயனில்லை என்பதை வந்தியத்தேவன் உணர்ந்தான். இந்த மிகப் பயங்கரமான ஆபத்திலிருந்து பொன்னியின் செல்வரைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தன் தலையில் சுமந்திருக்கிறது என்பதையும் அறிந்தான். ஆனால் புத்திசாலியான இந்தப் பெண் ஒருத்தி இருக்கிறாள். இளவரசரைப் பாதுகாப்பதில் தன்னைப் போலவே இவளும் கவலை கொண்டவள் தான். பின்னர், எத்தனையோ அபாயங்களிலிருந்து தன்னைத் தப்புவித்த கடவுளின் கருணையும் இருக்கவே இருக்கிறது.

"பூங்குழலி! படகை இனிமேல் வேகமாகச் செலுத்திக்கொண்டு போக வேண்டியதுதானே?" என்றான் வந்தியத்தேவன்.

பூங்குழலியின் கரங்கள் இழந்திருந்த வலிமையை மீண்டும் பெற்றன. படகு துரிதமாகச் சென்றது.

வந்தியத்தேவன் இளவரசரின் அருகிலேயே உட்கார்ந்திருந்தான். மறுபடியும் அவர் சுர வேகத்தில் கடலில் குதித்து விட்டால் என்ன செய்வது என்பதை நினைத்த போதே அவன் கதி கலங்கியது. ஆகையால் சர்வ ஜாக்கிரதையாக அவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். அதேசமயத்தில் மேலே செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றி அவன் உள்ளம் தீவிரமாகச் சிந்தனை செய்தது.

"பெண்ணே! உனக்கு என்ன

தோன்றுகிறது? நாம் துணிந்து கோடிக் கரைக்கே போய் விடலாமா? இளவரசரைப் பாதுகாப்பதற்கு உன் குடும்பத்தார் உதவி செய்வார்கள் அல்லவா?" என்று கேட்டான்.

"ஐயா! இந்தக் காலத்தில் யாரை நம்பலாம், யாரை நம்பக்கூடாது என்று எப்படிச் சொல்ல முடியும்? என் தமையன் மனைவி ஒருத்தி இருக்கிறாள். அவள் பணத்தாசை பிடித்தவள். என் தந்தைக்குப் படி அளப்பவர்கள் பழுவேட்டரையர்கள்!" என்றாள் பூங்குழலி.

"மேலும், தங்களைப் பிடிக்க வந்த பழுவூர் ஆட்கள் இன்னும் கோடிக்கரையில் தங்கியிருக்கலாம். இளவரசரின் வரவை எதிர்பார்த்து மேலும் பல புதிய ஆட்களும் வந்திருக்கலாம்!" என்று தொடர்ந்து கூறினாள்.

அவளுடைய முன்யோசனையைக் குறித்து வந்தியத்தேவன் வியப்படைந்தான். இந்த இக்கட்டான சமயத்தில் தனக்கு அவளுடைய உதவி கிடைத்ததை எண்ணி மகிழ்ந்தான்.

"அப்படியானால், நேரே கோடிக்கரைக்குப் போவது அபாயம் என்று நீயும் எண்ணுகிறாயா?" என்றான்.

"அதோ பாருங்கள்!" என்று சுட்டிக் காட்டினாள் பூங்குழலி.

அவள் சுட்டிக்காட்டிய திசையில் கப்பல் ஒன்று நின்று கொண்டிருந்தது. அதற்கு அப்பால் கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சியும் தெரிந்தது.

"ஆகா! பெரிய மரக்கலம் ஒன்று நிற்கிறதே! அது யாருடைய கப்பலோ, என்னவோ! ஒருவேளை பார்த்திபேந்திரனுடைய கப்பலாயிருக்கலாம். அப்படியிருக்குமானால், இந்த நிலையில் இளவரசரைக் காஞ்சிக்கு அழைத்துப் போவதே நல்லதல்லவா?"

"பழுவேட்டரையரின் கப்பலாகவும் இருக்கலாம். ஐயா! கப்பலுக்குப் பின்னால் ஏதாவது தெரிகிறதா?"

"கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சி தெரிகிறது."

"அதில் ஏதாவது வித்தியாசமாகக் காணப்படுகிறதா?"

"எனக்கு ஒன்றும் வித்தியாசமாய்த் தெரியவில்லையே!"

"எனக்குத் தெரிகிறது. அந்த உச்சியில் கூட்டமாக மனிதர்கள் நின்று கடலை உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது."

"அங்கிருந்து பார்ப்பவர்களுக்கு இந்தப் படகு தெரியுமா?"

"தெரியாது. இன்னும் கொஞ்சம் கரையை நெருங்கினால் தெரியும்."

"எல்லாவற்றுக்கும் நாம் முன் ஜாக்கிரதையாக இருப்பதே நல்லது. நீ முன்னம் சொன்னாயே, கோடிக்கரைக்கு மேற்கே கால்வாய் ஒன்று இருக்கிறதென்று? அங்கேயே படகை விடலாமா?"

"அப்படித்தான் செய்ய வேண்டும். இருட்டுகிற சமயத்துக்கு அங்கே போய்ச் சேரலாம். ஐயா! நீங்கள் ஒருநாள் இருண்ட மண்டபத்தில் ஒளிந்திருந்தீர்களே? அதற்கு வெகு சமீபம் வரையில் அந்தக் கால்வாய் வருகிறது. இளவரசருடன் தாங்கள் சற்று நேரம் அங்கே தாமதித்தால் நான் போய் எல்லாவற்றையும் விசாரித்துக்கொண்டு விரைவில் வந்து சேருகிறேன்."

"கால்வாய் அங்கேயே நின்று விடுகிறதா, பூங்குழலி! மேலும் எங்கேயாவது போகிறதா?"

"கோடிக்கரையிலிருந்து நாகைப்பட்டினம் வரையில் அந்தக் கால்வாய் போகிறது" என்றாள் பூங்குழலி.

இந்தச் சமயத்தில் பொன்னியின் செல்வர் சுர வேகத்தில் தமக்குத் தாமே பேசிக்கொண்டது கொஞ்சம் உரத்த சப்தத்துடன் கேட்டது.

"ஆமாம், அக்கா, ஆமாம்! நாகைப்பட்டினத்துப் புத்த பிக்ஷுக்கள் சொன்னதாகக் கூறினாயே? அதன்படியே நடந்தது. அநுராதபுரத்தில் புத்த பிக்ஷுக்களின் மகா சங்கத்தார் எனக்கு இலங்கைச் சிங்காதனத்தையும் கிரீடத்தையும் அளிக்க முன் வந்தார்கள். நான்தான் மறுத்து விட்டேன். அக்கா! இராஜ்யத்தில் எனக்கு ஆசையில்லாதபடியால்தான் மறுதளித்தேன். நீ வேறு எது சொன்னாலும் கேட்கிறேன். இராஜ்யம் ஆளும் தொல்லை மட்டும் எனக்கு வேண்டாம்! அதைக் காட்டிலும் கடலில் படகு விட்டுக்கொண்டு எவ்வளவோ ஆனந்தமாயிருக்கலாம். கேள், அக்கா! கோடிக்கரையில் ஓடக்காரப் பெண் ஒருத்தி இருக்கிறாள்..."

இதைக்கேட்ட பூங்குழலியின் உடம்பெல்லாம் புளகாங்கிதமடைந்தது. வந்தியத்தேவனுக்கோ ஆத்திரம் வந்தது. மேலே என்ன சொல்லப் போகிறாரோ என்று கேட்க இருவரும் அடங்கா ஆர்வம் கொண்டிருந்தனர். ஆனால் திடீரென்று இந்த இடத்தில்

இளவரசருக்குச் சுய உணர்வு கொஞ்சம் வந்ததாகத் தோன்றியது.

சுற்று முற்றும் விழித்துப் பார்த்து விட்டு, "இன்னும் கோடிக்கரை வரவில்லையா?" என்று ஈன சுவரத்தில் கேட்டார் இளவரசர்.

வந்தியத்தேவன் "அதோ கரை தெரிகிறது!" என்றான். இளவரசரிடம் யோசனை கேட்கலாமா? வேண்டாமா என்று அவன் யோசிப்பதற்குள் மீண்டும் இளவரசர் நினைவை இழந்து சுரப்பிராந்தி உலகத்துக்குப் போய் விட்டார்.



இளவரசர் கடைசியாக ஓடக்காரப் பெண்ணைப் பற்றிக் கூறிய வார்த்தைகள் பூங்குழலியின் மனத்தில் எண்ண அலைகளை எழுப்பி விட்டிருந்தன. வந்தியத்தேவனையும் இளவரசரையும் பார்ப்பதற்கே அவளுக்குக் கூச்சமாயிருந்தது. ஆகையால் படகு சென்ற திசையையே பார்த்த வண்ணம் துடுப்பைப் போட்டுக்கொண்டிருந்தாள். அதுகாறும் கப்பல் நின்ற இடத்தை நோக்கிச் சென்ற படகு இப்போது திசை திரும்பித் தென்மேற்குப் பக்கமாகச் சென்று கொண்டிருந்தது.

இருட்டுகிற நேரத்தில் கடலிலிருந்து பூமிக்குள் குடைந்து சென்ற கால்வாயின் உள்ளே பிரவேசித்தது.

பூங்குழலி கூறியது போலவே அங்கே இரு புறமும் கரைகள் உயர்ந்த மேடாக இருந்தன. அந்த மேட்டுக் கரைகளில் மரங்கள் அடர்த்தியாகவும் உயரமாகவும் வளர்ந்திருந்தன.

படகைக் கரையோரமாக நிறுத்தி விட்டுப் பூங்குழலி மெல்லிய குரலில் "ஐயா! சற்றுப் படகைப் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி விட்டுக் கரையில் இறங்கினாள். கரையில் வளர்ந்திருந்த உயரமான ஒரு மரத்தின் மேல் ஏறிச் சுற்று முற்றும் பார்த்தாள். பிறகு அவசரமாக இறங்கி வந்தாள். "நல்ல வேளை! இங்கே வந்தோம். கடற்கரையோரமாகச் சுமார் ஒரு காத தூரத்துக்கு ஆட்கள் நின்று காவல் புரிகிறார்கள். கலங்கரை விளக்கின் அருகில் ஒரே கூட்டமும் கோஷமுமாக இருக்கிறது!" என்றாள்.

"யாராயிருக்கும் என்று ஏதாவது தெரிகிறதா?" என்று வந்தியத்தேவன் ஆவலுடன் கேட்டான்.

"நன்றாய்த் தெரியவில்லை. ஆனால் பழுவேட்டரையரின் ஆட்களாய்த்தான் இருக்க வேண்டும். வேறு யாராயிருக்க முடியும்?

எப்படியிருந்தாலும் நான் சொன்ன இடத்துக்கு முதலில் போய்ச் சேருவோம். இரவு இரண்டாம் ஜாமத்துக்குள் நான் என் வீட்டுக்குப் போய் எல்லாவற்றையும் நிச்சயமாய்த் தெரிந்து கொண்டு வருகிறேன்" என்றாள்.

"பெண்ணே! உன்னை யாராவது பார்த்து விட்டால் என்ன செய்கிறது? உனக்கு ஏதேனும் இச்சமயம் நேர்ந்துவிட்டால், எங்கள் கதி அதோ கதிதான்!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! என் உயிரைப் பற்றி இத்தனை நாளும் நான் இலட்சியம் செய்ததில்லை. இன்றைக்குத்தான் கவலை பிறந்திருக்கிறது. இளவரசருக்கு அபாயம் நீங்கும் வரையில் என் உயிருக்கு ஒன்றும் வராது!" என்றாள்



பூங்குழலி.

படகு கால்வாய்க்குள் மெள்ள மெள்ளச் சென்றது. சத்தம் சிறிதும் வெளியில் கேளாத படி மிக மெதுவாகப் பூங்குழலி துடுப்பு வலித்தாள்.



கால்வாயின் இருபுறமும் இருள் சூழ்ந்திருந்தது. கரை ஓரமாக உயர்ந்து வளர்ந்திருந்த மரங்களின் கரிய நிழல்கள் கால்வாயில் விழுந்து அதன் கரிய நீரை மேலும் கரியதாக்கின.

வானத்திலிருந்து விண்மீன்கள் எட்டிப் பார்த்தன. வந்தியத்தேவனைப் போலவே நட்சத்திரங்களும் மிகுந்த கவலையுடன் அப் படகின் போக்கைக் கவனித்ததாகத் தோன்றியது.

நீரில் பிரதிபலித்த நட்சத்திரங்கள், கரையிலிருந்து மரங்கள் காற்றில் ஆடியபோது, அவற்றின் நிழலும் ஆடியபடியால், அடிக்கடி சலனமடைந்து கொண்டிருந்தன. வந்தியத்தேவனுடைய உள்ளத்தின் சஞ்சலத்தை அவை சரியாகவே பிரதிபலித்தன.

ஒரு யுகம் போலத் தோன்றிய ஒரு நாழிகை நேரம் படகு கால்வாயில் சென்ற பிறகு, பூங்குழலி படகைக் கரையோரமாக நிறுத்தினாள்.

பூங்குழலி கால்வாயின் கரை மீதேறிக் காட்டு வழியில் புகுந்து சென்றாள். அதாவது அவளுடைய உடம்பு சென்று கொண்டிருந்தது. அவளுடைய உயிர் கால்வாயில் விட்டிருந்த படகிலேயே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அந்த முன்னிருட்டு நேரத்தில் முட்செடிகள், மேடு பள்ளங்கள், காட்டு ஜந்துக்கள் ஒன்றையும் இலட்சியம் செய்யாமல் அதிவிரைவாக நடந்து சென்றாள். தடைகள் இல்லாத இடங்களில் ஓடவும் செய்தாள். நேரே கோடிக்கரைக் குழகர் கோயிலைக் குறி வைத்துக்கொண்டு போனாள். அவள் கோயில் வாயிலை அடைந்ததற்கும் குருக்கள் சுவாமி சந்நிதியின் கதவைப் பூட்டுவதற்கும் சரியாக இருந்தது.

அக்கம்பக்கம் பார்த்து வேறு யாரும் இல்லை என்று தெரிந்துகொண்டாள். கதவைப் பூட்டி விட்டுத் திரும்பிய குருக்கள் எதிரில் போய் நின்றாள்.

குருக்கள் அவளை அந்த நேரத்தில் பார்த்துச் சிறிது வியப்படைந்தார். அவளுடைய சுபாவத்தை நன்கு அறிந்தவராயிருந்தும்கூடக் கொஞ்சம் திடுக்கிட்டுத் திகைத்துப் போய்விட்டார்.

"நீயா, பூங்குழலி! வேறு யாரோ என்று பார்த்தேன். கோடிக்கரை முழுதும்தான் ஒரே அமர்க்களப்படுகிறதே! எங்கே அம்மா, உன்னைக் கொஞ்ச நாளாகக் காணோம்? இவ்வளவு தடபுடலிலும் உன்னைப் பற்றித் தகவல் இல்லையே என்று இன்று சாயங்காலம்கூட யோசித்தேன்" என்றார்.

"வெளியூருக்குப் போயிருந்தேன். சுவாமி! ஏதோ அமர்க்களமாயிருக்கிறதேயென்றுதான் உங்களிடம் விசாரிக்கலாம் என்று வந்தேன். கடற்கரையெல்லாம் நிற்பவர்கள் யார்?" என்று பூங்குழலி கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமே தெரியாதா? வீட்டுப் பக்கம் போகவில்லையா?"

"வீட்டுப் பக்கம் போனேன். அங்கே யார் யாரோ கூட்டமாயிருக்கவே திரும்பி விட்டேன். புது மனிதர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது என்றுதான் உங்களுக்குத் தெரியுமே? வந்திருப்பவர்கள் யார்?"

"பெரிய பழுவேட்டரையர் வந்திருக்கிறார். அவருடைய இளையராணி வந்திருக்கிறாள். அவர்களுடைய பரிவாரங்கள் வந்திருக்கிறார்கள். இன்னும் காஞ்சிபுரத்துப் பார்த்திபேந்திர பல்லவனாம்! அவனும் வந்திருக்கிறான். வெறுமனே வரவில்லை. பயங்கரமான செய்தியுடன் வந்திருக்கிறான். உனக்கு அதுகூடத் தெரியாதா, பூங்குழலி?"

"அது என்ன பயங்கரமான செய்தி? எனக்கு ஒன்றுமே தெரியாதே!"

"அந்தப் பாவியினுடைய கப்பலில் இளவரசர் பொன்னியின் செல்வரும் வந்தாராம். வழியில் சுழற்காற்று அடித்ததாம். யாரையோ காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்து விட்டாராம். பிறகு அகப்படவேயில்லையாம்! ஒருவேளை இந்தக் கடற்கரையில் வந்து ஒதுங்குவாரோ என்று பார்ப்பதற்காகத்தான் பழுவேட்டரையரின் ஆட்கள் கோடிக்கரையெங்கும் அலைகிறார்கள். பழுவேட்டரையரும் அலைகிறார். ஏன், அவருடைய இளையராணி கூட அலைகிறாள். சற்று முன்னால் இங்கேகூட அந்த அம்மாள் வந்திருந்தாள். பூங்குழலி! பழுவூர் இளையராணியைப் பற்றி ஜனங்கள் என்னவெல்லாமோ பேசிக்கொள்கிறார்களே, அதெல்லாம் சுத்தத் தவறு! நம் இளவரசருக்கு நேர்ந்த கதியைக் குறித்து அந்த அம்மாள் எப்படித் துடிதுடிக்கிறாள் தெரியுமா?"

"அப்படியா, குருக்களய்யா? பழுவூர் ராணியின் நல்ல குணத்தைப் பற்றித் தாங்கள் சொல்வது எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. ஆனால் இங்கே எதற்காக அந்த ராணி வந்தாளாம்?"



"இளவரசர் எப்படியாவது உயிரோடு அகப்பட வேண்டும் என்று குழகரைப் பிரார்த்தித்துக் கொள்வதற்காக வந்தானாம். உன்னைப்போல் எல்லாரும் கல் நெஞ்சு படைத்தவர்களாயிருப்பார்களா? இளவரசரைப் பற்றிய பயங்கரச் செய்தி கேட்டுக் கூட நீ துளிக்கூடக் கலங்கவில்லையே?"

"நாம் கலங்கி என்ன பயன் சுவாமி? எல்லாம் விதியின்படி நடக்கும் என்று நீங்களே எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறீர்களே! அது போனால் போகட்டும். அவ்வளவு பெரிய மனிதர்கள் வந்திருக்கும்போது நான் என் வீட்டுக்குப் போக விரும்பவில்லை. கையிலே வைத்திருக்கும் பிரஸாதத்தை என்னிடம் கொடுத்துவிட்டுப் போங்கள். நான் இங்கேயே சாப்பிட்டு விட்டுக் கோவிலிலேயே இருந்து விடுகிறேன்."

"நீ ஒரு தனிப் பிறவிதான், பூங்குழலி!

பெரிய மனிதர்கள் வந்தால் எல்லாரும் அவர்களைப் போய்ப் பார்க்கவும் பழக்கம் செய்து கொள்ளவும் விரும்புவார்கள். உனக்கு வேற்று மனிதர்களையே பிடிப்பதில்லை. அதிலும் பெரிய மனிதர்கள் என்றால் ஒரே பயம். பெரிய மனிதர்கள் என்றால் உன்னைக் கடித்து விழுங்கி விடுவார்களா? எதற்காக இந்தக் காட்டில் தனியே இருக்க வேண்டும்?"

"குருக்களய்யா! பிரஸாதத்தைக் கொடுக்க உங்களுக்கு இஷ்டமில்லாவிடில் வேண்டாம். என்னை வீணில் திட்டாதீர்கள்!"

"சிவ சிவா! உன்னை ஏன் நான் திட்டுகிறேன்? இந்தப் பிரஸாதம் உன் பசிக்குப் போதாதே என்று பார்த்தேன். தாராளமாய் வாங்கிக்கொள்!" என்று அர்ச்சகர் துணியில் கட்டி வைத்திருந்த சுவாமி பிரஸாதத்தைக் கொடுத்தார்.

மூட்டையை வாங்கிப் பூங்குழலி பிரித்துப் பார்த்துவிட்டு "என் பசிக்கு இது போதாதுதான்! அவ்வளவு பெரிய சுவாமிக்கு இவ்வளவு குறைவாக நைவேத்தியம் வைக்கிறீர்களே! இது நியாயமா, சுவாமி! போனால் போகட்டும்! அந்தக் கெண்டியில் என்ன இருக்கிறது? குடிக்கிற ஜலமா?"

"இல்லை, சுவாமிக்கு அபிஷேகம் செய்த பால்! குழந்தைக்காக எடுத்துக் கொண்டு போகிறேன்."

"இன்றைக்கு நானே உங்கள் குழந்தையாயிருக்கிறேன். அதையும் கொடுத்து விட்டுப் போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு."

"நல்ல பெண் அம்மா, நீ! போகட்டும். கெண்டியையாவது பத்திரமாய் வைத்திரு!"

இவ்விதம் சொல்லிக் குருக்கள் கெண்டியையும் பூங்குழலியிடம் கொடுத்தார்.

அச்சமயம் தூரத்தில் எங்கிருந்தோ ஆந்தையின் குரல் கேட்டது.

பூங்குழலி சிறிது திகைத்து, "ஐயா! அது என்ன சத்தம்?" என்று கேட்டாள்.

"தெரியவில்லையா, அம்மா! கோட்டான் கூவுகிறது. இந்தக் கோடிக்கரைக் காட்டில் கோட்டானுக்கா பஞ்சம்!" என்று சொன்னார் குருக்கள்.

மறுபடியும் அந்தக் குரல் கேட்டது.

"ஆமாம்; கோட்டான் குரல் மாதிரிதான் இருக்கிறது!" என்றாள் பூங்குழலி.

"உன்னை ஒரு கோட்டானும் ஒன்றும் செய்யாது. கோயில் பிராகாரக் கதவைத் தாளிட்டுக் கொண்டு படுத்துக் கொள் அம்மா!" என்று சொல்லிவிட்டுக் குருக்கள் நடையைக் கட்டினார்.

குருக்கள் மறைந்ததும் பூங்குழலியும் புறப்பட்டாள். பிரஸாதத்தை மடியில் கட்டிக் கொண்டு, கெண்டியைக் கையில் எடுத்துக்கொண்டு கிளம்பினாள்.

கோட்டானின் குரல் கேட்ட திசையை நோக்கிச் சென்றாள். கொஞ்ச தூரம் போனதும் ஒரு குறுகிய வாய்க்கால் குறுக்கிட்டது. அதன் இருபுறமும் தாழம்பூப் புதர்கள் காடாக மண்டி வளர்ந்திருந்தன.

அந்த வாய்க்காலின் கரையைப் பிடித்துக்கொண்டே பூங்குழலி நடந்தாள். தாழம்பூச் செடிகளின் முட்கள் சில சமயம் அவளைக் குத்தின. அதை அவள் பொருட்படுத்தவில்லை.

தாழம் பூக்கள் வெடித்து மலர்ந்து நறுமணத்தைப் பரப்பின. அந்த மணம் மற்றவர்களைப் போதை கொள்ளச் செய்திருக்கும். ஆனால் பூங்குழலிக்கு அந்த ஞாபகம் கூட வரவில்லை.

கரையோடு காலடிச் சத்தம் கேளாதபடி மெள்ள மெள்ள நடந்து போனாள். அவள் செவிகள் வெகு கவனமாக உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தன. காட்டுப் பிரதேசத்தில் இரவில் எத்தனையோ விதவிதமான சத்தங்கள் கேட்கும் அல்லவா? அவையெல்லாம் அவளுடைய கவனத்தைக் கவரவில்லை.

பின்னர், அவள் என்ன சத்தத்தைத்தான் எதிர்பார்த்தாள்! இதோ!

இருவர் மெல்லிய குரலில் பேசும் சத்தம் கேட்டது.

ஒன்று ஆண் குரல்; இன்னொன்று பெண்ணின் குரல்.

பூங்குழலி நன்றாக மறைந்து நின்று கொண்டாள். அவர்கள் பேசுவது இன்னதென்பதைக் கவனமாக உற்றுக் காது கொடுத்துக் கேட்டாள்.

"மந்திரவாதி! இளவரசர் கடலில் விழுந்து இறந்து விட்டதாகத்தான் உன்னைப் போல் எல்லாரும் நம்புகிறார்கள். பழுவேட்டரையரும் உருகி மாய்கிறார். ஆனால் நான் நம்பவில்லை!" என்று அந்தப் பெண் குரல் கூறியது.

(தொடரும்)



இதிகாச புராணங்களிலும் உலக மகா இலக்கியங்களிலும் முப்பத்திரண்டு இலட்சணங்கள் பொருந்திய இலட்சிய புருஷர்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது. அத்தகையவர்களைக் கதாநாயகர்களாக வைத்துக்கொண்டு இதிகாச இலக்கியங்கள் புனையப்படுகின்றன. அப்படிப்பட்டவர்களுடைய வீர பௌருஷ சாகஸச் செயல்களைப் பற்றியே உலக சரித்திரமும் அதிகமாகக் கூறுகின்றது. அந்த இலட்சிய புருஷர்களால் அவர்கள் பிறந்த தேசங்களுக்குப் பெயரும் புகழும் மேன்மையும் மேட்டிமையும் ஏற்படுகின்றன.

பாக்கியம் செய்த தேசங்களிலே அத்தகைய முப்பத்திரண்டு இலட்சணங்களும் பொருந்திய இலட்சிய புருஷர் ஒருவர் பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை ஜனனம் ஆகிறார். அவருடைய முகத்தின் காந்தி மக்களை வசிகரம் செய்கிறது. அவருடைய உள்ளத்தின் ஒளி அவருடைய வாக்கிலே பிரகாசிக்கிறது.

**அமரர் கல்கி**

அவருடைய வீரமும் தீரமும் ஒழுக்கமும் நடத்தையும் சுயநலத் தியாகமும் பொதுநலச் சேவையும் மக்களின் இதய சிம்மாசனத்தில் அவரை ஏற்றி வைத்து ராஜாதி ராஜராகச் செய்கின்றன.

அப்பேர்ப்பட்ட இலட்சிய புருஷரைத் தரிசனம் செய்வதற்கு ஜனங்கள் ஓடோடியும் வருகிறார்கள். மணிக்கணக்கிலும் நாள் கணக்கிலும் அலுக்காமல் சலிக்காமல் அவருக்காகக் காத்திருக்கிறார்கள். அவருடைய திருமுகத்தை ஒரு கணம் பார்த்தவுடனே பரவசமடைந்து விடுகிறார்கள். அவருடைய குரலைக் கேட்டதும் மெய்ம்மறந்து புளகாங்கிதம் அடைகிறார்கள். அவரைப் பார்த்த கண்களும் அவருடைய வாய்மொழிகளைக் கேட்ட செவிகளும் பாக்கியம் செய்தவை என்று கருதுகிறார்கள்.

அத்தகைய இலட்சிய புருஷர்களிடம் அபூர்வமாக ஏதேனும் குற்றம் குறை இருந்தால் சாதாரணமாக அது மக்களின் கண்ணில் படுவதில்லை. அப்படித் தெரிந்த போதிலும் அந்தக் குற்றங்குறை கூட அவருடைய மேன்மைக்கு அறிகுறி என்று ஜனங்கள் சாதிப்பார்கள். அதற்காக வாதாடவும் போராடவும் சித்தமாயிருப்பார்கள். அந்த இலட்சிய புருஷரே "என்னிடம் இந்தக் குறை இருக்கிறது!" என்று எடுத்துச் சொன்னால்கூட, "அதெல்லாம் ஒன்றுமில்லை. அவருடைய மேன்மைக் குணத்தினால் அவ்விதம் சொல்லிக் கொள்கிறார்!" என்று ஜனங்கள் கூறுவார்கள்.

"மனிதர்களைத் தெய்வமாக்குவது பெரும் பிசகு; என்னைப் போற்றாதீர்கள், புகழாதீர்கள்!" என்று அவர் சொன்னால், "அடாடா! என்ன அடக்கம்? என்ன குணம்? தெய்வாம்சந்தான்!" என்று மேலும் போற்றி மகிழ்வார்கள்.

உலகத்து இலட்சிய மகா புருஷர்களின் வம்ச பரம்பரையில் உதித்தவர் நம்முடைய நாட்டில், நம்முடைய காலத்தில் ஒருவர் இருக்கிறார் என்பதும், அவர்தான் பண்டித ஜவாஹர்லால் நேரு என்பதும் சென்ற வாரத்தில் ஜவாஹர்லால்ஜி சென்னைக்கு விஜயம் செய்தபோது ஐயமற

# கடல் பொங்கியது! கரை புரண்டது!

நிருபணமாயின.

ஜூலை மாதம் 24உ பிற்பகல் 2.30க்கு ஜவாஹர்லால்ஜி மீனம்பாக்கம் விமானக் கூடத்தில் வந்து இறங்கினார். அவர் மவுண்ட்ரோடு வழியாக நகரசபை மண்டபத்துக்குத் திறந்த வண்டியில் செல்லுவார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. சைதாப்பேட்டையிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் மக்கள் மத்தியானம் பன்னிரண்டு மணியிலிருந்து வந்து சாலையில் இருபுறமும் நிற்கத் தொடங்கினார்கள்.

முதலில் விசாலமாய் ஒற்றை வரிசையாக நின்றார்கள். அப்புறம் நெருங்கி நின்றார்கள். மனிதச் சுவரின் அகலம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டிருந்தது. புருஷர்களும் ஸ்திரீகளும் வயோதிகர்களும் பாலகர்களும் சகல இனத்தாரும் பற்பல அந்தஸ்து படைத்தவர்களும் ஒன்றாகத் திரண்டு வந்து தோளோடு தோள் சேர்ந்து நின்றார்கள். விசாலமான மவுண்ட் ரோட்டின் மத்தியில் ஒரு கார் போவதற்கு மட்டுமே இடம் இருக்குமாறு சில இடங்களில் அவ்வளவு ஜனக்கூட்டம் சேர்ந்துவிட்டது. தேனாம்பேட்டையிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் நின்ற ஜனங்களின் எண்ணிக்கை லட்சக்கணக்கில் இருக்கும்.

திறந்த மோட்டார் வண்டியில் நின்றுகொண்டு மலர்ந்த முகத்தோடும் கூப்பிய கைகளோடும் இருபுறமும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டு சென்ற ஜவாஹர்லாலை ஜனங்கள் பார்த்தார்கள்; மகிழ்ந்தார்கள்; ஜெயகோஷம் செய்தார்கள். இளம் பிள்ளைகள் மெய்ம்மறந்து குதித்தார்கள், கூச்சலிட்டார்கள்; கூத்தாடினார்கள்.

இத்துடன் ஜனங்களின் ஆர்வம் தீர்ந்துவிட்டதா? இல்லவே இல்லை. மூன்று தினங்களும் ஜவாஹர்லால்ஜி எங்கெங்கே போனாலும் அங்கேயெல்லாம் ஜனங்கள் திரண்டு போய்க் காத்துக் கொண்டிருந்தார்கள். பார்க்காதவர்கள் ஆர்வத்துடன் ஓடி வந்து நின்றார்கள். பார்த்தவர்கள் மீண்டும் பார்க்கும் ஆசையோடு நின்றார்கள்.

நகரசபை மண்டபத்தைச் சுற்றி ஆயிரம் பதினாயிரம் ஜனங்கள் நெருங்கி நின்றார்கள். சட்டசபை மண்டபத்துக்கு வெளியில் பல்லாயிரம் ஜனங்கள் ஆவலோடு காத்திருந்தார்கள். ஹிந்திப் பிரசார சபைக்கு உள்ளேயும் வெளியிலேயும் நாற்பதினாயிரம் ஜனங்கள் சேர்ந்திருந்தார்கள். கவர்ன்மெண்ட் மாளிகையின் வாசலில் மூன்று நாளும் இடைவிடாத ஜனக்கூட்டம், மஹிலா சமாஜ் வாசலில் பெருங்கூட்டம். விவேகானந்தா காலேஜுக்கு எதிரில் ஏராளமான கூட்டம். மியூஸியம் தியேட்டருக்கு அருகில் அமோகமான கூட்டம். கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் கூட்டத்தைச் சொல்லி முடியாது.

சென்னை மக்கள் ஜவாஹர்லால்ஜியிடம் கொண்ட பிரேமையை உள்ளபடி தெரிந்து கொள்வதற்கு ஞாயிற்றுக்கிழமை மாலை கோட்டை மைதானத்தில் கூடியிருந்த மகத்தான கூட்டத்தைப் பார்த்திருக்க வேண்டும். சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கவர்ன்மெண்ட் மாளிகை வரையில் கிழக்கே கடற்கரைச் சாலை வரையில் ஒரே ஜன சமுத்திரம்தான். சிலர் "ஐந்து லட்சம்" என்று மதிப்பிட்டார்கள். சிலர் "பத்து லட்சம்" என்று மதிப்பிட்டார்கள். இரண்டுக்கும் மத்தியில் ஏழெட்டு லட்சம் ஜனங்கள் இருக்கலாம்" என்று பலர் கருதினார்கள்.

இத்தனை லட்சம் மக்களுடைய மனத்திலும் வெகு காலமாகப் பொங்கிக் கொண்டிருந்த அன்பையும் ஆர்வத்தையும் யார்மேல் பொழிவது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தது போலும், கடைசியில் அதற்குத் தக்க பாத்திரம் வந்ததும் அவர்மீது பொழிந்தது போலும் காணப்பட்டது. பூரண சந்திரனைக் கண்ட சமுத்திரம் பொங்குவது போல் மூன்று நாட்களும் சென்னை நகரத்து மக்களின் இதயக் கடல் பொங்கியது; அன்பு வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

●●● ●●● ●●●

இவ்வளவு மக்களின் அன்புக்கும் ஆசைக்கும் சரியான பாத்திரம் தாம் என்பதை ஜவாஹர்லால்ஜியும் நன்கு நிரூபித்து விட்டார். மீனம்பாக்கம் விமான

மைதானத்தில் 24உ பிற்பகல் இறங்கியதி லிருந்து திரும்ப 27உ காலை விமானம் ஏறும்வரையில் ஒரு நிமிஷமேனும் ஜவா ஹர்லால்ஜிக்கு ஓய்ச்சல் ஒழிவென்பதே கிடையாது. தினம் பத்துப் பன்னிரண்டு நிகழ்ச்சிகளில் பிரசந்நமாகிக் கலந்து கொண்டார். குறிப்பிட்ட காலம் தவறா மல் அந்தந்த நிகழ்ச்சிக்குப் போய்ச் சேர் வதற்காக ஓடி ஓடிச் சென்றார். மோட் டாரிலும் சென்றார்; விமானத்திலும் சென்றார்; கால்நடையாகவும் சென்றார். மக்கள் கூட்டத்தின் மத்தியில் புகுந்து தமக் குத் தாமே வழி ஏற்படுத்திக் கொண்டு சென்றார். ஒளி படைத்த விசாலமான கண்களைச் சுழற்றிச் சுழற்றி அவர் மக் களின் முகங்களை உற்று உற்றுப் பார்த் தார்; மக்களும் ஆர்வம் ததும்பிய கண் களோடு அவரைக் கண்கொட்டாமல் பார்த்தனர். மக்களின் அன்பினால் அவர் பரவசமடைந்தார்; அவருடைய அன்பி னால் மக்கள் உள்ளமும் தலைவரின் உள்ளமும் நெகிழ்ந்து ஒன்று கலந்தன.

ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஜவாஹர் லால்ஜி பேசினார். அந்தந்த இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் தகுந்தபடி பேசினார். ஆனால் அவர் பேசிய ஒவ்வொரு வார்த் தையும் சக்தி நிறைந்த வார்த்தையாயிருந் தது; பசுமரத்தாணிபோல் மக்கள் மனத் தில் பதிந்தது. அவர் இனிய வார்த்தை களையும் பேசினார்; கடுமையான வார்த்தைகளையும் பேசினார். ஆனால் இனிய வார்த்தையானாலும் கடும் வார்த் தையானாலும் அது உள்ளத்திலேயிருந்து உணர்ச்சியுடன் வெளிவந்த உண்மை வார்த்தையாயிருந்தது ஆகையால், கேட்ட வர்களின் மனத்தில் அவருடைய பேச்சு பக்தி சிரத்தையை உண்டாக்கியது.

●●● ●●● ●●●

**கா**ரைக்குடி வைபவத்தில் கூடி யிருந்த திரளான மக்களிடையில் பண்டித ஜவாஹர்லால் நேரு, "இந்தியாவிலிருந்து தரித்திரத்தை ஒழித்துக் கட்டுவோம்; வறு மையைக் களைந்தெறியக் கங்கணம் பூணு வோம்!" என்று உறுதிமொழி புகன்றார். "இந்த அரிய திருப்பணிக்கு விஞ்ஞான ஆராய்ச்சியின் உதவியை நாடுவோம்!" என்றார்.

சென்னை நகர சபையின் உபசாரத்துக் குக் கூறிய பதிலில் "வகுப்புவாத பூதத் துக்கு இனி இந்தியாவில் இடமில்லை; மாறுவேடம் பூண்டு வந்தாலும் அதைத் தொலைத்து முழுக வேண்டும்; மாகாண வாதம் என்னும் பிசாசையும் அடித்து விரட்டத்தான் வேண்டும்" என்று எச் சரித்தார். சென்னை மாகாணவாசிகளின் மதிநுட்பத்தைப் பாராட்டினார். "அகில இந்திய நோக்கத்துடன் எந்தப் பிரச்னை யையும் சிந்தியுங்கள்; சிந்தித்து, வடக்கே குழப்பத்தில் ஆழ்ந்துள்ள எங்களுக்கு வழி காட்டுங்கள்!" என்று கேட்டுக்கொண் டார்.

சட்டசபை மண்டபத்தில் நமது அருமைத் தலைவர் ராஜாஜியைப் பற்றிய அற்புதமான உண்மையை வெளியிட் டார். "வாய்ப்பேச்சில் ஒரு மனிதர் வெளியிடும் கொள்கையும் திட்டமும் அவ்வளவு முக்கியமானவையல்ல; மனி தருடைய நேர்மையும் சீலமுந்தான் பரம முக்கியமானவை. நேர்மையிலும் சீலத் திலும் இணையற்றவர் ராஜாஜி. ஆகை யினால்தான் இந்திய சுதந்திர ராஜ்யத்தில் முதன்மையான பதவிக்கு அவர் வந்திருக் கிறார்!" என்று கூறினார்.

நகரசபை ஸ்டேடியத்தில் தொழிலாள ரின் மாபெரும் கூட்டத்தில் ஜவாஹர் லால்ஜி அருமையான பிரசங்கம் செய் தார். "ஏழைத் தொழிலாளிகளின் முன் னேற்றமே எங்களுடைய பிரதான இலட் சியம். வேறு எதற்காக இவ்வளவு பகீரதப் பிரயத்தனங்கள் செய்து சுதந்தரம் பெற் றோம்?" என்று கேட்டுவிட்டு, "இந்தச் சம யத்தில் நாட்டில் கலகத்தையும் குழப்பத் தையும் விளைவிக்க விரும்புகிறவர்கள் தான் தொழிலாளரின் முன்னேற்றத்துக் குப் பரம விரோதிகள்; அவர்களைச் சும்மா விட மாட்டோம்! அழித்துப் போடுவோம்!" என்று கர்ஜனை புரிந்தார்.

ஹிந்திப் பிரசார சபையின் புதிய கட்டடத்தைத் திறந்து வைத்துப் பேசுகை யில், தமிழ் மொழியின் தொன்மையையும் தமிழ் இலக்கியங்களின் மேன்மையையும் குறிப்பிட்டார். "ஹிந்தி பாஷையில் அப் படிப்பட்ட இலக்கியம் ஒன்றுமில்லை. மாகாணத்துக்கு மாகாணம் சம்பந்தம் வைத்துக் கொள்வதற்கே ஹிந்தி மொழி யைப் பரப்ப வேண்டும் என்கிறோம். அந்

தந்த மாகாணத்தின் தாய் பாஷைக்கு ஹிந்தி இளைய சகோதரியாயிருக்கும்'' என்று விளக்கிக் கூறினார்.

கோட்டை மைதானத்தில் கூடியிருந்த மாபெருங் கூட்டத்தில் பிரதம மந்திரி ஜவாஹர்லால் ஒரு மகத்தான பிரசங்கம் செய்தார். சென்னை மக்களைச் சில கால மாகப் பெரிதும் கலக்கிக் கொண்டிருக்கும் விஷயத்தைப் பற்றிப் பேசினார். "நைஜாம் இந்திய யூனியனில் சேர்ந்தேயாக வேண் டும்; சேராவிட்டால் நைஜாம் என்ற தனி ராஜ்யமே இராது! அதைப் பற்றிச் சந்தே கமே வேண்டியதில்லை!'' என்று சபதம் கூறினார்.

நம்மவர்களில் சில புத்திசாலிகள் பண்டித நேருவையும் சர்தார் படேலை யும் விடத் தாங்கள் கெட்டிக்காரர்கள் என்றும் தேச பக்தி ததும்பப் பெற்றவர் கள் என்றும் நினைத்துக்கொண்டுவிடு கிறார்கள். நினைத்துக்கொண்டு, "நைஜாம் விஷயத்தில் இந்திய சர்க்கார் சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்! உடனே நைஜாம் மீது போர் தொடங்க வேண் டாமா? அதை விட்டு வெறும் பேச்சில் காலங் கழிக்கிறார்களே! சுத்த மோசம்!'' என்று உளறிக் கொட்டுகிறார்கள். இத் தகையவர்களுக்கு ஜவாஹர்லால் நேரு வின் பேச்சு தக்க பதிலாக வாய்த்தது. "நைஜாம் மீது யுத்தம் தொடங்குவது என்ன? சுதந்திர ராஜ்யமாயிருந்தால் அல் லவா அதன் பேரில் யுத்தம் தொடங்க லாம்? நைஜாம் இந்தியாவுக்குட்பட்டது; ஆதலின் அவசியமானால் எந்தச் சமயத் திலும் இராணுவ நடவடிக்கை எடுப் போம். எப்போது, எந்தவிதமாக என்பதை எங்களுக்கு விட்டு விடுங்கள்!'' என்றார்.

நைஜாமில் நடக்கும் அக்கிரமங்களைக் கேட்க எல்லாருக்கும் இரத்தம் கொதிக்கத் தான் கொதிக்கிறது. ஜவாஹர்லாலுக்கும் படேலுக்கும் அப்படிக் கொதிக்காம லிருக்குமா? கட்டாயம் கொதிக்கத்தான் செய்யும். எவ்வளவுதான் இரத்தம் கொதித்தாலும் ஒரு அரசாங்கம் நட வடிக்கை எடுக்கும்போது எல்லாவித பலா பலன்களையும் யோசித்துச் செய்தல் அவசியம். முக்கியமாக, நைஜாமில் வசிக் கும் ஒரு கோடிக்கு மேற்பட்ட ஜனங் களுக்கு இப்போதைக் காட்டிலும் அதிகக் கஷ்டம் சர்க்கார் நடவடிக்கையால் உண் டாகக் கூடாதல்லவா? இதையும் ஜவா ஹர்லால்ஜி குறிப்பிட்டார். நைஜாம் விஷ யத்தில் ஜவாஹரின் சர்க்கார் கட்டாயம் சரியான நடவடிக்கை எடுப்பார்கள் என் பது நிச்சயம். அந்தச் சமயம் வரும்போது நம்முடைய கடமையைச் செய்ய நாம் தயாராயிருக்க வேண்டும்.

"உங்களுடைய பிரதிநிதிகள் நாங்கள். உங்களுடைய சார்பாகவே ராஜ்யம் நடத்துகிறோம். எங்களுடைய காரியங் களில் குறைகள் இருந்தால் எடுத்துக் காட் டுங்கள். ஆனால் குறை கூறுவதுடன் நின்று விடாதீர்கள். இந்தியாவின் முன் னேற்றத்துக்காக உங்களில் ஒவ்வொரு வரும் ஏதேனும் ஒரு தொண்டு செய்யுங் கள்!'' என்று கேட்டுக் கொண்டார். அவரு டைய வேண்டுகோளை நிறைவேற்றுவது நமது தலைசிறந்த கடமையாகும்.

**ப**ண்டித ஜவாஹர்லால்ஜி இந்திய சுதந்தரப் போரில் ஈடுபட்ட நாளிலிருந்து பொதுமக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர். இந்தியாவின் எந்த மூலைக்கு அவர் எப் போது சென்றாலும் மக்கள் குதூகலமாக வரவேற்கவே செய்வார்கள். இதற்கு முன் னால் தமிழ்நாட்டுக்கு ஜவாஹர் விஜயம் செய்தபோதும் அளவில்லா உற்சாகத்து டன் தமிழ் மக்கள் அவரை வரவேற் றார்கள்; அன்பைச் சொரிந்தார்கள்.

எனினும் இந்தமுறை சென்னைக்கு அவர் விஜயம் செய்ததில் முன்னெப் போதுமில்லாத ஒரு விசேஷம் உண்டு. மக்களின் மனதைக் கவர்ந்த தேசபக்த திலகமாக மட்டும் அவர் இம்முறை வர வில்லை. இந்திய சுதந்தர சர்க்காரின் பிரதம மந்திரியாய், முப்பத்தைந்து கோடி மக்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதியாய் இம்முறை நேருஜி விஜயம் செய்தார். எனவே அவருக்குத் தனிப்பட அளிக்க வேண்டிய மரியாதையோடு அவர் வகிக் கும் உயர்ந்த ஸ்தானத்திற்கு உரிய மரியா தையையும் சேர்த்து அளிப்பது முறையா கும். அந்தக் கடமையைப் பரிபூரணமாக நிறைவேற்றியது பற்றிச் சென்னை மக் களுக்கு நமது பாராட்டுதலைச் சமர்ப் பிக்கிறோம்.

**(கல்கி, 1.8.1948)**



# இப்ப தயங்கினா பின்னால தவிக்க வேண்டி வரும்.

வக்கீலிடமும், மருத்துவரிடமும் எதையும் மறைக்கக் கூடாது என்பது பழமொழி. உண்மையைச் சொல்லா விட்டால் நம் வழக்கை வக்கீல் சரியாக வாதிட முடியாது. அதுபோல் மருத்துவரிடம் உங்களுக்கு இருக்கும் பிரச்சனைகளை சொல்லத் தயங்காதீர்கள்.

குறிப்பாக பிறப்புறுப்புகளில் சீழ் வடிந்தாலோ, வீக்கம் இருந்தாலோ அல்லது புண், படை இருந்தாலோ, உடனே மருத்துவரை அணுகுங்கள். அது பால்வினை நோயின் அறிகுறியாக இருக்கக்கூடும். ஆனால் அதை எளிதில் குணப்படுத்தலாம்.

தயக்கம் காட்டினால், பால்வினை நோய் மூலம் எய்ட்ஸ் நோய் வரும் ஆபத்து அதிகரிக்கும். எனவே ஆரம்ப நிலையிலேயே சிகிச்சை பெற்று பால்வினை நோயை குணப்படுத்திக் கொள்ளுங்கள்.

இதற்காக சிறப்பு முகாம் நடைபெற உள்ளது. ஆகவே தயக்கத்தை விட்டு உங்கள் பகுதியிலுள்ள துணை சுகாதார நிலையத்திற்கு சென்று சிகிச்சை பெற்றுக் கொள்ளுங்கள்.

பால்வினை நோயை எளிதில் குணப்படுத்த முடியும்.

**தயக்கத்தை விடுவீர்! சிகிச்சை பெறுவீர்!**

TNSACS

# “பார்ட்டிகளுக்குத்தான் பெரிய பிரச்சனை!”

**கோடை விடுமுறை வந்தால் டிராவல்ஸில் டாக்ஸி, வேன்களுக்கு ஏகப்பட்ட கிராக்கி வந்து விடும். சுற்றுலாவிலிருந்து வெறும் பந்தாவுக்குச் சுற்றி வருவதுவரை, பலதரப்பட்டவர்களுக்கு இந்த வண்டிகள் வாடகைக்கு விடப்படுகின்றன. இதோ சில 'டிராவல்ஸ்'காரர்களின் அனுபவங்கள்:**



• அப்துல் ரிஸ்வான்



• வேணுகோபால்

சென்னை சேலையூர் கேம்ப் ரோட்டிலிருக்கும் 'மகேஷ் டிராவல்ஸ்' உரிமையாளர் சண்முக வடிவு சொல்கிறார்:

'காரைக்குடிக்குப் போகணும், டாடா சுமோ வேணும்னு' ஒருத்தர் கேட்டாங்க. நாங்களும் சரின்னோம். கடைசி நேரத்துல வண்டி ரிப்பேரு. எங்களோட ரேட்டு, கிலோ மீட்டருக்கு அஞ்சு ரூபா. ஒத்துக்கிட்ட ஒரே காரணத்துக்காக, கிலோ மீட்டருக்கு அஞ்சு அம்பதுனு ஏற்பாடு பண்ணி வேற வண்டியை அனுப்பினோம். கிட்டத்தட்ட ஐநூறு ரூபா நஷ்டம். என்ன பண்றது? வண்டி ஓடுதோ இல்லியோ, தெனம் டிரைவர்களுக்கு பேட்டா கொடுக்கணும். அப்புறம், டீசல், மெயின்டனன்ஸ் செலவுன்னு ஏகப்பட்டது இருக்கு. திடீர்னு ஆக்ஸிடெண்ட் ஆய்டுச்சுன்னா பெரிய தலைவலி. ஒரு பார்ட்டி ரெகுலரா வண்டி எடுத்துட்டே இருப்பாரு. அவர்ட்ட அடிச்சி புடிச்சி காசு கேக்க முடியாது. கேட்டா வேற டிராவல்ஸுக்குப் போயிருவாரு. ரயில்வே ஸ்டேஷன்ல ஒருபார்ட்டி வருது; போங்கன்னு சொல்லுவாங்க. நாங்களும் ஒரு அட்டைல பேரை எழுதி, காத்துட்டு இருப்போம். இருக்கற நாலஞ்சு கேட்டுல வேற வழில அவரு போயிடுவாரு. நாங்க வெறுமனே திரும்பி வரணும்! ஓட்டல்ல ஒரு பார்ட்டி, காரு வேணும்னு சொல்லுவாரு. நாங்களும் சரியா எட்டு மணின்னா எட்டு மணிக்குப் போய் ரிசப்ஷன்ல 'வந்துருக்கோம்னு' தகவல் குடுத்துடுவோம். ரிசப்ஷன்ல இருக்குறவரு ஷிப்டு மாத்திட்டு, வேற ஆளு வந்துடுவாரு. பார்ட்டி கேட்டா, பதில் சரியா தராம, நாங்க வேஸ்டா திரும்பி வருவோம். இந்த மாதிரி பல பிரச்னை இருக்கு. ஏதோ கலபமா லாபம் வர்றதா நினைச்சுடாதீங்க!"

பால்ராஜ் (டிரைவர்) சொல்கிறார்:

"ரொம்ப லாங் டிஸ்டன்ஸ் வண்டி ஓட்டிட்டுப் போறப்போ தூக்கம் வராம இருக்கறதுக்காக டேப் ரிகார்டர்ல பாட்டு கேட்டுட்டு ஓட்டுவோம். ஒரு தடவை பார்ட்டி, 'டேப் தொந்தரவா இருக்கு. ஆஃப் பண்ணிடுன்னாங்க'. நானும் டேப்பை நிறுத்திட்டேன். திருத்தணிகிட்ட வரும்போது கண்ணை சுழட்டிட்டு தூக்கம் வந்துருச்சு. கொஞ்சம் அசந்திருந்தா, லாரில மோதியிருப்பேன். அப்புறம் பார்ட்டியே டேப் ரிகார்டர் போட்டுக்க சொன்னாங்க.

"இன்னொருமுறை தொடர்ந்து 23 மணி நேரம் வண்டி ஓட்டுற மாதிரி ஆயிடுச்சு. போய்ட்டு டிராவல்ஸுக்கு திரும்பி வந்தா உடனே ஒரு பார்ட்டி ஏர்போர்ட்டுக்கு யாரையோ வழியனுப்பப் போகணும்னு

காத்துட்டிருந்தாங்க. நானும் அவங்களை ஏத்திட்டு ஏர்போர்ட்டுக்குப் போய் இறக்கிட்டு, அவங்க திரும்பி வர்ற வரைக்கும் கொஞ்சம் கண்ணசரலாம்னு தூங்கினேன். நல்லா அசந்து தூங்கிட்டேன். பார்ட்டிக்கு காரோட நம்பர் தெரியாது. மைக்ல அனவுன்ஸ் பண்ணிப் பார்த்துட்டு வண்டியைத் தேடப் பொறுமையில்லாம அவங்க திரும்பிப் போய்ட்டாங்க. நான் கண்ணை முழிச்சுப் பார்த்தது அடுத்த நாள் அதே நேரம்! 23 மணி நேரம் வண்டி ஓட்டிட்டு, 24 மணி நேரம் தூங்கியிருக்கேன்."

டிரைவர் ரவி: "எங்களுக்கு வர்ற கஸ்டமர்ல எங்களையும் மனுசனா மதிச்சு நல்லபடியா நடத்தறவங்களும் இருக்காங்க. எங்களைப் பத்தி கவலையே படாதவங்களும் இருக்காங்க! மலேசியாவுல ஜகாரியானு ஒருத்தர் இருக்கார். அவர் எப்போ மெட்ராஸ் வந்தாலும் என்னைத்தான் கூப்டுவாரு. ஆயிரம், ரெண்டாயிரம்னு டிப்ஸ் குடுப்பாரு. எனக்கு மோதிரம் வாங்கிக் குடுத்திருக்காரு. லாஸ்ட் டைம் மலேசியாவிலிருந்து ஒரு வாட்ச் வாங்கிக் கொடுத்தாரு. இன்னொரு கஸ்டமர் மூணு நாள் திருப்பதி சவாரிக்குக் கூப்டாரு. வழியில நல்ல ஓட்டல்ல நிறுத்தச் சொன்னாரு. நானும் நிறுத்தினேன். நான் சாப்பிட்டது இரண்டு இட்லி, ஒரு காபி.. அங்கே ஒரு இட்லி நாலு ரூபா. காபி எட்டு ரூபா. ஓட்டல் பில் இருநூறு ரூபாய தாண்டிடுச்சு. பார்ட்டி, 'இங்க ஏன் வண்டிய நிறுத்தினே. காசு அதிகம். அதனால உனக்கு டிப்ஸ் தர மாட்டேன்; ஊருக்குத் திரும்பி வர்ற வரைக்கும் சிங்கிள் டீக்குக் கூட காசு தரமாட்டேனுட்டாரு. என் கையில காசு இருந்ததால பொழைச்சேன். இப்படியும் பார்ட்டி இருக்கு!"



• ரகு



• சண்முகவடிவு

பொழுதுபோக்கு என்கிற பெயரில் வாகனங்களைத் தவறாகப் பயன்படுத்துபவர்களும் உண்டு. டிரைவர் ரகு சொல்கிறார்: "சபரி மலைக்கு



• பால்ராஜ்



• ரவி

வேன் வேணும்னு ஒரு பார்ட்டி கேட்டாங்க. வேன்ல இரண்டு போலீஸ்காரங்க மாலை போட்டுட்டு வந்தாங்க. வேன் கிளம்பி அஞ்சாவது நாள் இங்க திரும்ப வந்துடணும்னாங்க. நிறைய ஊரை வேற சுத்திப் பார்க்கணும்னு சொன்னாங்க. இடையில ரெஸ்டே இல்லை. 'ஓட்டு, ஓட்டு'னு வெரட்டிகிட்டே இருந்தாங்க. நடுநடுவுல 'நீ ஓட்டுறியா? இல்லே நாங்க ஓட்டவா?'னு கேப்பாங்க. நானும் பேசாம பல்லைக் கடிச்சுட்டு இருந்தேன். அவங்களை எறக்கி விட்டதுக்கப்புறம் சொன்னேன். 'ஐயா, உங்கள மாதிரி நாலு பார்ட்டி கிடைச்சா டிராவல்ஸ் உருப்பட்ட மாதிரிதான்! இனிமே தயவு செஞ்சு எங்க டிராவல்ஸ் பக்கம் வந்துடாதீங்கன்னு' சொன்னேன்.

டிரைவர் அப்துல் ரிஸ்வான்: "நோ பார்க்கிங்ல வண்டியை நிறுத்தினேன்னு சொல்லி, போலீஸ்காரங்க நான் வண்டிகிட்டே இல்லாதப்போ 'டோ' பண்ணி எடுத்துட்டுப் போய்ட்டாங்க. உண்மையிலே அப்படி இல்லை. இது தி.நகர் பக்கத்துல நடந்தது. நானும் வண்டி பின்னாடியே ஓடினேன். கொஞ்சம் தூரம் வரைக்கும் என்னை ஓட விட்டுட்டு, போலீஸ்காரங்க 200 ரூபா வாங்கிட்டு வண்டியைக் குடுத்தாங்க! போலீஸ்காரங்கதான் எங்க தொழில்ல பெரிய பிரச்னை. எனக்கு வண்டி வந்தா போதும்கிற நிலைமைல நானும் 200 ரூபா குடுத்து வண்டிய எடுத்தாந்தேன்" என்றார்.

வள்ளுவர் டிராவல்ஸ் உரிமையாளர் வேணுகோபால், "எல்லாப் பிரச்னையையும் சமாளிச்சிடலாம். சில சமயம் பார்ட்டி வந்து அவசரமா ஆஸ்பத்திரிக்கு போகணும்னு வேன் கேக்கறாங்க. வேனை எடுத்துட்டுப் போய் கத்தி, அரிவாள்னு ஆயுதங்களை அள்ளிப் போட்டுக்கிட்டு, ரவுடிங்களை ஏத்திட்டு கலாட்டா பண்ணிட்டு வந்துடுறாங்க. எங்களுக்கு இப்படியெல்லாம் பண்ணுவாங்கன்னு எப்படி தெரியும்? இதுதான் எங்களுக்குப் பெரிய பிரச்னை" என்றார்.

— **கே. பாலசுப்ரமணியன்**

படங்கள்: **எம். சண்முகம்**

போயப் பார்க்கலாம் என்று தெய்வமணி சொன்னான். நம்பிக்கைகளும் ஆசைகளும் அற்றுப் போய், மிக மோசமாகியிருந்தது என் மனநிலை. ஒரு பூதம் போல் கவிந்திருந்த வெறுமையை எப்படி அவனுக்கு உணர்த்துவேன்?

ஆனால், அவனை மறுக்கத் தோன்றவில்லை. கையைப் பிடித்து, யார் எங்கே அழைத்துப் போனாலும் கேள்விகளற்று உடன் செல்லத் தயாராக இருந்தேன். ஒரு குழந்தை போல. நாய்க்குட்டி போல. சக்கரம் கட்டிய பொம்மை போல.

அரை உறக்கத்திலும் ரசம் சோற்றிலும் அலுவலகக் கோப்புகளிலும் குளியல் சோப்பிலும் எதிர்பாராத கணத்தில் வந்து உதித்து விடுகிறது. செல்வியின் முகம். பிறகு சில மணி நேரங்களுக்குத் தன்னுணர்வு என்பதே இருப்பதில்லை. ஒரு புழுவை நசுக்குவது போல என்னைக் கூழாக்கிச் சென்று விடுகிற அவளது அவமரணத்தின் ஞாபகத்திலிருந்து விடுதலை வேண்டியிருந்தது. உடனடியாக. மிக மிக அவசியமாக.

இன்னும் ஓரிரு தினங்கள் தாக்குப்பிடித்தால் சாதனை. மேலும் நான் என்னை சுதாரித்துக் கொள்ளாவிட்டால், மனநல மருத்துவமனைக்கு அழைத்துச் செல்வதைத் தவிர வேறு வழியில்லை என்று தெய்வமணி என் மனைவியிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

ரொம்பு நல்லது. சரியான முடிவு



# ஒரு மனம் இன்னொரு மனம்



தான். அதைவிடச் சிறப்பான முடிவு, என்னைக் கொன்று போடுவது. நல்ல, ஆழமாகக் குழிதோண்டிப் புதைத்து, மூடி, பாதுகாப்புக்கு மேலே ஒரு கல்லறையும் எழுப்பி விடுவது.

'இது ஒரு மகாபாவியின் கல்லறை. அருகே வந்து விடாமல் ஒதுங்கிச் செல்லுங்கள்' என்று மேலே எழுதி விட்டால் இன்னும் சிலாக்கியமானது.

என் உதடுகள் நடுங்கிக் கொண்டிருந்தன. நான் ஏன் இப்படியெல்லாம் பேசுகிறேன்? என் மனைவி, தலையில் அடித்துக் கொண்டு அழுதாள். என்னை விட்டால் அவளுக்கு வேறு ஏது போக்கிடம்? அதுவும் எனக்குத் தெரியாததல்ல. ஆனால், தனக்கான நிரந்தரப் போக்கிடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்ட செல்வியைத் தவிர, வேறு யாரைப் பற்றியும் எண்ணிப் பார்க்கவும் மனம் தயாராயில்லாத போது நான் என்ன செய்து விட முடியும்?

விபத்துதான் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டது போலீஸ். எல்லாம் முடிந்து, எரித்துக் கரைத்து விட்டு வந்த பிறகு விபத்தில்லை என்று காதோடு தெரிவித்துவிட்டுப் போனாள், அவளது கல்லூரித் தோழி ஒருத்தி.

வாகனங்கள் விரையும் காலை நேரம்.

பா. ராகவன்

கூட்டம் வழிந்து, தவழ்ந்து வரும் பேருந்துகள். ராட்சஸன் மாதிரி அலறிக் கொண்டு பூமியதிர ஓடும் லாரிகள். அவரவர் அவசரங்களுடன் இயங்கும் மக்கள். எப்போதும் போல் அமைதியும் சிந்தனையுமாகத் தன் புத்தகங்களை அணைத்துக் கொண்டு, கல்லூரிச் சாலை வழியே செல்லும் பேருந்துக்காகக் காத்திருந்த செல்வி, எதற்காகத் திடீரென்று சாலையின் குறுக்கே ஓடி, லாரியின் சக்கரங்களுக்குள் தன்னைத் தொலைக்க வேண்டும் என்று அவள் தோழி கேட்டாள்.

நிஜமா? நிஜமா? என்று எத்தனை முறை பதறியிருப்பேனோ தெரியாது. நிலைகுலைந்து போயிருந்த அந்தப் பெண், ஆமாம் என்றுதான் ஒவ்வொரு முறையும் சொன்னது.

திட்டமிட்ட, தீர்மானமான தற்கொலை. இந்தத் தீர்மானம் வாழ்வதன் மேல் ஏன் இல்லாமல் போனது செல்விக்கு? சக்கரங்கள் ஏறிய விநாடியில் எப்படித் துடித்திருப்பாள் என்று எண்ணிப் பார்த்தேன். யோசனைக்கு அகப்படுவதாக இல்லை அந்த வலி. அதே சக்கரங்களை என் மீது ஏற்றிப் பார்க்க வேண்டும் போலிருந்தது.

செல்விக்கு நீ என்ன குறை வைத்தாய்? ஏன் இத்தனை குற்ற உணர்ச்சி? என்று தோளைப் பற்றி உலுக்கியபடி தெய்வமணி கேட்டான். அதற்கு அவசியமே இல்லை. விஷயம் தெரிந்த விநாடியிலிருந்து என்னை நானே கேட்டுக் கொண்டிருக்கும் கேள்வியல்லவா அது?

பண்டிகைக்குப் புத்தாடை. பஸ்ஸுக்குச் சில்லறை. பரீட்சைக்குப் பணம். அதற்கு மேல் அவளும் எதிர்பார்த்ததில்லை. மாலையிட்ட அப்பா, அம்மாவின் புகைப்படங்களைப் பார்த்து, எப்போதாவது ஏங்கி நிற்பாள். அருகில் மனைவி இல்லையென்றால் ஆதரவாக வருடிக் கொடுத்து, 'போ, போய்ப் படி' என்று அனுப்பி விடுவேன். வேளைக்குச் சோறு, கடனற்ற வாழ்வு என்பதற்கு மேல் வாழ்க்கை அள்ளிக் கொடுத்து விடவில்லை. இருந்தபோதிலும் கௌரவமான கல்வியையும் கண்ணியமான புருஷனையும் செல்விக்குத் தேடித்தர வேண்டும் என்றுதான் எப்போதும் நினைத்துக் கொள்வேன்.

ரேஷன் கார்டில் குடும்பத் தலைவன் ஆன புதிதில், ஒரு தாய் அளவுக்குச் செல்வியை கவனித்துக் கொள்ள வேண்டும் என்று என் மனைவியிடம் அவ்வப்போது கூறிவந்தது நினைவில் இடறியது. எந்த அண்ணியும் தாய் ஆகி விட முடியாதுதான். ஆனால், எண்ணிக் கவலை கொள்ளும் அளவுக்கு அவள் மோசமாக நடந்து கொண்டதில்லை, நான் அறிந்து. அது மட்டும் போதுமா?

வேறென்ன செய்யாமலிருந்தேன் என்று என் மனைவி கேட்டாள். யோசனையில், சம்பவங்கள் சரம் கட்டின. காமாலையில் படுத்த

**"யோவ், என்ன இது, சங்கிலி வாங்கிய செலவுன்னு ரூ. 50,000க்கு கணக்கு எழுதியிருக்கே?"**

**"தலைவரே! மனித சங்கிலிப் போராட்டம் நடத்தினோமே, மறந்துட்டீங்களா?"**

**– சென்னிமலை**
**சி. பி. செந்தில்குமார்**

போது கவனித்துக் கொண்டது. வயசுக்கு வந்த போது, கொஞ்சிக் கொண்டாடியது. அவள் பரீட்சைக்காக இவள் வேண்டிக் கொண்டு விளக்கு வைத்தது.

ஆஹா, பட்டியல்கள். எனக்கு மட்டும் தோன்றாதவையா இவை? ஆனால், யாரையும் கூண்டில் நிறுத்திக் கேள்விகள் கேட்க நான் விரும்பவில்லை – என்னைத் தவிர. நிர்தாட்சண்யமான, கூர்மையான கேள்விகள். அளவில் வாட்டியெடுக்கப்பட்டவை. என்னை மட்டும் அவை விசையுடன் தாக்கி, நார் நாராகக் கிழித்துப் போட்டு விட வேண்டும் போலொரு சுய வெறுப்பு.

எப்போதாவது, செல்வியைக் கூப்பிட்டு உட்காரவைத்து, வாஞ்சையாகத் தலையைக் கோதி விட்டு, ஒன்றுமேயில்லாமல் மணிக்கணக்காகப் பேசவேண்டும் போலத் தோன்றும். இறந்து போன பெற்றோரைப் பற்றி. சிறு வயதுச் சண்டைகள் பற்றி. எனக்கும் அவளுக்கும் பத்து வயது வித்தியாசம். நான் பத்தாங் கிளாஸ் படித்துக் கொண்டிருந்தபோது, கிருஷ்ணா ஸ்கூலில் அவள் முதல் வகுப்பு. அவளை உப்பு மூட்டை தூக்கிக் கொண்டு போய்ப் பள்ளியில் விட்டுப் போவேன். ரொம்பத் தமாஷாயிருக்கும். முதுகில், ஒரு பஞ்சு மிட்டாய்ப் பொட்டலம் மாதிரி ஒட்டிக் கொண்டு வருவாள் செல்வி. இறக்கி விட்டதும் கன்னத்தில் அழுத்தி ஒரு கிள்ளு. அவள் அழ ஆரம்பிக்கும்போது ஓடி வந்து விடுவேன். நான் கிள்ளியது பற்றி ஒருநாளும் அவள் அம்மாவிடம் புகார் சொன்னதில்லை. அந்த அழுத்தத்தில் கலந்த அன்பை அவள் உணர்ந்திருக்க வேண்டும்.

என் கல்லூரி இறுதியாண்டில் அப்பா இறந்தார். அந்த துக்கத்தைப் பற்றிக்கொண்டு அம்மாவும் போய்ச் சேர்ந்தாள்.

சொந்தமாகத் தேடிக் கொண்ட உத்தியோகமும் மனைவியும். சராசரி வாழ்க்கையின் துளித்துளி சந்தோஷங்களும் பெரிய போராட்டங்களின் இறுதி விளைவுகள் அல்லவா?

மேலாகக் காட்டிக் கொள்ளாவிட்டாலும் அடிமனத்தில் செல்விக்கொரு சதுரம் ஒதுக்கி, அவளது எதிர்காலம் பற்றிய கனவுகளைச்



சிறுகச் சிறுகச் சேமித்து வந்தேன். அவள் பள்ளியிறுதி வகுப்புக்கு வந்தபோது, பெரிய தொரு சோகம் வந்து, கவிந்து நின்றது.

முதல் முறையாக உண்டாகியிருந்த மனை விக்குக் கருச்சிதைவு. சொந்த சோகத்தில், செல்வியை எப்படியோ மறந்து போனேன்.

இரவும் பகலுமற்று அழுதுகொண்டிருந்த மனைவியைத் தேற்றும் பணியில் என் னைக் கரைத்துக் கொண்டிருந்தேன். எத்தனை மாதங்கள்! நான் வீட்டில் இருக்கும் நேரம் முழுவதும் தன்னுடன் மட்டுமே இருக்க வேண்டும் என்று நினைத்தாள். ஓயாத பேச்சு. பரஸ்பர ஆறுதல்கள். உலகமும் செல்வியும் ஞாபகத்திலிருந்தே விலகிவிட்ட தினங்கள்.

மீண்டு வந்தபோது, செல்வி சற்று உயர மாகியிருந்தது போலத் தெரிந்தாள். தனக்கான பிரத்தியேக மௌனத்தையும் தனிமையையும் அவள் திரையாகத் தொங்க விட்டுக் கொண் டிருந்ததைக் கண்டேன்.

என் சோகமும் துக்கமும் அவள் அறியாத தல்ல. ஆனாலும் பெண்ணல்லவா! ஒலிபரப்பு முடிந்து போன வானொலிப் பெட்டியிலிருந்து வெளிப்பட்டு நீளும் அர்த்தமற்ற ஓலம் போல் எங்களிடையே ஒரு சூன்யம் பரவி நின்றது.

அலுப்புடன் அலுவலகம் முடிந்து நான் வீடு திரும்பும்போது, அறையில் நீள நிழலாக அவள் படித்துக் கொண்டிருப்பாள். அறை வாசலில் ஓரிரு விநாடிகள் நான் நிற்பதை அவள் நிச்சயம் அறிவாள். ஆனாலும் கவனிக் காததுபோலொரு பாவனையில் தன்னை மூடிக் கொண்டு விடுவாள்.

நானாவது அருகே போய்ப் பேசியிருக்க வேண்டும். என்னைத் தடுத்தது எது என்று இப்போதும் புரியவில்லை.

காலை அவசரங்களில் முகங்களையல்ல; கால்களை மட்டுமே பரஸ்பரம் பார்த்துக் கொள்ள முடிந்திருக்கிறது. கண்ணுக்குத் தெரி யாத இடைவெளியில் வெகு தூரம் விலகி, முடிவற்ற பெருவெளியின் இரு எல்லைகளில் வசிப்பவர்கள் போலல்லவா ஆகி விட்டோம்?

பாசம் என்கிறோம். பிணைப்பு என்கிறோம். எதையும் அனுகி வெளிப்படுத்தி விட இயலா மல் செய்து விடுகிற இயந்திர வாழ்க்கை. ஒரு கட்டாயம் நேர்ந்திராவிட்டால் என் மனைவி யிடம் கூட அத்தனை இணக்கமாக இருந் திருப்பேனா என்று எண்ணிப் பார்த்தேன்.

எதையும் நிரூபித்து என்ன ஆகப் போகி றது? நிரூபணத்தின் முடிவில் கிடைக்கிற பூரண வெற்றியை, அதற்கு வெகு அருகே நிறைந்திருக்கும் முழு வெறுமை ஒருபோதும் அனுபவிக்க விடுவதில்லை.

தன்னை, தன் இறப்பின் மூலம் நிரூபித் திருக்கிற செல்வி, என்ன எதிர்பார்த்தாள்? எங்கே ஏமாந்தாள்?

பேருந்தில் சென்று கொண்டிருந்தோம். கவலையுடன் என் கைகளைப் பற்றியிருந்தான் தெய்வமணி. நண்பன்தான். ஆனால், இத் தனை அனுசரணைக்கு நான் ஏற்றவன்தானா என்று சந்தேகமாக இருந்தது. நான் யாரிடம் இத்தனை அன்பு செலுத்தியிருக்கிறேன்? எந்த வொரு உணர்வையும் எப்போதும் வெளிப் படுத்தாமல் மூடி மூடி வைத்து, நான் மட்டுமே அவ்வப்போது 'இருக்கிறதா?' என்று ரகசிய மாகத் திறந்து பார்த்து, மறுபடி மூடிவைத்து வந்திருக்கிறேன். இப்போது, பெரிதாக ஒரு சோகம் கவிகிறபோது எல்லாம் உடைத்துக் கொண்டு வெளிவரப் பார்க்கிறது.

செல்வியின் மரணம் தற்செயலானதுதான் என்று நம்பவைக்க தெய்வமணி மிகவும் முயன்று கொண்டிருந்தான்.

நான் என்னைத் துளித்துளியாகக் கொன்று கொள்வதில் யாருக்கு லாபம்? என் மனை வியை உத்தேசித்தாவது மாற்றிக் கொள்ள வேண்டும் என்று சொன்னான்.

செல்விக்கும் எனக்கும் இடையே ஏற்பட்ட மிக நீண்ட இடைவெளியும் முடிவான பேரி ழப்பும் அவளை உத்தேசித்துச் செயல்பட்ட தால்தான் நேர்ந்தது என்பதை எப்படி நான் சொல்வேன்? புரிந்து கொள்ளக் கூடியதுதானா அது?

சுரங்கம் போன்ற பெண்களின் மனத்தில் என்னவெல்லாம் தோன்றிக் கொண்டே இருக் கும் என்பதை நான் என் மனைவியிடம் தெரிந்து கொண்டிருக்கிறேன். சற்றும் எதிர் பார்க்க இயலாத ஆசைகள். பட்டு நூலில் நெய்த ஏணியில் படியேறிப் போய் எட்டிப் பார்க்க விரும்புகிற நட்சத்திரக் கனவுகள். அற்ப விஷயங்களைப் பற்றிய திடீர் ஏக்கங்கள். ஒரு மாயாஜாலம் போல எந்தக் கணமும் உதிர்ந்து விடும் கண்ணீர். கதவு தாழிட்டிருக் கிற தைரியத்தில் அவளை மடியில் படுக்க வைத்துச் செவி கொடுத்திருக்கிறேன்.

செல்வி தன் மனத்தைச் சுவரிடமா திறந்து கொட்டியிருப்பாள்? தானே அழுது, தானே தேற்றிக் கொண்டு, தானே சிரித்து, தானே ரசித்து... கடவுளே! யாரும் கவனிக்காத காட் டுச் செடி போலல்லவா பூத்துப் பூத்து உதிர்ந்

திருப்பான்?

பேருந்து செங்கல்பட்டைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தது. உத்திரமேரூர் நெருங்கும் போது தெய்வமணி, 'இறங்கணும்' என்று ஞாபகப்படுத்தினான். அதுவரை இல்லாத எதிர்பார்ப்பும் பரபரப்பும் கொஞ்சம் கொஞ்சமாக எனக்குள் ஊற்றெடுப்பதை உணர முடிந்தது. நம்பிக்கையோ, அவநம்பிக்கையோ கொள்வதற்குக் கூட சித்தமில்லாத முற்றிலும் அன்னியமானதொரு உலகம்.

தெய்வமணிதான் செல்வி இறந்த நாளாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

"உனக்கென்ன, அவளது மரணம் விபத்து தானா, தற்கொலையா என்று தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவுதானே?"

அவ்வளவுதானா! இதுதானா இவன் என்னைப் புரிந்து கொண்ட லட்சணம்! எனக்குச் செல்வி வேண்டும். மறுபடியும் வேண்டும். தூரங்கள் களைந்து அருகே - மிக அருகே எனக்கு அவளுடன் பேச வேண்டும். என் நெஞ்சைப் பிளந்து கொட்டிக் கதற வேண்டும். ஒரு பொறுப்புள்ள சகோதரனாக நான் நடந்து கொள்ளவில்லை. அதைக் குத்திக் காட்டி அவள் பேசக் கேட்க வேண்டும்.

தெய்வமணி என்னை உற்றுப் பார்த்தான். "உன்னை முதலில் நல்ல மனநல மருத்துவரிடம் அழைத்துப் போகிறேன். பிறகு நாம உத்திரமேரூர் போகலாம்" என்றான்.

விடாப்பிடியாக மறுத்து, முதலில் உத்திரமேரூர் என்று கிளம்பி வந்திறங்கியபோது, வெயில் கொளுத்திக் கொண்டிருந்தது.

அந்த வீட்டு வாசலில் நாலைந்து ஜோடி செருப்புகள் இருந்தன. திண்ணையில் ஓர் ஆள் கணக்குப் பிள்ளை மேசை எதிரே அமர்ந்து என்னவோ படித்துக் கொண்டிருந்தான். கறுத்த, தாட்டியான பெண்ணொருத்தி எங்களைப் பார்த்து என்ன என்று கேட்டாள். தெய்வமணி முன்னே சென்று அவளுக்கு மட்டும் கேட்கிற குரலில் பேசியபோது எனக்குப் படபடப்பு கூடிக் கொண்டிருந்தது.

"வாங்க தம்பி" என்றாள் அந்தப் பெண்.

ஏதும் யோசிக்க இயலாமல் அந்த வீட்டின் படியேறி உள்ளே போனபோது, கவிந்திருந்த இருளும் நெல் புழுக்கும் வாடையும் முற்றத்தில் காய்ந்து கொண்டிருந்த மிளகாயின் நிறமும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளது போலப் பட்டது.

"தமிழு..." என்று குரல் கொடுத்தாள் அந்தப் பெண்.

"இப்பத்தான் நாலு பேர் வந்துட்டுப் போனாங்க. பாப்பா டயர்டா இருக்குதுன்னு படுக்கப் போச்சி" என்றாள் அந்தப் பெண்.

ஏனோ திரும்பிப் போய் விடலாம் என்று எனக்குத் தோன்றியது.

சட்டென்று நாங்கள் நின்று கொண்டிருந்த நடையோடியின் பக்கவாட்டு அறைக் கதவு திறந்து ஒரு பெண் வெளிப்பட்டாள். செல்வி வயதுதான் இருக்கும். சிற்றாடையும் தோளுக்கு முன்புறம் விழுந்த பின்னலும் கண்களில் இருளுமாக மெலிந்து காணப்பட்டாள்.

"சாரு மெட்ராஸ்லேருந்து வந்திருக்காருமா" என்றாள் அந்த தாட்டியான பெண்மணி. அம்மாவாக இருக்க வேண்டும்.

"வாங்க" என்றது அந்தப் பெண். தெய்வமணி அவளுக்கு வணக்கம் சொன்னான். சில வருடங்களுக்கு முன் அவனது சித்தப்பா ஒருத்தர் இறந்து போனார். ஒரே சொத்தாக, கிராமத்தில் அவருக்குச் சில ஏக்கர் நிலங்கள் இருந்தன. ஆனால், பத்திரத்தை எங்கே பத்திரப்படுத்தியிருக்கிறார்? அதைத் தெரிந்து கொள்ள வந்ததை ஞாபகப் படுத்தப் பார்த்தான்.

"அப்படிங்களா?" என்றது அந்தப் பெண்.

"பாப்பாக்கு எதுவும் தெரியாதுங்களே? மணைல உட்கார்ந்திருச்சின்னா, பிறவு நடக்கற எதும் அதுக்குத் தெரியாதுங்க. அதும் வாயால வர்ற விசயங்கள் எதுவும் அதுக்குத் தெரியாதுங்க" என்றாள் அந்த அம்மாள்.

எனக்குள் பீதி பரவுவது போலிருந்தது. இந்தப் பெண்ணா? இதுதானா மீடியம்? இந்த மெலிந்த தேகத்தினுள்ளா ஆவிகள் இறங்கிப் பேசும்? நிஜம்தானா? நம்ப முடியாமல் தத்தளித்தேன்.

"வாங்க" என்று மறுபடியும் அழைத்தது அந்தப் பெண்.

"உள்ளே போ" என்று என் தோளைத் தட்டிவிட்டு தெய்வமணி "ஒரு நிமிஷம்" என்று வாசலுக்கு விரைந்தான். நான் அந்த அறைக்குள் நுழைகிற விநாடி, அவன் வாசல் திண்ணையில் அமர்ந்திருந்த மனிதரிடம் ஏதோ பேசியபடி பர்ஸை எடுப்பதை கவனித்தேன்.

அந்த அறை மிகவும் இருட்டாக இருந்தது. சன்னல்கள் அடைக்கப்பட்டு, ஒரு குத்து விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. பாய் விரித்து என்னை உட்காரச் சொல்லிவிட்டு, இரண்டு ஊதுபத்திகளைக் கொளுத்தி வைத்தது அந்தப் பெண்.

**"ஏம்பா... பூட்டை உடைச்சி அந்த வீட்டில் திருடினாயாமே...?"**

**"ஆமாம் சாமி. ஆனா பதிலுக்குப் புதுப் பூட்டு, சாவி வாங்கி வச்சிட்டுத்தான் வந்தேன்."**

**- கோட்டைக்காடு சி. ருக்மணி**

அவள் அம்மா ஒருதரம் உள்ளே வந்து, விளக்குத் திரியைத் தூண்டி விட்டு, எண்ணெய் ஊற்றி விட்டுப் போனாள்.

தெய்வமணி வந்து என் அருகே அமர்ந்ததும் அந்தப் பெண், "பரிபூரண நம்பிக்கை, சுகம் தரும். சுத்த ஆத்துமாக்கள் தீங்கிழைப்ப தில்லை. வாழ்ந்து மறைந்த உன்னத ஜீவன்களை வணங்கித் தொடங்குவோம்" என்று செந்தமிழில் உரக்கச் சொன்னபோது என் சப்தநாடியும் ஒடுங்கிப் போனது.

தமிழ்... அப்படித்தானே அந்தப் பெண்ணை அழைத்தார்கள்? தமிழரசியோ, தமிழ்ச் செல்வியோ பேராக இருக்கலாம். செல்விக்குக் கூட முதலில் தமிழ்ச் செல்வி என்றுதான் பெயர் வைக்க அம்மா ஆசைப்பட்டாள்...

அந்தப் பெண் சற்று நேரம் கண்ணை மூடிக் கொண்டு அமர்ந்திருந்தது. திடீரென்று அதன் முகம் கோண, கேவல் போலொரு குரல் எழுந்தது. உடல் முறுக்கிக் கொண்டு மேலெழப் பார்க்க, தெய்வமணி கைகட்டிக் கொண்டதைக் கண்டேன்.



"ம்..." என்றொரு சப்தம் அதனின்று எழ, "சொல்லுங்க தம்பி, நீங்க யாருகிட்டே பேசணும்?" என்ற குரல் எனக்குப் பின்னாலிருந்து கேட்டது.

இருளில், அந்த தாட்டியான பெண்மணி எப்போது வந்து நின்றாள்?

"செல்வி... இவர் தங்கச்சி..." - தெய்வமணிதான் சொன்னான்.

அந்தச் சூழலில் என்னைப் பொருத்திக் கொள்ள முடியாமல் மனம் பட படக்க, ஏனோ எனக்கு அழவேண்டும் போலி ருந்தது.

சற்று நேரம் அந்தப் பெண் அமைதியாக அமர்ந்திருந்தது. ஐந்து நிமிடம்... ஏழு நிமிடம்.

மறுபடியும் திடீரென்று அதன் உடல் தூக்கிப் போட, நிலைகுலையச் செய்யும் அந்தக் கேவல் சப்தம் மறுபடியும் கேட்டது. உடல் முறுக்கிக் கொண்டு, "தண்ணி... தண்ணி வேணும்... தாகம்" என்று குரல் வர, "பேசுங்க, பேசுங்க. உங்க தங்கச்சி!" என்றாள் அந்த தாட்டியான பெண்மணி.

நம்பவே முடியாமல், "செல்வி...." என்று என் உதடுகள் தாமாக முணுமுணுத்தன.

"அண்ணே, தண்ணி... தண்ணி வேணும்... தாகம் தாங்கலை... தண்ணி, தண்ணி..."

விவரிக்க முடியாத பய உணர்ச்சியுடன் நான் அந்தப் பெண்மணியைப் பார்க்க, "அப்படித்தான் கேட்பாங்க. நீங்க பேசுங்க சீக்கிரம். என்ன கேக்கணுமோ கேளுங்க" என்றாள்.

எனக்கு எதுவும் கேட்கத் தோன்றவில்லை. மறுபடியும் "செல்வி" என்று கூப்பிட்டேன்.

"முடியலையே.... என்னால முடியலையே... நான் போறேன். என்னைக் கூப்பிடாதீங்க... என்னால முடியலையே... தாகம், தாகம் எடுக்குது அண்ணே... தண்ணி தருவியா? நான் போறேன்... நான் போறேன்..."

சட்டென்று அந்தப் பெண் சுவரில் சாய்ந்து விட்டது.

என் முகம் வியர்த்திருந்தது. தெய்வமணி எழுந்து மின்விசிறியின் ஸ்விட்சைத் தேடிப் போட்டான். அந்தப் பெண்மணி ஜன்னலைத் திறந்து வைக்க, குத்துவிளக்கின் சுடர் காற்றில் வேகமாக ஆடியது.

பத்து நிமிடங்களில் தமிழ் சகஜ நிலைக்கு வந்து விட, நான் எழுந்து நின்றேன்.

"பேசினீங்களா?" என்று அது கேட்டது.

"இல்ல தமிழு. சரியா வரலை. அரைமணி கழிச்சு மறுபடியும் பார்க்கலாம்" என்றாள் அந்தப் பெண்மணி.

வேண்டாம் என்று நான் தெய்வமணியிடம் சொன்னேன்.

"ஏண்டா?" என்றான் அவன்.

நான் பதிலேதும் சொல்லவில்லை.

உடல் முறுக்கேறி, உயிரை விரட்டி, உயிரை இறுக்கித் தேக்கும் கொடூர அவஸ்தையைத் தாங்கும் வயதா அந்தச் சிறுமிக்கு? லாரிச் சக்கரங்களின் அடியில் சிக்குண்டபோது செல்வியின் துடிப்பு எப்படி இருந்திருக்கும் என்பது இப்போது புரிந்தது.

திண்ணையில் பணத்தை எண்ணி பத்திரப் படுத்தும் மனிதனைப் பார்த்தேன். இந்தப் பெண்ணின் சகோதரனாக இருக்கலாம். அல்லது வேறு ஏதேனும் உறவு. இவளுக்கொரு திருமணம், கல்வி பற்றிய சிந்தனை நிச்சயம் இவர்களுக்கு இருக்க முடியாது என்று தோன்றியது.

செல்வி விஷயத்தில் நான் அத்தனை மோசமில்லை என்கிற உணர்வே எனக்குப் போதுமானதாக இருந்தது.

"வா, போகலாம்" என்று தெய்வமணியிடம் சொல்லிவிட்டு வேகமாக நடக்க ஆரம்பித்தேன்.

என் கண்கள் கலங்கியிருந்தன. செல்வியை நினைத்து அழுகிறேன் என்றுதான் தெய்வமணி நினைத்திருப்பான்.



# பரீட்சையில் பெயில்; பார்லிமெண்ட்டில் பாஸ்!

என் தந்தையார், கதர் இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார் என்றாலும் அவர் வில்லிசை விற்பன்னர். அது என்னுள்ளே, இலக்கிய ஆர்வத்தை மட்டுமின்றி, நாடக ஆர்வத்தையும் ஏற்படுத்தியது. எனது பதினாறாம் வயதில், நானே ஒரு நாடகத்தை எழுதி, இயக்கியது மட்டுமின்றி, நடிக்கவும் செய்தேன். அப்போது நான் நடத்தி வந்த 'அகஸ்தியானந்தா வாலிபர் கழகம்' சார்பில், அந்த நாடகத்தை அரங்கேற்றினேன். ஜமீந்தார் கொடுமையை எதிர்த்து புரட்சி செய்கிற ஓர் இளைஞன் தான் நாடகத்தின் கதாநாயகன். (நான்தான் அந்தப் புரட்சிக்கார இளைஞனாக நடித்தேன்.)

பின்னாளில், காங்கிரஸ் கட்சியின் தேர்தல் பிரசாரத்துக்காகவும் ஒரு நாடகம் எழுதி நடித்தேன். 'வளர்க்கும் கை' என்ற அந்த நாடகத்தில் ஒரு முக்கிய 'வேடத்தில்' நடித்தேன் – பாரதியார்!

● எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு எழுதியபோது, நான் கணிதத்திலும், இந்தியிலும் தோல்வி கண்டேன். அடுத்த முறை தேர்வு எழுதிய போது மறுபடியும் இந்தியில் தோல்வி. மூன்றாம் முறை தேர்வு எழுதுவதற்காகப் பணம் கட்டப் போன நான், பணம் கட்டாமல் நெல்லைக்கு வந்தேன். அங்கிருந்து, வீட்டில் கூட சொல்லிக் கொள்ளாமல், சென்னைக்கு ரயில் ஏறிவிட்டேன். சென்னையில் எனக்குத் தெரிந்தவர்கள் யாருமில்லை. கையில் இருந்த காசை வைத்துக் கொண்டு சில நாட்கள் சமாளித்தேன். எழும்பூர், சென்ட்ரல் ரயில் நிலையங்களின் எதிரே உள்ள கடைகளில் இட்லி வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, தண்ணீர் குடிப்பேன். கையிலிருந்த பணம் கரைந்தது. என் தந்தையார், பரீட்சை எழுதுவதற்காக 'தங்க நிப்' பொருத்திய பேனாவை எனக்குக் கொடுத்திருந்தார். மூர்மார்க்கெட்டில் கொண்டு போய் அந்த பைலட் பேனாவை விற்றேன். சில புத்தகங்களையும் கொண்டு சென்றிருந்தேன். இரண்டு புத்தகங்களைத் தவிர, மற்ற புத்தகங்களை எல்லாம் எடைக்குப் போட்டேன். அந்த அளவுக்கு அந்த இரு புத்தகங்களை நான் மிகவும் நேசித்ததுதான் காரணம். அவை : பாரதியார் கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள். பேனாவை விற்றுக் கிடைத்த காசைக் கொண்டு மதுரைக்கு ரயில் ஏறினேன். அங்கே என் தாய்மாமன் பல் டாக்டராக இருந்தார். அவர் உதவியுடன் எங்கள் ஊர் போய்ச் சேர்ந்தேன். அடுத்த முறை தேர்வு

எழுதி, எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் பண்ணினேன்.

● அப்புறம் மதுரைக் கல்லூரியில் புகுமுக வகுப்பில் சேர்ந்தேன். கதர் பாண்ட், கதர் சட்டை. இதுதான் என் உடை. மாண வர்கள் சிலர் என்னை 'சாக்கு மூட்டை' என்று கேலி செய்வார்கள். நான் கண்டு கொள்ள மாட்டேன்.

ஒரு நாள், சக மாணவர்கள் மத்தியில் பேசிக் கொண்டிருந்தபோது, எங்கள் பகுதி யின் வட்டார வழக்குச் சொல் ஒன்றைப் பயன்படுத்திவிட, அதை வைத்து என்னை ரொம்ப கேலி செய்து விட்டனர். தமிழிலே நான் ரொம்ப வீக் என்பது போல அவர்கள் பேசியது என்னை காயப்படுத்தி விட்டது. அன்று, மாணவர்களுக்கான ஒரு பேச்சுப் போட்டி இருப்பதாக நோட்டீஸ் போர்டில் ஓர் அறிவிப்பைப் பார்த்தேன். உடனடியாக என் பெயரைக் கொடுத்தேன். பேச்சுப் போட்டியில் எனக்குத்தான் முதல் பரிசு. ராஜாஜி எழுதிய புத்தகம் ஒன்றை எனக்குப் பரிசாகக் கொடுத்தார்கள். பேச்சில் மட்டு மின்றி, நான் வாலிபாலிலும் சிறந்து விளங்கி னேன். கல்லூரி வாலிபால் அணிக்கு நான் தான் கேப்டன்.

● பட்டப்படிப்பை முடித்த கையோடு, கூட்டுறவுத் துறையில் எனக்கு உத்தியோகம் கிடைத்தது. முதலில் கணக்காயர் வேலை. அதன் பிறகு, கடன் வசூல் ஆய்வாளர் வேலை. ஒரு முறை உசிலம்பட்டிக்குக் கடன் திருப்பிச் செலுத்தாதவர்களின் சொத்துக் களை ஜப்தி செய்வதற்காக, கூட்டுறவு சங்கத் தைச் சேர்ந்த மற்றவர்களுடன் சென்றிருந் தேன். ஒரு குறிப்பிட்ட வீட்டில், வேறு எவரும் இல்லாத சூழ்நிலையில் ஒரு பெண் மட்டும் தனியாக இருந்தார். அவர் வீட்டில் ஜப்தி செய்வதற்கு ஒரு மாடு தவிர வேறு எதுவுமில்லை. அந்த மாட்டைப் பிடிக்க உத்தரவிட்டேன். ஆனால் அந்தப் பெண், அந்த மாட்டைக் கட்டிக் கொண்டு 'தயவு செய்து இந்த மாட்டை விட்டு விடுங்கள்' என்று கதறினார். இது என் மனத்தில் இனம் புரியாத நெகிழ்வை ஏற்படுத்திவிட்டது. 'அந்த மாட்டை விட்டு விடுங்கள்' என்று சொல்லி விட்டேன். 'சட்டப்படி, அப்படி விட வழியில்லையே' என்று ஒரு சகா சுட்டிக் காட்டினார். 'நான் ஏதானாலும் பார்த்துக் கொள்கிறேன்' என்று சொல்லி விட்டேன். அலுவலகம் திரும்பியதும், சட்டப்படி கடமையாற்ற நான் தவறியதாக உணர்ந்ததால், என் வேலையை ராஜினாமா செய்து விட்டேன்.

● அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. சேர்ந்தேன். எம்.ஏ. இலக்கியம் முடித்த பின், மதுரையில் சிறிது காலம் தனிப் பயிற்சிக் கல்லூரி ஒன்றில் பணியாற்றினேன். பின்னர் சாத்தூரில் சொந்தமாக, என் அம்மா பெயரில் 'தங்கம் தனிப் பயிற்சிக் கல்லூரி' என்று ஒரு டுடோரியல் காலேஜ் ஆரம்பித்தேன். அப்போதுதான் எனக்குத் திருமணம் நடந்தது. சினிமா பாட்டு புத்தகங் கள் வெளியிட்டு பிரபலமாக விளங்கிய ஸ்ரீமகள் கம்பெனி நடத்தி வந்த சங்கு கணேசன் என்பவரது மகள் கிருஷ்ணகுமாரி என் மனைவியானாள்.

**பொதுவாழ்வில் பொன் விழா காண்கிறார் குமரி அனந்தன். சட்டமன்ற உறுப்பினர், பாராளுமன்ற உறுப்பினர், த.நா.காங். கமிட்டி தலைவர் என்று பலவித பொறுப்புகளில் இருந்தது மட்டுமின்றி, இடையில் சில காலம் காந்தி – காமராஜ் தேசிய காங்கிரஸ் என்று தனிக்கட்சியும் நடத்தியவர். இங்கே தம் ஆரம்பக்கால அனுபவங்களை அசைபோடுகிறார் குமரி அனந்தன்.**

சிறிது நாட்கள் சென்றபின், என் இலக் கியப் பணிகளில் அதிகமாக ஈடுபடுவதற்காக, சாத்தூர் தனிப் பயிற்சிக் கல்லூரியை நண்பர் களுக்கே விற்றுவிட்டு, மதுரை வந்தேன். வெற்றி தனிப் பயிற்சி கல்லூரியில் வேலை. நிறைய இலக்கியக் கூட்டங்களில் கலந்து கொண்டேன். மாலை ஐந்து மணிவரை வகுப்பு எடுத்துவிட்டு, அப்புறம் புறப்பட்டுப் போய் இலக்கியக் கூட்டங்களில் பேசிவிட்டு, கூட்டம் முடிந்தபின், லாரி பிடித்து, மதுரை திரும்பிய நாட்கள் பல உண்டு.

● மதுரையில் வணிகர் சங்கம் சார்பாக இலவச சீருடை வழங்கும் விழா, கீழ மாசி வீதியில் நடைபெற்றது. அதில் தலைமை விருந்தினர் பெருந்தலைவர் காமராஜர்.



''ஆபரேஷனுக்கு பத்தாயிரம் ரூபாய்தான் செலவாகும்னு சொல்றேன். பதினைஞ்சாயிரம் ரூபாய் தரத் தயார்னு சொல்றீங்களே... பணம் இருக்குன்னு காட்டிக்க ஆசையா?''

''இல்லே... ஆபரேஷனுக்கு பிறகும் வாழ ஆசை....''

– இரா. திலிப்

என்னைப் பேச அழைத்திருந்தனர். நான் பேசிக் கொண்டே இருந்தபோது தலைவர் வந்து விட்டார். அவர் மேடையில் வந்து அமர்ந்தவுடன், நான் பேச்சை முடித்துக் கொண்டேன். தலைவர் ''ஏன் நிறுத்திட்டண்ணேன்? பேசுண்ணேன்'' என்றார். கூட்டதுக்கு வரும்போது, வழி நெடுக மைக்கில் என் பேச்சை கேட்டிருப்பார் போலும். தொடர்ந்து பேசினேன். கூட வந்திருந்த ஈ.வி.கே. சம்பத் மூலம் என்னைப் பற்றி மேலும் விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, சென்னையில் தம்மை வந்து சந்திக்கும்படி கூறினார். நான் சென்னை வந்து, பெருந்தலைவரைப் போய்ப் பார்த்தேன். அப்போது த.நா.கா. கமிட்டி தலைவராக இருந்த கிருஷ்ணசாமி நாயுடுவைப் போய்ப் பார்க்கச் சொன்னார். நான் நாயுடுவைப் போய்ப் பார்த்தேன். ''தலைவர் உங்களை இளைஞர் காங்கிரஸ் தலைவராகப் போடச் சொல்லியிருக்கிறார்'' என்றார் அவர். நான் தமிழ்நாடு இளைஞர் காங். தலைவர் ஆனேன். இது நடந்தது 1965ல். 'அடுக்கு மொழி பேசி, மக்களைக் கவர திராவிடக் கட்சியால்தான் முடியுமா? காங்கிரசாலும் முடியும் என்று காட்ட நானும் நிறைய இளைஞர் பேரணிகள் நடத்தினேன். ''துடிக்கும் ரத்தமே, தோள்தட்டிவா!'' என்று இளைஞர்களுக்கு அறைகூவல் விடுத்தேன்.

அப்போது காங். கமிட்டிக் கூட்டத்தில் 'காங்கிரசில் இளைஞர்களுக்குப் பற்றாக்குறை என்பது சரியில்லை. காங்கிரஸ், இன்றைய இளைஞர்களைச் சென்று பற்றா(த)குறை தான்' என்று நான் பேசியதை பலரும் ரசித்தனர்; என் கருத்தை ஏற்றுக் கொண்டனர்.

● 1967ல் காங்கிரஸ் தேர்தலில் தோல்வி கண்டது. 'ரூபாய்க்கு மூன்றுபடி லட்சியம்; ஒருபடி நிச்சயம்' என்று வாக்குறுதி கொடுத்த தி.மு.க. ஆட்சிக்கு வந்த சில மாதங்களில், 'பானை இங்கே! படியரிசி எங்கே?' என்று தெருவெங்கும் பானைகள் கட்டித் தொங்க விட்டுப் போராட்டம் நடத்தினேன். பெருந்தலைவர், 'புதிதாக ஆட்சிக்கு வந்திருக்கிறார்கள். ஒரு ஆறுமாத காலமாவது அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது' என்று கூறி, எனது போராட்டங்களை நிறுத்தி விட்டார். அதன் பின் அவரது நல்லாசியுடன், குமரியில் புறப்பட்டு, மக்கள் விழிப்புணர்வுப் பாதயாத்திரை நடத்தினேன். நான் சென்னை வருகிற தினம், பெருந்தலைவருக்கு டெல்லியில் முக்கிய வேலை இருந்ததால், நான் அச்சிறுபாக்கம் வந்த சமயம், அங்கே வந்து வரவேற்று, வாழ்த்தி விடைபெற்றார்.

● '77ல், பழைய காங்கிரஸ் சார்பில், நாகர்கோயில் பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டேன். 'அப்பச்சி காமராஜரைப் போற்றிய தொகுதி, அவர் தொண்டன் என்பதே என் தகுதி' என்று போஸ்டர் அடித்து, தொகுதி முழுக்க வாக்கு கேட்டேன். வென்றேன். பாராளுமன்றம் சென்றேன். அங்கே இந்தி, அல்லது ஆங்கிலத்தில் மட்டுமே கேள்விகள் கேட்கலாம் என்ற விதியை மீறி, தமிழில் கேள்வி கேட்டேன். சபையிலிருந்து வெளியேற்றப்பட்டேன். ஓரிரு முறையல்ல; சுமார் ஆறு மாத காலம் இது தொடர்ந்தது! கடைசியில் என் பிரச்னையை விசாரிக்க, ஜகஜீவன் ராம் தலைமையில் ஒரு கமிஷன் போடப் பட்டது. 'பாராளுமன்ற உறுப்பினராவதற்கு வயது வரம்பு, கிரிமினல் பின்னணி கூடாது என்றெல்லாம் விதிகள் உள்ளன. ஆனால் இந்தி, ஆங்கிலம் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும்; அதில்தான் கேள்வி கேட்க வேண்டும் என்று எந்த விதியும் இல்லை' என்று சொல்லி அனுமதி கிடைத்தது.

● அடுத்து, பாராளுமன்ற உறுப்பினர் என்ற முறையில் நான் சாதித்தது, தமிழில் மணி ஆர்டர் பாரத்தை வெளியிடச் செய்தது. சில வருடங்களுக்கு முன்பு, தமிழ் மணி ஆர்டர் பாரம் கிடைக்கவில்லை. அப்போது தபால் துறை உயர் அதிகாரிகளுக்கு, மறுபடி நான் போராட்டத்தில் இறங்கும் நிலையை ஏற்படுத்தாதீர்கள் என்று கடுமையாய்க் கூறியவுடன், தமிழ் மணி ஆர்டர் பாரங்கள் கிடைக்க வழி செய்யப்பட்டது.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# வட்டமேஜை

✉ "செருப்படி அரசியல்" தலையங்கம் மிகவும் பொறுப்புடன் எழுதப்பட்டது என்பதை ஒவ்வொரு வரியும் மிகவும் தெளிவாக எடுத்துக் காட்டின. நிகழ்ச்சியின் அதிர்ச்சியிலிருந்து மீளலாம். ஆனால் தமிழக சரித்திரத்தில் அது விட்டுச் செல்லும் வடு மாறப் போவதில்லை என்ற கடுமையான வாசகம் தமிழக வாக்காளர்கள் விழிப்புணர்வுக்கு அவசியம் தேவை.

பெங்களூர்-47, மு. புஷ்பராசன்

✉ கோத்தகிரி 'கோடநாடு எஸ்டேட்' விவகாரத்தில் நம் மாநில அரசு கவனத்துடன் வெகு விரைவில் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். இல்லையென்றால் நம் மாநில அரசு 'ஏமாந்த சோணகிரி'யாகத் தலை

## நாலுமே நச்!

குனிவைச் சந்திக்க நேரிடும்.

பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்

✉ சரியான நேரம் பார்த்து ஜோக்கடிப்பது உமக்குக் கைவந்த கலையாயிற்றே! ஜோ(ட்)க்ஸ் நான்குமே நச்!

பெத்தானியாபுரம், ஏ. முத்துலட்சுமி

✉ பி.ஜே.பி. தலைவர்களின் பயோடேட்டா என்றவுடன் சாதாரணமாகத்தானிருக்கும் என்ற எண்ணத்தில்தான் படித்தேன். ஆனால், தெரியாத விஷயங்களையும் கூறி, பின்னி விட்டீர்கள்!

தேவனாங்குறிச்சி, பா. வடிவேல்

✉ 'தேர்நிலைத் தூரங்கள்' வித்தியாசமான தலைப்பு; நெஞ்சைத் தொடும் யதார்த்தமான சிருஷ்டிப்பு.

மேலகிருஷ்ணன்புதூர், ஆர்.கே. லிங்கேசன்.

✉ விவசாய வேலைகள் இல்லாத கோடையில் விவசாயிகள் ஒன்று சேர்ந்து 'ஆபரேஷன் காட்டாமணக்கு' நடவடிக்கையை சிரமதானம் மூலம் செய்தால் காவிரியை ஒரே வாரத்தில் சீரமைத்து விடலாம். இலவச மின்சாரம் தரும் அரசுக்காக இதைக்கூட செய்யக்கூடாதா?

தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி

✉ சி. ராமானுஜாச்சாரியார் பற்றிய அமரர் கல்கி அவர்களின் கட்டுரையைப் படித்து மிகவும் பரவசமானேன். இல்ல மாணவர்களால் தாத்தா என அன்புடன் அழைக்கப்பட்டவர். அவருக்கு பணிவிடை செய்ய பாக்கியம் பெற்று அவருடைய அன்புக்குப் பாத்திரமான எண்ணற்ற இல்ல மாணவர்களில் நானும் ஒருவன். எங்கள் அன்பு தாத்தாவின் பெருமைகளை எங்கள் கண்முன் நிறுத்தி, அவரை மனதாரத்தொழ நினைவூட்டியது கட்டுரை.

கோவை-11, சுந்தரராஜன்

### பாராட்டுக்குரிய பணி அல்ல!

✉ காதில் விழுந்தவை என்ற தலைப்பில் "ஊழியர்கள் பாராட்டும் அமைச்சர்" என்று மாண்புமிகு வீரபாண்டி ஆறுமுகம் அவர்களை தலைமைச் செயலக ஊழியர்கள் பாராட்டுவதாக எழுதியிருந்தீர்கள்.

தலைமைச் செயலகத்தில் சட்டத்துறையும் நிதித் துறையும் தனித்தனி- வெவ்வேறு துறைகளாகும். மற்றத் துறைகள் அனைத்தும் ஒரு அலகு என்று உள்ளது. இந்த அடிப்படை உண்மையை மாண்புமிகு அமைச்சர் புரிந்து கொள்ள மறுத்ததோடு, நிதித்துறை ஊழியர்களுக்கு இணையாக ஒரு அலகுத் துறையினருக்கு ஊதிய உயர்வினை மட்டுமே, சில நிர்பந்தங்களினால் 29.5.98 அன்று (இந்த நாள் முக்கியத்துவம் வாய்ந்தது) வழங்க ஆணையிடச் செய்துள்ளார். இதன் மூலம் அரசுக்கு ஒரு ஆண்டிற்கு இரண்டு கோடி தொடரும் செலவு ஏற்பட்டுள்ளது. கூடுதல் வேலை செய்யாமல் அதிகப்படி சம்பளத்தினை மட்டும் பெறும் வகையில் மக்களின் வரிப்பணத்தை வீண் செய்த பெருமை அமைச்சரைச் சாரும்.

இவ்வாறு, அமைச்சுப்பணியில் வெவ்வேறு துறைகளில் ஒரே குரூப் IV தேர்வின்மூலம் தெரிந்தெடுக்கப்பட்ட ஊழியர்கள் அனைவரும், வணிகவரித்துறை அல்லது வருவாய்த் துறை ஊழியர்களுக்கு இணையாகத் தங்களுக்கும் ஊதிய உயர்வு வேண்டுமென்ற கோரிக்கையினை முன் வைத்தால் (பதவி உயர்வு அல்ல. ஏனெனில் பதவி உயர்வு என்றால் அதற்குரிய வேலையும் செய்ய வேண்டுமே!) அரசின் நிலைமை என்னவாகும்? இந்நிகழ்வில் அமைச்சரின் பணி பாராட்டுதற்குரியது அல்ல.

சென்னை -86, எஸ்.எஸ். சந்திரசேகரன், இணைச் செயலர், நிதித் துறை.

# இங்கு ஒரு திருப்பதி!

சென்னைல ஒரு திருப்பதி உருவாயிட்டிருக்கறதை நேர்ல பார்த்தபோது கொஞ்சம் ஆச்சர்யமாகவும் நிறைய சந்தோஷமாகவும் இருந்தது. க்யூல காத்திருக்கும் ஜனங்கள், மடைப்பள்ளிலேருந்து கன்வேயர்ல நகர்ந்து போகும் பிரசாத அண்டாக்கள், தமிழ்ல ஜரகண்டி, படுசுத்தமான சுற்றுப்புறப் பராமரிப்பு, வாலண்டியர்ஸ் உற்சாகமா ஓடி ஓடி உழைக்கற காட்சி, பளபளன்னு கார்ல வந்து இறங்கற பணக்கார பக்தர்கள்...

லாஸ்ட் வீக் நங்கநல்லூர் ஆஞ்சநேயர் கோயிலுக்குப் போயிருந்தேன். ஃபர்ஸ்ட் பேரா சமாசாரம் முழுக்க அங்க பார்த்ததுதான். குறுகிய காலத்துல நல்ல பராமரிப்பு மூலமாவே பிரபலமாகியிருக்கிற கோயில் இது.

ரோடுலேருந்து பார்த்தாலே மூலவர் தெரியறார். அவ்ளோ உயரம்; அதைவிட கம்பீரம்!

நிறைய பக்தர்கள் வர்றதால, கோயில் சார்ந்த வியாபாரங்கள் பெருகி, சாலை ஆக்கிரமிப்பு தொடங்கியாச்சு, இப்பவே.

கோயில், ட்ரஸ்ட் நிர்வாகம்னு நினைக்கறேன். ஒழுங்கு, கட்டுப்பாடுகள் விஷயத்துல ஸ்ட்ரிக்டா நடந்துக்கிட்டாங்கன்னா பிற்கால வளர்ச்சிக்கு ரொம்ப நல்லது. இப்பவே கோயிலை சுத்தி ஜோசியர்கள், சாமி (யார்?)கள் உருவாக ஆரம்பிச்சிட்டாங்க. நாடு முழுக்க இருக்கற பக்தர்களை ஜாதி, மத வித்தியாசமில்லாம வரவழைக்கும் சக்தி சுவாமிக்கு இருக்கு. 'சாமி'களால் அது தடைபட்டுப் போகாம இருக்கப் பார்த்துக்கணும்.

• • •

'விஷ்ணுபுரம்: ஒரு பார்வை' புஸ்தகத்துல ஜெயமோகனோட பின்னுரை பத்தி நான் எழுதியிருந்ததுக்கு அவரோட ஃப்ரெண்ட் செந்தூரம் ஜெகதீஷ் (மறுபடியும்) ரியாக்ட் பண்ணியிருக்கார்.

விஷ்ணுபுரத்துக்கு என் விமர்சனத்தைக் கண்டிச்சு அவர் முன்பு எழுதின லெட்டரை நான் இன்டலடிச்சிட்டதா ரொம்ப ஃபீல் பண்றார் ஜகதீஷ். உண்மையைக் கொஞ்சம் நகைச்சுவையோட சொன்னா அதும் பேர் இன்டலா? I don't think so.

இப்பகூடப் பாருங்க... "பிரபஞ்சன், அசோகமித்திரன், சா. கந்தசாமி, கோவை ஞானி, இந்திரா பார்த்தசாரதி தவிர வேறு எந்தப் பெரிய எழுத்தாளரும் விமர்சகரும் விஷ்ணுபுரத்தை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை"ன்னு எழுதியிருக்கார்.



அபிப்பிராயங்கள் பல தரப்பட்டவை. அவரவர் சொந்த சிந்தனைல உருவாகற விஷயம் அது. எழுத்தாளர்களும் பொது வாழ்க்கைக்கு வந்திருக்கறவங்களும் அதையெல்லாம் ஒத்துக்கறதுக்குப் பக்குவப் படணும். அதை விட்டுட்டு ஒரே கருத்தை திணிக்க முயற்சி பண்றது சரியில்லை.

ஜெயமோகனே, விஷ்ணுபுரத்துலேருந்து வெளியே வந்து அடுத்த நாவலை எழுதி முடிச்சிருக்கார். ஜெகதீஷ் வெளில வரலைன்னா எப்படி? நான் முடிவு பண்ணிட்டேன். இனி, no more talk about Vishnupuram.

• • •

போன வாரக் கல்கி

சுமி



"தலைவரே, உங்களை மாதிரியே உங்க பையனும் அரசியல்ல பெரிய ஆள் ஆயிடுவான்."

"எப்படிய்யா சொல்றே?"

"அவனை ஸ்கூல்ல கண்டிச்ச ஆசிரியரை தண்ணி இல்லாத காட்டுக்கு மாத்தச் சொல்லி உங்ககிட்ட சொல்றானே..."

— பா. ஜெயக்குமார்

---

'வாண்டு சைகாலஜி'ல (யாருப்பா அது என்னை மாதிரியே ரெண்டெழுத்துப் பேர் வெச்சுக்கிட்டு?) குழந்தைகளை பயமுறுத்தறது பத்தி எழுதியிருந்ததைப் படிச்சதும் ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது.

எனக்குத் தெரிஞ்ச ஒரு வீட்டுக்காரங்க, அவங்க குழந்தை எப்ப படுத்தினாலும் "மர்மதேசம் நாய்கிட்ட பிடுச்சிக் குடுத்துடுவேன்!"னு கண்ணை உருட்டி பயமுறுத்துவாங்க.

நாக்கைத் தொங்க போட்டுக்கிட்டு அலைஞ்ச அந்த டிஜிட்டல் நாயைப் பார்த்தா, நமக்கே பயமா இருக்கும். மூணு வயசுக் குழந்தைக்கு அது என்ன மாதிரி உணர்வுகளை ஏற்படுத்தியிருக்கும்? பேச்சு மூச்சில்லாம அந்தக் குழந்தை சைலன்டா போயிடும் உடனே.

மர்மதேசம் பார்ட் டு வந்தப்ப, "ஒழுங்கா சாப்பிடறியா? இல்லே... கருப்பு...!" - இந்த பயமுறுத்தல் ஆரம்பிச்சுது.

பிச்சைக்காரனை பூச்சாண்டின்னு காட்டி பயமுறுத்தின காலம் போய், இப்ப டீவி சீரியல் கேரக்டர்கள் குழந்தைகளுக்கு பூச்சாண்டியா மாறியிருக்கறதும் ஒருவித கலாசார சீரழிவுதான்.

சொல்லப் போனா, இந்த டிராயிங் ரூம் டெரரிஸ்ட்ஸ் மத்த எல்லாத்தை விடவும் ரொம்ப அபாயகரமானவர்கள். நேரடியா குழந்தைகளோட மனசை பாதிக்கற விஷயம் இது.

இந்த அமானுஷ்ய கேரக்டர்ஸைக் காட்டி, இதே பேரண்ட்ஸ், குழந்தைகளுக்கு 'இதெல்லாம் பொய்; காத்து கருப்புன்னு ஒண்ணும் இல்லை'ன்னு விளக்கிச் சொல்லலாம்.

அப்படி இல்லாம தொடர்ந்து இப்படி பயமுறுத்திக்கிட்டே இருந்தா, அடுத்தத் தலைமுறை முழுக்க ருத்ரன், மாத்ருபூதம், நம்பி மாதிரியான மனநல மருத்துவர்கள் க்ளினிக்லதான் ஒரு கட்டத்துக்கு மேல க்யூல நிக்க வேண்டி வரும்.

• • •

இந்த வாரக் கவிதை: (மறுபடியும் விஜயராகவன், கங்கிராட்ஸ்!)

## நிரந்தர WIPEப்பு

*அமாவாசையும் இல்லை,*
*கிரகணமும் இல்லை.*
*இருந்தும்*
*தமிழ்நாட்டில்*
*அநேகர் வார்த்தது*
*என்னும் தண்ணீரும்.*

*பரமபதத்தில்*
*பரந்தாமனுக்குப்*
*பிடித்தது கவலை.*
*பித்ருக்களுக்குப்*
*போட்டியாக*
*பிக்ஸட் டிபாஸிட்டுகளா?*

*இங்கிருப்பவர்கள்*
*சமாதானம்:*
*இரண்டுமே*
*ஒரு வகையில்*
*1. நம்மிடம் உறவு கொண்டாடிவிட்டு மீளாமல் மறைந்தவை*
*2. நாமும் நம் குடும்பமுமே வாரிசுகள்*
*3. 'கடன்'*

• • •

**அன்னம் மாதர் மசாலா**

- ஏதாவது புரியுதா? புனால ஒரு வீட்டு வாசல்ல இப்படியொரு போர்டைப் பார்த்ததா எழுதி அனுப்பியிருக்காரு நம்ம மன்ற உறுப்பினர் சூளைமேடு வி.வேதாந்தம்.

பார்த்ததுமே நான் கண்டுபிடிச்சுட்டேன். உங்களால முடியுதா பாருங்க. (முடியலைன்னா, விடை அடுத்த வாரம்)

— சுமி



# ஆசை: ஆராய்ச்சி தொழில்: ஷூ பாலீஷ்!

தேபஜோதி பந்தோபாத்யாய். வயது 33. டெல்லியில் ஜந்தர் மந்தர் பகுதியில் ஷூ பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கிறார்.

இவர் ஜாதவ்பூர் பல்கலைக் கழகத்தில், 83ம் வருடம் இயற்பியலில் ஹானர்ஸ் பட்டம் பெற்றவர். அப்பாவுக்கு ரயில்வே யில் ஸ்டெனோவாக வேலை. இன்னொரு சகோதரனும் ரயில்வேயில்தான் இருக்கிறார்.

தேபஜோதி கண்டுபிடித்துள்ள கருவி யின் பெயர் 'கேஸ் ஃபெஸ்ட்' இக்கரு வியை சமையல் எரிவாயு சிலிண்டரில் பொருத்துவதன் மூலம் சுமார் 40 சதவீதம் எரிவாயு மிச்சமாகும். ஏறத்தாழ ஆயிரம் கேஸ் ஃபெஸ்ட் கருவிகளைத்தாமே தயாரித்து, விற்பனை செய்திருக்கிறார்!

இவரது கண்டு பிடிப்பே இவருக்கு ஆபத்தை வரவழைத்து விட் டது! இவருடைய புதிய கண்டுபிடிப்பு பற்றி கேள்விப்பட்ட சிலர், அதனைத் தங்களுக்கு விற்று விடும்படி மிரட்டியுள் ளனர். இவர் அதற்கு சம்மதிக்காமல் போகவே, இவரையும் இவரது குடும்பத்தின ரையும் துன்புறுத்தியுள்ளனர். இவரது புகாரை போலீஸோ, அரசாங்கமோ காதில் போட்டுக் கொள்ளவில்லை. இனியும் தம் சொந்த ஊரில் இருப்பது தமக்கும் குடும் பத்துக்கும் நல்லதல்ல என்று கருதிய தேப ஜோதி, வீட்டில் சொல்லிக் கொள்ளாமல் டில்லிக்கு ஓடி வந்து விட்டார்.

தம் கண்டுபிடிப்புக்கான சான்றிதழ் பெறும் நோக்கத்துடன் இவர் பெட்ரோ லியம் சேமிப்பு மற்றும் ஆராய்ச்சி நிறு வனத்தை அணுகியிருக்கிறார். அவர்கள், நாற் பதாயிரம் ரூபாய்க் கட்டணம் பெற்றுக் கொண்டார்களே தவிர, இன்றுவரை உரிய சான்றிதழை வழங்கவில்லை. இரண்டு வருடங்கள் ஓடிவிட்டன.

டேராடூனில் உள்ள இண்டியன் இன்ஸ்டி டியூட் ஆஃப் பெட்ரோ லியம் என்ற அமைப்பின் உதவு களைத் தட்டினார். அவர்கள், இவரது கண்டுபிடிப்பைப் பரிசோதனை செய்து பார்த்துவிட்டு, இக்கருவியைப் பயன்படுத்து வதன் மூலம் உண்மையிலேயே நாற்பது சதவீதம் சமையல் எரிவாயுவை மிச்சம் பிடிக்க முடியும் என்று சான்றிதழ் வழங்கி யுள்ளனர். அடுத்து, தமது கண்டு பிடிப்புக்கு ஐ.எஸ்.ஐ. முத்திரை பெறும் முயற்சியில் இறங்கியுள்ளார் இந்த இளைஞர்.

"எனக்கு வயிற்றுப் பிழைப்பு என்று ஒன்று இருக்கிறதே! அதனால்தான் ஷூ பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறும் இவர், "இந்த ஏழையின் கண்டு பிடிப்பை இங்கே அங்கீகரிப்பார் யாரு மில்லை! ஜெர்மன் நாடு என் கண்டு பிடிப்பில் ஆர்வம் காட்டுகிறது. நானும், ஜெர் மானிய குடியுரிமை பெற்று, அங்கேயே குடும்பத்துடன் குடியேறி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று சோகக் குரலில் சொல்கிறார் தேபஜோதி பந்தோபாத்யாய்!

— சி.எம்.

நன்றி : தி வீக்



வெயில் வெயிலு வெயிலம்மா!
"என்னம்மா இது! இளநீர்ல தண்ணிய காணோம்?"
"கொளுத்தற வெயில் தாங்காம ஒருவேளை மரமே குடிச்சிருக்கும் சாமி."
"ஐஸ்க்ரீம் கேட்டா கூல்டிரிங்க் கொண்டு வர்றே?"
"இது ஐஸ்க்ரீம் தான் சார். வெயில் சீசன்ல எப்படியும் பவர்கட். கூலர், ப்ரிட்ஜ் வேலை செய்யப் போறதில்லை! அதனால, புதுசா இப்படி பாட்டில் டைப்ல விட்டிருக்காங்க."
"ஸ்... என்னவோ என்னோட பெரிய விசிறினு சொல்றே. கொஞ்சமாவது காத்து வீசறியா?


"என் படம் நாலு வாரமா ஹவுஸ் புல். அதிக சம்பளம் கேட்டா என்ன தப்பு?"
"வெயில்ல ஏசி சுகத்துக் காக கும்பல் தியேட் டர்ல வந்து தூங்கிட்டுப் போவுது. குறட்டை சப் தம் தாங்க முடிய லையாம், போய்ப் பாரு!"
"ஏசி ரூம்ல வந்து உட் கார்ந்தா லேசுல நகர மாட்டேங் கறாங்க. அதனால இப்படி மாத் திட்டோம்."
"கொளுத்தற வெயில்ல எப்படி அவர் செருப் பில்லாம நடக்கறாரு?"
"கட்சிக் காரரில்லே? அடிக்கடி தீ மிதிச்ச அனுபவம்."
"என்ன இருக் குன்னு கேட்டா, ஜில் லுன்னு இட்லி, வடை, போண்டாங்கிற?"
"காயற காய்ச் சல்ல சூடா இட்லி, தோசைன்னா கஸ் டமர்ஸ் அடிக்க வர்றாங்க!"
மாதுரி



• மோயா

மூன்றாம் முறையாக ஏடிபி டென்னிஸ் பந்தயங்கள் நுங்கம்பாக்கத்தில் உள்ள, கம்பீர மான செயற்கைப் புல்வெளி ஸ்டே டியத்தில் நடந்து கொண்டிருக்கின் றன.

அத்தனை சீசன் டிக்கெட்டுகளும் நான்கு நாட்களுக்கு முன்பே விற்றுத் தீர்ந்து விட்டன.

பார்வையாளர்கள் கண்டுகளிக்க வந் திருப்பது நம் நாட்டுத் திறமைசாலிகளின் டென்னிஸ் வீச்சுக்களை; அதைவிட முக்கிய மாக சர்வதேசப் பிரபலங்களை!

'உலகப் புகழ்பெற்ற அமைப்புதான் இந் தப் போட்டிகளை நடத்துகிறது; பரிசுத் தொகை நான்கு லட்சம் டாலருக்கும் அதி கம்தான்' என்றாலும் ராஃப்டர், பெக்கர் போன்ற மிகச் சில பிரபலங்கள்தான் இதில் கலந்து கொண்டிருக்கிறார்கள். இத்தனைக் கும் இதில் பெறப்படும் பாயின்டுகள் சர்வ தேச ராங்கிற்குக் கணக்கெடுத்துக் கொள் ளப்படும்! ஒருவேளை பரிசுத் தொகை அவர்கள் லெவலுக்குக் குறைவோ?

இந்த வி.ஐ.பி. பஞ்சத்தைப் போக்குவதில் இம்முறை முதலிடம் பெற்றிருப்பவர் கார்லோஸ் மோயா. ஸ்பெயின் நாட்டுக் காரர். வலைக்கு அருகில் வந்து பந்தைத் தாக்கும் டெக்னிக்கில் ரசிக மனங்களை வலை வீசிப் பிடித்தவர். இந்த 22 வயது இளைஞர் தமது முதல் கிராண்ட் ஸ்லாம் வெற்றியைச் சென்ற வருடம்தான் பெற்றார் - ப்ரெஞ்ச் ஒபன் போட்டிகளில். அதே வேகத்தில் முன் னேறி, முதல் ரேங்கைப் பிடித்து விட்டார்.



• லியாண்டர் பெய்ஸ்

ஆனால் விப்டன் போட்டித் தொடரில் தோற்றதால் இரண்டாமிடத்துக்குத் தள்ளப்பட்டு விட்டார். இப்போது உச்சியில் இருப்பவர் பீட் சாம்ப்ராஸ்!

மிகவும் விநோதமான ஒரு சூழல் இப்போது. லியாண்டர் பயஸ் வென்றால், அது இந்தியாவுக்குப் பெருமை. மோயா வெற்றி பெற்றால், அதுவும்தான்! வேறொன்றுமில்லை. இப்போதைக்கு

களுக்கு வாய்ப் பளிப்பது போலவே, சென்னையைப் பற்றி மதிப்பிட, அவர்களுக்கும் ஒரு வாய்ப்பு!

"மிருகங்களும் மனிதர்களும் ஒரே சமயத்தில் இங்கு சாலையில் நடக்கிறார்களே? ஹோட்டலிலிருந்து ஸ்டேடியத்துக்கு வந்த

# சென்னை டென்னிஸ் — ஒரு க்ளோசப்!

சாம்ப்ராஸை விட, மோயா ஒன்பது பாயிண்டுகள்தான் பின்னணியில் இருக்கிறார். சென்னைத் தொடரில் மோயா சாம்பியனாகி விட்டால் அவருக்கு மீண்டும் முதலிடம்! இந்தியாவில் அது நிகழ்ந்தது என்ற பெருமை நமக்கு!

சொல்லப் போனால், இங்கு வர மோயா சம்மதித்ததற்கு இதுவே கூட ஒரு காரணமாக இருக்கக்கூடும். 'பாண்டியன்' ரஜினி டைப்பில் மோயாவும் தன் தலையில் 'டிக் மார்க்' உள்ள பட்டையை அணிந்து கொண்டு ஒருகை பார்க்கத் தயாராகவே இருக்கிறார்.

நிறைய செலவழித்து வெளி நாட்டு டூர்களுக்குச் செல்ல விரும்பாமல், உள்ளூரிலேயே விளையாடி, கௌரவமிக்க ஏ.டி.பி. பாயிண்டுகளை இந்திய வீரர்கள் பெற முடியும் என்பது நமக்கு ஒரு சாதகமான விஷயம். (ஆனால் சுலபமாக இந்தப் பாயிண்டுகளை தட்டிச் செல்வது வெளி நாட்டு வீரர்கள்தான்!) இந்த முறை பலரது கவனத்தைக் கவர்ந்திருப்பவர் தமிழ் நாட்டைச் சேர்ந்த வினோத் ஸ்ரீதர்.

வெளிநாட்டு டென்னிஸ் பிரபலங்களை நேரில் கண்டு மதிப்பிட ஏ.டி.பி போட்டிகள் சென்னைவாசி

ஒவ்வொரு நிமிடமும் ஏதாவது விபத்து நேர்ந்து விடுமோ என்ற பயமும் ஏற்பட்டது. அப்படி எதுவும் ஏற்படவில்லையென்றதும் ஆச்சரியம் ஏற்பட்டது'' என்று சென்ற முறை போரிஸ் பெக்கர் கூறியது நினைவிருக்கலாம்.

பார்க்கலாம், மோயா என்ன சொல்கிறார் என்று!

— குல்லூ



• பீட் சாம்ப்ராஸ்





# பேஸ்பருவா அனுப்பிய ஆவணங்கள்!

ஜெயலலிதா வந்து போன புயல் அடங்குவதற்கு முன் புது தில்லியில் அவசர அவசரமாக ஒரு கூட்டம் நடந்தது. அதிமுக நீங்கலான ஆளும் கூட்டணிக் கட்சிகளின் கூட்டம் அது!

அமைச்சர்கள் உட்பட அதிமுகவினர் யாருமே கலந்து கொள்ளாத இக் கூட்டத்தில் மம்தா பானர்ஜி, "நாம் எந்த மிரட்டலுக்கும் பணிய வேண்டியதில்லை" என்று கூறியிருக்கிறார்.

சமதா, அகாலிதளம், பிஜு ஜனதா தளம், லோக்சக்தி தலைவர்களெல்லாம் இந்தக் கூட்டத்தில் ஜெயலலிதாவை வன்மையாகக் கண்டித்திருப்பதும் அவரது மிரட்டலைப் பொருட்படுத்த வேண்டாம் என்று கருத்துத் தெரிவித்திருப்பதும் தில்லியில், அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது.

ரொம்ப சிக்கல் கொடுத்தாரென்றால் பதில் தாக்குதலுக்கும் ஏற்பாடு நடந்திருக்கிறது.

லண்டன் ஹோட்டல், பழைய ஜெயா டீவி, அந்நியச் செலாவணி விவகாரம் மற்றும் அயல் நாடுகளிலிருந்து முறைகேடாகப் பணம் பெற்ற விஷயம் என ஆறு குற்றச்சாட்டுகள் கொண்ட மூன்று நோட்டீஸ்கள், என்ஃபோர்ஸ்மென்ட் துறையிலிருந்து அனுப்பி வைக்கப்பட்டு, அவை மேலிடக் கட்டளையால் 'நிலுவை'யில் வைக்கப்பட்டிருப்பதை நினைவு படுத்தினர் பிற கூட்டணித் தலைவர்கள்.

ஜெ. வற்புறுத்தலால் மாற்றப்பட்ட முன்னாள் அமலாக்கப் பிரிவு இயக்குநர் பேஸ் பருவா, தாம் முன்பே நிதி அமைச்சகத்தின் ஒப்புதலுக்குத் தேவையான ஆவணங்களை அனுப்பி விட்டதாகக் கூறவே, "ஜெவின் மிரட்டல் தொடர்ந்தால், எதிர்வினையாக இதைப் பயன்படுத்தி விடலாம்" என்று தீர்மானமாகப் பேசியிருக்கிறார் ஓர் ஆளுங்கட்சிப் பிரமுகர்.

நல்லவேளையாக ஜெ - சோனியா சந்திப்பு பிரமாதமான விளைவுகளை ஏற்படுத்திவிடாததால், கொஞ்ச நாளைக்கு அம்மா சும்மாதான் இருப்பார் என்று கருதுகிறார்கள்.

**பா**சுமதிக்கு அமெரிக்கா பேடன்ட் உரிமை

## சென்ற வார டீவி

**விமர்சிக்கிறார் கார்ட்டூனிஸ்ட் கேஷவ்**



• கேஷவ்

● ஒரு நிகழ்ச்சித் தொகுப்பாளர் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு ஜீ.டீவியில் வரும் 'ஸரிகமா'வை வழங்கும் சோனு நிகம் சரியான எடுத்துக்காட்டு. சிரித்த முகம், திறமை, குரலினிமை, எப்படிப் பாட வேண்டும் என்று லெக்சர் அடிக்காமல், கலந்து கொள்பவர்களுக்கு அவர் அளிக்கும் ஊக்கம், நடுவர்கள் முன் ஒரு அடக்கம் - ஆஹா!

● தமிழ் தொலைக்காட்சித் தொடர்களில் - முக்கியமாக கேபிள் சானல்களில் - அனேகமாக எல்லாக் கதைகளும் நடுத்தர வர்க்கக் குடும்பம் ஒன்றைச் சுற்றியே இருக்கும். ஆனால் அவர்கள் வசிப்பதோ, ஒரு கோடீஸ்வரனின் பங்களாவாக இருக்கும்! நம்பகத்தன்மை தேவையில்லையா? 'காஸ்ட்லி டைமு'ம், 'அட்சயா'வும் அந்த விதத்தில் பரவாயில்லை.

● 'சக்தி'யில் பானுப்ரியா இறக்கும் காட்சி - தாங்க முடியவில்லை. அனுதாப அலையை உருவாக்கி விட்டால் கதையில் பிடிப்பு ஏற்பட்டு விடும் என்றெண்ணி இதுபோன்ற காட்சிகளை

கொண்டாடிய கதை எல்லோருக்கும் தெரியும்.

சமீபத்தில் நடந்த ராஜ்யசபை விவாதத்தில் இந்த 'பேடண்ட் உரிமை' பிரச்னை எழுப்பப்பட்டு ஆரோக்கியமான, உபயோகமான ஒரு விவாதம் நடந்தது.

விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தனி உரிமைப் பத்திரத் திருத்த மசோதாவை காங்கிரஸ் உறுப்பினரும் பிரபல வழக்கறிஞருமான கபில் சிபல் உடனே ஆதரித்ததும் பா.ஜ.க. உறுப்பினர் அருண் ஷோரியுடன் ஆரோக்கியமான விவாதம் நடத்தியதும் கண்கொள்ளாக் காட்சி.

பாசுமதி விவகாரத்தில் நமது தனியுரிமையை நிலை நாட்ட அமெரிக்க நீதிமன்றத்தில் தான் வழக்குப் பதிவு செய்து வாதாட வேண்டியிருக்கிறது.



அருண் ஷோரி

இவ்வாறெல்லாம், பேடண்ட் விஷயத்தில் நம் உரிமையை நாம் நிலை நிறுத்திக்கொள்ள, இந்த மசோதா தாக்கலாகி வெற்றி கண்டால் பல நன்மைகள் நடக்கும்.

ஒரு தயாரிப்பின் விலையை அநியாயமாக உயர்த்தி நிர்ணயம் செய்தால், அரசு அதை ஒரு கட்டுக்குள் கொண்டு வர உதவும்.

இதை சட்டப்படி அரசு எப்படிக் கட்டுப்படுத்த முடியும் என்பதையும் விளக்கிக் கூறிய சிபல், பொருளை விற்கும் அதிகாரத்தையே அரசு எப்படி தன் வசப்படுத்திக் கொள்ள முடியும் என்றும் விளக்கினார்.

"சட்டமியற்றுவதோடு திருப்தியடையாமல், இதற்கெனவே சிறப்பு நீதிமன்றங்களை அமைக்க வேண்டும்; அப்போதுதான் பிரச்னை ஏதும்



''சட்டசபையில் நம்ம எம்.எல்.ஏ புத்திசாலித்தனமா ஒரு கேள்வி கேட்டிருக்காரு.''

''என்ன கேள்வி?''

''எதிர்க்கட்சி – ஆளுங்கட்சி திடீர் மோதலால் ஏற்படும் மூக்குடைப்பு, மண்டை உடைப்பு போன்றவற்றுக்கு உடனடி சிகிச்சையளிக்க சட்டசபைக்குள்ளேயே நவீன மருத்துவமனை அமைக்கப்படுமான்னு!''

— உ. ராஜாஜி

வந்தாலும் இங்கேயே தீர்த்துக்கொள்ள முடியும்" என்றார் அருண்ஷோரி.

"எம்பிக்களுக்குத் தொகுதி முன்னேற்றத்துக்காக 5000 கோடி ஒதுக்குவதுபோல, நமது தனிக் கண்டுபிடிப்புகளுக்கு சர்வதேசத் தனியுரிமை பெற ஆயிரத்திலிருந்து ஐயாயிரம் கோடிவரை ஒதுக்கலாம் என்றார் ஷோரி.

எந்தப் பொருளின் தனியுரிமை பாதுகாக்கப்பட வேண்டும் என்று கருதுகிறோமோ, அவற்றின் உரிமையை 2005க்குள் பெற்றுவிட இந்தச் சட்டத் திருத்தமும் தனி நீதிமன்றமும் கட்டாயம் உதவும்!

இந்நிலையில், ஸ்ரீவில்லிபுத்தூர் சரக்கான ஆண்டாள் ஸ்நானப் பொடியின் பேடண்ட் உரிமையைக்கூட ஒரு பன்னாட்டு நிறுவனம் அபகரிக்க முயற்சி செய்வதாகத் தகவல் வந்திருக்கிறது! உடனே செயல்படாவிட்டால், ஆண்டாளுக்கே கூட அவர்கள் பேடண்ட் உரிமை கொண்டாடத் தொடங்கி விடக்கூடும்!

— டெல்லி வெங்கட்

---

**மிக நீளமாகக் காண்பிப்பது தவிர்க்கப்பட வேண்டிய விஷயம்.**

**● நிறைய சினிமாப் பாடல்கள், கோவில்களில் படமாக்கப்படுவது பெரும் வருத்தத்தைத் தருகிறது. இது குறித்து மஹா பெரியவாள் கூறியது நினைவுக்கு வருகிறது. ''ஸ்வாமியை எல்லாம் கோவில்களிலிருந்து அப்புறப்படுத்திவிட்டு, எல்லா கோவில்களையும் ஸ்டுடியோக்களாக மாற்றி விடுங்களேன்!'' கலை இயக்குனர்களுக்குக் கற்பனைப் பற்றாக் குறையா?**

**● மாயாவி மாரீசன் இப்போதைய தொடர்களில் ஒரு நல்ல நகைச்சுவை கலந்த குடும்பத் தொடர். ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ் அழகு சேர்க்கிறது. மாரீசனாக வருபவரின் தோற்றம் ஒரு ப்ளஸ் பாயிண்ட்.**

**● டிஸ்கவரி சானலில் மூன்று பயணிகள் இம்முறை கேரளாவுக்கு வருகிறார்கள். விசேஷம் என்னவென்றால் இடங்களைப் பற்றிச் சொல்வதோடு நிறுத்திக் கொள்ளாமல், புடைவை உடுத்திக் கொள்வது, விளக்கைச் சுற்றி நடனமாடுவது (மற்றவர்களின் அசைவுகளை கவனித்துக் கொண்டே), புலி வேஷம் போட்டுக் கொள்வது, இப்படி சுற்றுப்புறத்தோடு ஒன்றிப் போகிறார்கள். ஒரு பயணக் கட்டுரையின் விஷுவல் நிகழ்ச்சி இப்படியல்லவா இருக்க வேண்டும்?**

**தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்**

# கார் - உணர்வுகளின் வெளிப்பாடு?!




• புதிய ஃபோர்டு தொழிற்சாலையில்...

பெட்ரோலில் ஓடும் முதல் காரைத் தயாரித்தவர் ஹென்ரி ஃபோர்டு என்ற அமெரிக்கர். 'T' என்ற அவரது கார் மாடல் சுமார் எழுபது வருடங்களுக்குமுன் ஒன்றரைக் கோடி என்கிற அளவில் விற்றுத் தீர்ந்தது!

இப்போது அவரது நிறுவனம் இந்தியாவிலும் 'டயர்' பதிக்கப் போகிறது. சென்னைக்கருகிலுள்ள மறைமலை நகரில் தொடங்கப்பட்டுள்ள இவர்களது தொழிற்சாலை வருடத்துக்கு ஒரு லட்சம் கார்களைத் தயாரிக்கப்போகிறதாம்! புதிய மாடலுக்கு C-195 என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

முன்பு ஹுண்டாய், இப்போது ஃபோர்டு என்று பல வெளி நாட்டு ஜாம்பவான்கள் தங்கள் பார்வையைச் சென்னைப் பகுதியில் பதித்திருப்பதற்கான காரணங்களில் முக்கியமானவை துறைமுகமும், குறைந்த ஊதியத்தில் கிடைக்கும் உழைப்பும் தான். ('இனியும் தமிழகத்தில் தொழில் துறையில் பின்னடைவு ஏற்பட்டுள்ளது என்று யாராவது சொன்னால் அவர்களுக்காக மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலை ஒன்று ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கும்' என்றார் திறப்பு விழாவில் தமிழக முதல்வர்).



• பிலிப்

சொல்லப் போனால் போர்டு நிறுவனம், கார் பாகங்களை இந்தியாவில் ஏற்கெனவே தயாரித்து வந்திருக்கிறது! 1995ல் நம்நாட்டு மகேந்திரா நிறுவனத்துடன் கூட்டுச் சேர்ந்து 'ஃபோர்டு எஸ்கார்ட்' என்ற நிறுவனம் உருவானது. நாசிக்கில் இயங்குகிறது இது.

'ஃபோர்டு இந்தியா'வின் நிர்வாக இயக்குனர் பிலிப் ஸ்பெண்டர், ஜாடையில் கிளின்டனை நினைவு படுத்துகிறார் என்றாலும் நியூசிலாந்துக்காரர். இருபத்து நான்கு வருடங்களாக ஃபோர்டின் ஊழியராக இருக்கும் இவர் ஆஸ்திரேலியாவில் சென்ற வருடம் புதிதாக உருவாக்கப்பட்ட ஃபோர்டு பால்கன் என்ற மாடலின் தயாரிப்பில் பெரும் பங்கு வகித்தவர். "ஒரு கார் என்பது அதன் சொந்தக்காரரின் உணர்வுகளின் வெளிப்பாடு" என்கிறார்.

1700 கோடி ரூபாய் முதலீடு, 250 ஏக்கர் நிலப்பரப்பு ஆகிய பிரம்மாண்டங்கள் தராத நெகிழ்வை வேறு இரண்டு விஷயங்கள் தருகின்றன - காரின் எழுபது சதவீத பாகங்கள் இந்தியாவிலேயே தயாராகின்றன என்பதும், ஊழியர்களில் தொண்ணூறு சதம் பேர் சென்னை-காஞ்சிபுரம் போன்ற உள்ளூர் வாசிகள் என்பதும்தான்!

— ஜி.எஸ்.எஸ்.

# தேவதா உச்சாடனம்
## (பூஜா உபதேசம்)

மனிதனது உடலில் தேங்கிக் கிடக்கின்ற மகத்தான சக்தியை – வெளியே கொண்டு வந்து வெற்றி, விவேகம் வியப்பிட வைக்கும் எதையும் சாதிக்கும் வல்லமையில் வடிவமாக்கும் வழிதான் பூஜா வழி அருள் சக்தி. அதனை அறிந்துதான் அன்றைய சித்தர்கள் – அனைத்திலும் உயர்ந்தது பூஜா வழி முறைதான் என்ற உண்மையை உணர்ந்து உலகிற்கும் எடுத்துக் காட்டினர்.

கோடி செல்வம் வேண்டி நின்ற குபேரனும் – கொடி கட்டி வாழ வேண்டுமென்ற இராவணனும் – இவ்வழி நலங்களை சித்தர்கள் வாயிலாக அறிந்து அதனை அப்பழுக்கற கற்று ஆக்க சக்தியை பெற்று அகிலம் புகழும் நிலையை அடைந்தனர்.– அனந்தங் கோடி நலங்களும் பெற்றனர். அத்தகைய அரிய பூஜா உபதேசம் – அனைவரும் செய்ய ஏற்ற நிலை இல்லை – இறை வழி அதனை பரசியமாக பாரார் அறிய விடாமல் – சித்தர்கள் கட்டிக் காத்தனர். அவர்கள் வழி வாரிசு நிலையினரால் – சீடர்கள் வழியால் வந்ததுதான் இவ்வரிய பூஜை. இதுநாளில் இக்கலை கற்றோர் மிக சிலரே என்ற நிலை கண்டபோது, இன்றைய ஆன்மீக வழி உயர்ந்தோர் சிலரால் இக் கலை இல்லாமல் போய் விடக் கூடாது என்று அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியால் – ஜாதக வடிவிலும் தீய பழக்கமற்ற ஒழுக்க வடிவிலும் 200 நபர்களில் காலை 2 மணி நேரமும், மாலை 2 மணி நேரமும் தவறாது செய்தோர் – எண்ணிய காரியங்களில் தனப்ராப்த்தியும், இணையிலா வெற்றிகளையும் பெற்று வியந்து போயினர் – எல்லையிலா பெரிய கடனையும் கட்டி – என்றும் நிறையும் செல்வ நிலையும் அடைந்திருக்கின்றனர்.

எனவே, தினசரி காலை 2 மணி நேரமும், மாலை 2 மணி நேரமும் பூஜை செய்ய முடியும் என்பாரும், புகைப்பிடித்தல், மதுபானம் செய்தல், புகையிலை போடுதல், பொடி போடுதல் ஆகிய தீய பழக்கங்கள் இல்லாதோரும் இதனை உபதேசம் பெற உரியவர்களென தீர்ப்பு செய்யப்பட்டிருக்கின்றது.

எனவே, அவ்வித இயல்பினர் 15.5.99 தேதி மாலைக்குள் ஜாதக நகலுடன் மனுச் செய்துக் கொள்க. எவர் ஒருவருக்கு இப்பூஜை உபதேசத்தால் – கோடீஸ்வர வாழ்வும், குறைவற்ற குடும்ப நல நிறைவுகளும் கிட்டும் என்ற விதி அமைப்பு இருக்கின்றதோ அவருக்குத்தான் இந்த உபதேசம் பெறுகின்ற வாய்ப்பை ஏற்படுத்திடுவார் கடவுள். அவருக்குத்தான் இந்த விளம்பரம் கண்ணில் படும். உரிய கால வேளையில் மனுச் செய்யும் வாய்ப்பு ஏற்படும். அத்தேதி தவறிடில் பின்னர் மனுச் செய்ய வேண்டாம். காரணம் கடவுள் அனுமதியில்லை என்று பொருள். உரிய காலத்தில் மனுச் செய்து இந்த பூஜா வழி நலம் அடைய கடவுள் வாய்ப்பினை அருளிட எமது நல்லாசிகள். (இப்பூஜா உபதேசத்தை, ஆண், பெண் இருபாலாரும் பெற்றிடலாம், பெண்களும் செய்து அரிய பல நலங்களை அடைந்திருக்கின்றனர்.




பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா,**

யோகி, ராஜயோகப் பயிற்சியாளர்,

பிளாட் எண். 204, அண்ணாநகர்,

மதுரை - 625 020.

தொலைபேசி: 533412, 650576



## 'திரு'விளையாடல்கள்

மகாராஷ்ட்ராவுடைய நிதி நிலைமையை வைத்து அதை உ.பி, பீகாருடன் ஒப்பிட்ட போது, 'இல்லவே இல்லை' என்று அடித்துப் பேசியவர்கள் நாவெல்லாம், மாநில பட்ஜெட்டை மகாதேவ சிவசங்கர் தாக்கல் செய்தபின், மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டுவிட்டது. எக்கச்சக்கமான பொது நலத்(!) திட்டங்களுக்கென்று வாங்கியிருக்கும் கடன் சுமை ஒரு பக்கம் அழுத்த, வரலாறு காணாத 1095 கோடி பற்றாக் குறையை இந்த நாராயணன் ராணே என்ன, சர்வ வல்லமை பொருந்திய அந்த நாராயணனே வந்தாலும், சரிக் கட்ட முடியாது போலிருக்கிறதே! ஒரு சமயம், பொருளாதார நிலையின் பயங்கரம், எந்த எதிர்கட்சியையும் தேர்தலில் போட்டியிட விடாமல் பயமுறுத்தி விரட்டி விடும் என்று கணக்குப் போடுகிறார்களோ? நம்பியவர்களைக் காக்க, நாராயணன் புரியாத லீலைகளா?

## சிவாஜி படும்பாடு

'நாம'த்துக்கும் அரசியல்வாதிகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு! அதற்காக இப்படியா...? லதா மங்கேஷ்கரிடம் சென்று, "நீங்கள் லோகித்வாடி கோபால் ராவ் ஹரி தேஷ்முக் மார்க்கில்தானே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டால், முழி முழி என்று முழிப்பார். அவருக்கே, அவர் இருக்கும் 'பெட்டார் ரோடு' இப்படி ஒரு புதுப் பெயர் பெற்றிருப்பது தெரிந்திருக்காது. "கிராந்தி வீர் வாசுதேவ் பல்வந்த் பாட்கே சௌக் போக வேண்டும்" என்றால், டாக்ஸிக்காரர் அடிக்கவே வந்து விடுவார். "தோபி தலாவ் போகலாமா?" என்றால்தான் அவருக்குப் புரியும். 'ஸம்திங்' வாங்கிக்கொண்டு, அறிந்தவர் தெரிந்தவர் பெயர்களை எல்லாம் ஊர்ப்பட்ட தெருக்களுக்கு வைப்பது பரவலாக நடந்து வரும் கூத்துதான். ஆனாலும், மிகப் புரதானப் பெயர்களை யாவது விட்டு வைக்கக் கூடாதோ? வி.டி.

# யாரிந்த

ஸ்டேஷனை சத்ரபதி சிவாஜி டெர்மினலாக்கி மூன்றாண்டுகளாகப் போகிறது! இன்னும் ஒரு ஈ காக்கை அந்தப் பெயரால் அந்த ஸ்டேஷனை அழைப்பதில்லை. இந்த அழகில் சகார் ஏர் போர்ட்டை வேறு, பிரதமர் மும்பை வரும்போது, சிவாஜியின் பெயரில் நாமகரணிக்கப் போகிறார்களாம்! ஓஹோ... 'மாவீரன் சிவாஜியின் ஆட்சியை நிலை நிறுத்துவோம்' என்று அடிக்கடி சிவசேனைக்காரர்கள் கூறுகிறார்களே.... அது இதுதானோ?

## 'தங்க'மான மனிதர்

படத்தில் உள்ள (மேலே) உருவத்தை யார் என்று நினைக்கிறீர்கள்? ஜூலியஸ் சீசர்...? கிங் ஜார்ஜ்?... சரி.... ஏதோ ஒரு லூயிஸ் அல்லது சார்லஸ் என்றுதானே? (ந)ஹி!... (ந)ஹி!.... அது நம்ம சச்சினேதான்! Societe generale உடன் கார்ப்பொரேஷன் பாங்க்காரர்கள் இணைந்து, ஒபராயில் நடத்திய விழாவில், சச்சினை கௌரவிக்கும் விதத்தில் வருகின்ற உலகக் கோப்பை 99ஐ

முன்னிட்டு, அவர் உருவம் பதித்த தங்க மெடலை வெளியிட்டார்கள். ¼ அவுன்சில், 24 காரட்டில், இதன் மார்க்கெட் விலை கிட்டத்தட்ட 4500 ரூ! விழா நடந்த 'ரீகல் ரூமை' கிரிக்கெட் மைதானம் போலாக்கி, கபில்தேவும் சச்சினும் ஆடியன்ஸ் மத்தியில் தூள் கிளப்பினர். ''பத்து வருடங்கள் தொடர்ந்து ஆடினால், ஆயிரம் ரூபாய் தருவதாக சச்சினிடம் பந்தயம் வைத்தேன்; யமகாதகர் - கெடு முடிந்த ஆறாவது மாதத்திலல்லவா அடிபட்டுக் கொண்டிருக்கிறார்?''

# மாஜீரன்?

என கபில் நொந்து கொள்ள, ''ஹுக்கும்... அந்த ஆயிரம் ரூபாயை இதுவரை என் கண்ணில் காட்டவில்லை'' என்று சச்சின் கிண்டலடிக்க, ''இன்னும் ஒரு பத்து வருடங்கள் சச்சின் தொடர்ந்து ஆடினால், நான் பலப்பல ஆயிரங்களைக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்'' என தங்கமான மனதை கபில் பறை சாற்ற, ''பாஜி (கபில்) வழியிலே சென்று, 'வர்ல்ட் கப்'பை வென்றே தீருவேன்'' என இவர் நெகிழ, ஒரே தங்கமயமான உருகல்தான் போங்கள்!

• ஆசைக்கொரு ஆஸ்கர்



## 'மர'க்க முடியாத ஐடியா!

ஐந்து நட்சத்திர ஓட்டல்களிலெல்லாம் விருந்தினர்களை - முக்கியமாக அந்நியர்களை, ஆரத்தி சுற்றி வரவேற்பது (இந்திய கலாசாரமாம்!) ஃபாஷனாகி விட்டது! பரங்கியர், தம் நெற்றியில் இடப்படும் திலகத்தை எத்தனை நேரம் வைத்துக் கொள்ள வேண்டும், முகம் கழுவும்போது அதை விட்டு வைக்க வேண்டுமா, அட்சதையை வாயில் போட்டு மெல்லுவதா, 'சுவனியர்' என்ற பெயரில் பாதுகாப்பதா, கழுத்தில் போடப்படும் மாலையைக் கழட்டினால் இந்திய உணர்வுகளைப் புண்படுத்துவதாயிருக்குமோ... என்றெல்லாம் திண்டாடித் தவிக்கும் அவஸ்தையை என்னென்பது! நடந்து முடிந்த 'க்ரியேஷன்ஸ்' விழாவில், தத்தா மேகே இஞ்சினியரிங் காலேஜ் மாணவர்கள், இதற்கொரு அருமையான உபாயத்தைத் தெரிவித்தார்கள். ஒவ்வொருவர் கையிலும் ஒரு சிறு செடியைக் கொடுத்து நடச் சொல்வது. அடுத்தமுறை வரும்போது, அந்தச் செடி வளர்ந்திருந்தால், நட்டவர்களுக்கு 10% டிஸ்கவுண்ட் அளிப்பது... அட! சுற்றுச்சுழல் பாதுகாப்புக்குமாயிற்று; மரத்துப்போன உணர்ச்சிகளுடன், வருபவர்களுக்கெல்லாம் இயந்திரச் சிரிப்புடன் ஆரத்தி சுற்றும் தலைவலியிலிருந்து சிப்பந்திகளுக்கு விடுதலையுமாயிற்று!

டெயில் பீஸ்: வயிற்றெரிச்சல்! ஏழு நாமினேஷன்களைப் பெற்றிருந்தும், சிறந்த டைரக்டருக்கான நாமினேஷனைப் பெறவில்லையே எலிசபெத்? சேகர் கபூர் உயிரை விட்டு உழைத்தும், அவரை ஆஸ்கர் மேடையைக்கூட அண்டவிடவில்லையே? ஆசை தீர இப்படி ஒரு படத்தை கற்பனை செய்து, மும்பைக்காரர்களை சாந்தப்படுத்தியிருந்தது பாம்பே டைம்ஸ்!

— ஜெயஸ்ரீ ராஜ்



# குறையொன்றுமில்லை

ஹவ்யத்தைச் சொன்னதுபோல் கவ்யம்-பித்ரு காரியம்-பண்ணுகிறபோதும் விஷ்ணுவைத்தான் கூப்பிடுகிறோம்.

சிராத்த சம்ரக்ஷக ஸ்ரீ மஹா விஷ்ணும் ஆவாஹயாமி.

எல்லோரும் பித்ரு தேவதைகளை ஆராதிக்கிறோம். பித்ரு காரியம் ரொம்ப முக்கியம். அதனால்தான் விஷ்ணு புராணத்தில் யம கீதம், ப்ரது கீதம், ப்ருத்வீ கீதம் என்று பல கீதங்களுள் பித்ரு கீதமும் இடம் பெறுகிறது. அதிலே பித்ரு கீதம் என்பதை பித்ரு தேவதைகளெல்லாம் கானம் பண்ணியிருக்கிறார்கள்-வஸீ, ருத்ர ஆதித்ய ஸ்வரூபர்கள்-இவர்களுக்குப் பித்ரு தேவதைகள் என்றே பெயர். அப்படிப்பட்ட பித்ரு தேவதைகளைப் பித்ரு காரியங்களினால் திருப்தி பண்ணி வைக்க வேண்டும். இல்லையென்றால் பலவிதக் கஷ்டங்கள் ஏற்படும்.

பித்ரு தேவதைகளெல்லாம் பித்ரு கீதத்தால் கானம் பண்ணுகிறார்களே-என்ன கானம் பண்ணுகிறார்கள்...?

சிராத்தம் பண்ணக்கூடிய கிரஹங்களிலே, இந்த வம்சத்திலே ஒரு நல்ல பிள்ளை உதிக்க மாட்டானா...? அவன் உதித்து சிராத்தத்தைச் சிறந்த முறையிலே நடத்த மாட்டானா...? மணியும் பொன்னும் அன்னமும் வஸ்திரமும் கொடுத்து நல்ல முறையிலே அந்த சிராத்தத்தை நடத்தி வைக்க மாட்டானா...? அப்படியொரு நல்ல புத்ரன் இந்த வம்சத்திலே உதிக்க மாட்டானா..? என்றெல்லாம் கானம் பண்ணுகிறார்கள்.

பித்ரு காரியம் என்பது ரொம்ப முக்கியம். வஸுக்கள், ருத்ரான், ஆதித்யான் என்று மூன்று பித்ரு தேவதைகள்தான் அந்தக் காரியத்துக்கு அதிபதிகள்.

சிராத்தத்தின்போது பிண்டப் பிரதானம் பண்ணுவார்கள். அப்படிப் பண்ணுவது பித்



ருக்களைத்தான் போய்ச் சேருகிறது என்பது என்ன நிச்சயம் என்று கேட்கலாம். யாருக்காகப் பிண்டம் வழங்கப்படுகிறதோ அவர் நாம் செய்த பாபத்தினாலே பாம்பாகவோ பசுவாகவோ வேறு ஜந்துவாகவோ பிறவி எடுத்திருப்பாரேயானால் இந்தப் பிண்டம் அவருக்குப் போய்ச் சேருமா...?

'நாமும் சிரமப்பட்டு இதரர்களையும் சிரமப்படுத்தி இப்படி ஒரு அவஸ்தை- ஒரு நாள் பூராவும் இதற்கே சரியாகிவிடுகிறது. என்ன காரியம் இது-பித்ரு காரியம்... என்று தோன்றும்.

இன்னொரு கேள்வி-பித்ரு காரியம் பண்ணுகிறவரின் அப்பா மோக்ஷத்தையே அடைந்து விட்டார். மறுபடியும் பிறவியேயில்லாத வைகுண்டத்துக்கே போய் பகவானுக்கே கைங்கர்யம் பண்ணுகிறார். முக்தாத்மாவாக இருக்கிறார்.

பூமியில் பிண்டப் பிரதானம் பண்ணினால், முக்த தசையிலே முக்தாத்மாவாக இருக்கிறவருக்குப் போய் இந்தப் பிரசாதம் கிடைக்கிறது என்றால்... அவர் மோக்ஷத்திலே பகவானுக்கு எதிரே உட்கார்ந்து கொண்டு இதைச் சாப்பிட்டுக் கொண்டிருப்பாரா...? இந்தப் பிண்டத்தால் அவருக்குத் திருப்தி ஏற்படுகிறது என்றால் மோக்ஷானந்தத்துக்கே இழுக்கு ஏற்படுமே!

சாமான்யமாக, பூலோகத்திலிருந்து போகிற அன்னமானது மோக்ஷத்திலா ஆனந்தத்தைக் கொடுக்கும்? எல்லாவற்றுக்கும் மேலான ஆனந்தம் அல்லவா அது!

பித்ரு கர்மா என்பது அதற்காக அல்ல. இங்கே பித்ரு தேவதைகளுக்கு என்ன காரியம் பண்ணினாலும் வசுக்கள், ருத்ராள் ஆதித்யாள் என்ற பித்ரு தேவதைகளை உத்தேசித்தே பண்ணப்படுகிறது.

யக்ஞத்திலே எப்படி இந்திராதி, வருண குபேராதி தேவதைகளை ஆராதிக்கிறோமோ அந்த மாதிரி வஸு, ருத்ர, ஆதித்ய ஸ்வரூபர்களான பித்ரு தேவதைகள், பித்ரு லோகத்தில் இருக்கிறவர்களை ஆராதிப்பதற்கு என ஏற்பட்ட கர்மா அது.

அந்த பித்ரு தேவதைகளை நீ ஆராதிக்கிறாயே, அதிலே நீ யாரை ஆராதிக்கிறாய் என்று கேட்டால், எல்லா சராசரங்

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

**11**

களுக்கும் அந்தர்யாமியாய் இருக்கக் கூடிய விஷ்ணுவைத் தான்! விஷ்ணுவைத்தான் நீ ஆராதிக்கிறாயேயொழிய மற்றவர்களை அல்ல!

ஆகையினாலே, பித்ரு காரியம் என்பது வீணான காரியம் அல்ல- கட்டாயம் பண்ணியே ஆக வேண்டியது.

ராமாயணத்திலே ஜாபாலி என்று ஒரு மஹரிஷி-அயோத்யா காண்டத்திலே ராமனுக்கு எதிரில் வந்து இந்தக் கேள்விகளையெல்லாம் கேட்டிருக்கிறார்: 'அப்பா யார்? பிள்ளை யார்? இங்கே பிண்டப் பிரதானம் பண்ணினால் அங்கே போகுமா...?' - அந்தக் காலத்திலே, திரேதா யுக்த்திலேயே கேட்டு விட்டார் ராமனைப் பார்த்து!

'அந்த மாதிரி பிண்டம் போவதைப் பார்த்தவர்கள் யார்? அது எங்கே போகிறது? யாருக்கு யார் அப்பா? யார் பிள்ளை? இந்தக் கர்மாவெல்லாம் வீண்!' என்று நிரீச்வர வாதம் பண்ணுகிறார். தர்மத்துக்கு முரண்பாடாகப் பேசுகிறார்.

ராவணனைப் பார்த்தபோது கூட பகவானுக்கு அவ்வளவு கோபம் வரவில்லை- புதிய வாதம் பண்ணிய அந்த ஜாபாலியின் வார்த்தையைக் கேட்டு மகா கோபம்! கோபத்தில் கண்கள் சிவந்து போய்விட்டன. உதடு துடிக்கிறது!

"மஹரிஷே! என்ன பேசுகிறீர்கள்! தர்மத்துக்குக் கட்டுப்பட்டது வேதம். வேதத்திலே தர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மத்தைக் கேட்டாலும் பார்த்தாலும் புண்ணியம். தர்மத்துக்கு விருத்தமாய் நீர் பேசுகிறீர். உமது பேச்சு அவை ஏறாது!" என்று கோபத்தோடு சொன்னான்.

நடுங்கிப்போய்விட்டார் ஜாபாலி! உடனே ராமன் திருவடியிலே விழுந்து, 'நீ என்ன என்ன சொல்கிறாய் என்று கேட்கத்தான் இந்த வாதம். நான் நாஸ்திகன் இல்லையப்பா' என்று மறுபடியும் பகவானிடத்திலே சொன்னார்!

இங்கே வைத்த பிண்டம் அங்கே போகுமா என்பதெல்லாம் என்ன கேள்வி?!

நேரே கிளம்பி மீனம்பாக்கத்துக்குப் போய் ஏர்போர்டுல பிளேன் ஏறி டெல்லிக்குப் புறப்பட்டுப் போய்ட்டார் ஒருத்தர்.

அவருடைய பிள்ளை இங்கே சென்னையில் இருக்கிறார். டெல்லி போனவர் போன் பண்ணிவிட்டார்- அங்கே போய்ச் சேர்ந்தாயிற்று என்று...

மறுநாள் காலையில் ஒன்பது மணிக்கு இங்கே சென்னையில் இவர் சாப்பிடப் போகிறார். கிருஹத்திலே அப்பாவும் பிள்ளையும் பக்கத்தில் உட்கார்ந்து சாப்பிடுவது வழக்கம். அப்பா அன்று பக்கத்தில் இல்லை என்றதும் இவர் என்ன பண்ணினார், தம் பத்னியைக் கூப்பிட்டார். 'அப்பா இல்லாவிட்டாலும் பரவாயில்லை. நித்யம் இங்கே தானே உட்கார்ந்து சாப்பிடுவார். அதனால் இலையைப் போடு' என்றார்.

இலையைப் போட்டு எல்லாவற்றையும் பரிமாறி புரோக்ஷணம் பண்ணி, இது மொத்தமும் என் அப்பாவை நினைத்துக் கொண்டு புரோக்ஷணம் பண்ணுகிறேன். இது மொத்தமும் டெல்லியிலே போய் அவருக்குப் பூரண திருப்தியைக் கொடுக்கட்டும்... என்று 'டெல்லிக்குப் போ!' என்றார்.

போன் பண்ணி அப்பாவைக் கேட்கிறார்! டெல்லிக்கு அது வந்து சேர்ந்ததா என்று...!

"நீ அனுப்பியது எதுவும் வரவில்லையே! நான் போய் சாரநாதனுடைய திருமாளிகையிலே தானே சாப்பிட்டேன்..." என்கிறார் அப்பா.

இவர் அனுப்பியது போகவேயில்லை! இங்கேயிருந்து ஒரு வரையறைக்கு உட்பட்டு-ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கே உன்னால் அனுப்ப முடியவில்லை! 'இங்கே பூமியிலே வைத்த பிண்டம் அங்கே எங்கேயோ பித்ருக்களுக்குப் போகிறதாம்! அது எங்கேயிருக்கிறது பித்ரு லோகம்!' என்றெல்லாம் கேள்வி எழுப்பலாமா...!

ஆகையினாலே, நாம் கவனிக்க வேண்டும். நம்மைக் கோணலான வழியிலே

**அருளவாக்கு**

'வழி காட்டுவதற்காகத்தான் அவன் மனுஷன் மாதிரி விளையாடுகிறான். தர்ம ஸம்ஸ்தாபனத்திற்காக ஸங்கல்பம் மட்டும் பண்ணுவது ஒத்து வரவில்லை என்றுதான் அவதாரம் பண்ணுகிறான்' என்று சொல்லுவார்கள். தர்மம், அதில் ஜனங்களுக்குவழி காட்டுவது எல்லாம் இருக்கட்டும்; இதெல்லாம் எப்படியிருந்தாலும் அவனுக்கே ஒரு ஆசை, தான் படைத்த குழந்தைகளோடு கலந்து பழகி வாழ வேண்டுமென்று! அவன் தானே ஸர்வ பூதங்களுக்கும் மாதா பிதாக்கள்? குழந்தைகள் எப்படியிருந்தாலும் அவற்றோடு சேர்ந்து இருக்கணுமென்று மாதா பிதாக்களுக்கு ஆசை இல்லாமல் போகுமா? அப்படித்தான் அவனுக்கும் ஆசை! அவன் ஆசைப்பட்டாலும், அவன் அரூபமான பரமாத்மாவாக இருந்தால், நாம் அவனை கிரஹிக்க முடியுமா? அல்லது திவ்ய ரூபம் எடுத்துக் கொண்டு சதுர்புஜனாக வந்தாலும் நாம் அவனிடம் போய்க் கலந்து பழகுவோமா? கன்னத்தில் போட்டுக் கொண்டு வரம்



கேட்போம். இன்னம் கொஞ்சம் ஜாஸ்தியாகப் போனால், தர்சன மாத்திரத்திலேயே மூர்ச்சைபோட்டு விழுந்து விடுவோம். அதற்காகத்தான் நம் போன்ற மனுஷ்யனாகவே அவதாரங்களில் வந்து நம்முடன் இழைந்து பழக வைக்கிறது. தன் ஆசை தீர, அவர்களுடைய ஆசை தீரவும்தான், எல்லோரும் ஸஹஜமாக ஒட்டிப் பழக வேண்டுமானால் அவர்கள் மாதிரியே 'ஆடினால்தான் முடியும் என்று தான் பரமாத்மா அவதாரங்களில் ஆசாபாசம், கோபம், அழுகையெல்லாம் காட்டுவது. ஆனால்' மொத்தத்தில் கணக்குப் பார்த்தால் இதற்கெல்லாம் மிகவும் அதிகமாக உத்தமமான ப்ரேமை, ஞானம், சீலம், ஸத்யம் எல்லாவற்றையும் நடத்திக்காட்டி தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணியிருப்பான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

அழைத்துக் கொண்டு போய்த் தப்பான காரியத்தை நாள்பூராவும் பண்ணச் சொன்னால் அதற்குப் பெயர் வேதம் என்று இருக்குமா...? நம்மைக் கெட்ட வழியிலே திருப்பி, 'வீணான காரியத்தைப் பண்ணி சிரமப்படு' என்று வேதம் நம்மைப் பார்த்துச் சொல்லுமா?

ஆயிரம் தாய் தந்தையரைக் காட்டிலும் நம்மிடம் அன்பு கொண்டது சாஸ்திரம். ஒரு தாய் தந்தையினுடைய அன்பை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். சீராட்டி, தாலாட்டி, அவர்கள் வளர்ப்பதையெல்லாம் பார்த்தால், ஆயிரம் தாய்-தந்தையருடைய அன்பை ஒன்றாக்கிக் கொட்டினால் அது வேதத்தினுடைய அன்புக்கு ஈடாகும் என்று சொல்ல முடியாது!

அப்படி நம்மிடத்திலே அன்பு கொண்ட வேதம் நம்மைக் கெடுக்குமா! உள்ளூர நினைத்து, பக்தி சிரத்தையோடு சமர்ப்பித்தால் கட்டாயம் நம் காணிக்கை பித்ருக்களைப் போய்ச் சேரும்.

அதற்கு த்ருஷ்டாந்தம் உண்டா என்றால், போகிறது என்பதை நாம் தெரிந்து கொள்ள முடியுமா என்றால், கண்ணால் என்னத்தைப் பார்ப்பது! இந்தக் கண்ணுக்கு ஒரு வரையறைக்குட்பட்ட சக்திதான் உள்ளது. எல்லாவற்றையும் கண்ணால் பார்த்துவிட முடியாது.

கண்ணால் பார்க்க முடியாததை வேறு இந்த்ரியத்தால் நாம் உணர முடியும். ஆகையால், கண்ணால் பார்த்தால் தான் மெய் என்று சொல்லக்கூடாது.

வைத தீக்ஷா, திருக் தீக்ஷா, ஸ்பரிச தீக்ஷா என்று மூன்று தீக்ஷைகள் சொல்லப் படுகிறது. சாஸ்திரத்தில் விசேஷமாக எல்லா ஆசார்யர்களும் இதைக் கொண்டாடுகிறார்கள்.

ஸ்பரிச தீக்ஷை என்பது என்ன...? நல்ல மழைக் காலம். பக்ஷிகளால் வெளியிலே போக முடியவில்லை. தாய்ப் பறவை உட்கார்ந்திருக்கிறது. இந்தக் குஞ்சுப் பறவைகளெல்லாம் ஒரே கத்தல்! என்ன கத்துகிறது என்று கேட்டு அர்த்தம் சொல்ல முடியுமா! நமக்குத் தெரியாவிட்டாலும் தாய்ப் பறவைக்குத் தெரியும். பசி! தாய்ப் பறவை வெளியிலே போக முடியாத நிலையிலே ஒரே மழை!

என்ன செய்தது தாய்ப் பறவை..? குஞ்சுகளைச் சேர்த்து இறக்கையாலே அணைத்துக் கொண்டது. ஒரே ஒரு நிமிடம் இப்படி அணைத்துக் கொண்டது. இப்போது எல்லாம் சந்தோஷமாகக் கத்துகின்றன! அப்போது கத்திய கத்தல் வேறு; இப்போது கத்துவதே வேறு! இப்போது வயிறு நிரம்பிப் போய்விட்டது. நன்றாகப் பசி அடங்கிப் போய்விட்டது!

அந்த மாதிரி நம் கிருஹத்திலே குழந்தை அழுகிறது... பசியோடு அழுகிறது. சேர்த்து அணைத்துக் கொண்டால் பசி போய் விடுமா...? இன்னும் வீல் வீல் என்று கத்தும்.

நமக்கே இந்த சக்தி இல்லையே! ஐயோ பறவைகளுக்கு இப்படி ஒரு சக்தி கொடுத்திருக்கிறானே! ஒரு வேளை பசியைத் தாங்குவதற்கு சக்தியைக் கொடுத்திருக்கிறானே! நம்மால் முடியவில்லையே...

யாரும் சொல்லிக் கொடுக்காமல் நாம் கற்கும் கல்வி பசி ஒன்றுதான்! ஆனால் பறவைக்கு இருப்பது போல் பசியைக் கட்டுப் படுத்துகிற சக்தி நமக்கு இல்லை!

இன்னொரு சக்தி மீனுக்கு இருக்கிற சக்தி. ஜலத்திலேயிருந்து வெளியில் எடுத்துப் போட்டால் துடிதுடித்து மாண்டு போகக் கூடிய அல்ப ஜீவன்.

ராமனைப் பிரிய வேண்டும் என்கிற நிலை நெருங்குகிறபோது லக்ஷ்மணன் என்ன சொல்கிறான்...? 'ஹே ராமா! எங்களை விட்டு விட்டு நீ காட்டுக்குப் போய் விட்டாயானால் நானும் சீதையும் இந்த லோகத்தில் இருக்கவே மாட்டோம். ஜலத்திலேயிருந்து எடுத்துப் போட்ட மீன் எப்படி துடிதுடித்து மாண்டு போகுமோ அப்படி மாண்டு போவோம்' என்கிறான்.

ஆனால் அந்த மீனின் சக்தி எத்தகையது...? அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)



நகரங்கள் ஒவ்வொன்றிலும் விதம் விதமாய் அடுக்குமாடிக் கட்டடங்கள் வானை நோக்கி எழுந்து கொண்டேயிருக்கின்றன. காம்ப்ளக்ஸ் என்கிறார்கள். அபார்ட்மெண்ட்ஸ் என்கிறார்கள். அவென்யூ என்கிறார்கள். அபோடுகள் (Abodes) என்கிறார்கள். நெருக்கடி மிகுந்த நவீன வாழ்வின் நாகரிகச் சின்னங்கள்.

கண்ணைக் கவரும் வண்ண மயமான கட்டடங்கள். பாதங்களை மயங்க வைத்து சட்டென ஒரு கணம் வழுக்கி விழ வைத்துவிடுமோ என அச்சப்பட வைக்கின்ற அளவுக்குப் பளப்பளா தரை அமைப்பு. நின்று கவனித்தால் நம் முகம் பார்த்து விடலாம். ஆனால், நம் 'மனசை' அங்கேயெல்லாம் பார்த்துவிட முடியாது என்கிறார்கள் கதிர்வேலு - மல்லிகேஸ்வரி தம்பதி.

# இந்த ஸ்டோர்களில் அன்பு இலவசம்!

பதினைந்து வருடங்களாக ஒரே வீட்டில் (சேத்து வீடு) வசித்து வருகிறார்கள். ஸ்ரீரங்கம், மேலூர் ரோடு, பொம்மாசித் தோப்பு ஸ்டோர். பெயரில் மட்டும்தான் 'தோப்பு' இருக்கிறது. அருகருகே உயர்ந்த கட்டடங்களையும் அபார்ட்மெண்ட்களையும் தனது பின்னணியில் உள்ளடக்கிக் கொண்டு ஒரு ஸ்டோர். மூன்று மொட்டை மாடி வீடுகள், நான்கைந்து ஓட்டு வீடுகள், அதனைத் தொடர்ந்து ஏழெட்டு சிற்று வீடுகளுமாய் சாயங்கால நிழல் போல நீண்டு செல்கிறது அந்த ஸ்டோர்.

விவசாயத்துறை அலுவலகம் ஒன்றில் நிரந்தரமில்லாத பணியில் மாதம் ரூ. 2500 சம்பளத்தில் வாழ்க்கைப் படகை செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். மாத வாடகை ரூ. 150. மூன்று மகன்கள். தமது தங்கையின் உதவியால் பையன்கள் படித்துக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார் கதிர்வேலு. தென்னங் கீற்றுக் குடிசைக்குள் நாம் உள்ளே நுழையும்போது சற்று குனிந்து தான் செல்ல வேண்டும்.



• கதிர்வேலு - மல்லிகேஸ்வரி



சின்னங்களாகக் காட்சி தந்து கொண்டிருக்கின்றன.

சாரதாஸ் கடந்து மலைவாச லுக்கு முன்னமேயே ஓர் இரண் டடிச் சந்துக்குள் நுழைந்து உள்ளே போனால் சுப்பய்யர் ஸ்டோர்ஸ். வெளித் தாழ்வாரத்தில் நின்று அண் ணாந்து பார்த்தால் தாயுமான சுவாமி கோயில், உச்சிப் பிள்ளையார் சன்னதி தெரிகிறது. நின்ற இடத்தி லிருந்தே நமஸ்கரித்துவிட்டு அன்றைய வேலைகளைத் தொடங்கி விடலாம்.



• சந்தான கோபாலகிருஷ்ணன் - கலோசனா

ஆனால், அவர்களது வாழ்க்கைப் பயணம் நிமிர்ந்துதான் செல்கிறது!

கதிர்வேலு - மல்லிகேஸ்வரி தம்பதி சொல்கிறார்கள்:

"ஸ்டோர்ல குடியிருக்கறதுல பல சௌகர் யமெல்லாம் இருக்குங்க. ஸ்டோர்னா சின்ன எடமா இருக்கும். கொறைஞ்ச வாடகைக்குக் குடி இருக்கலாம். தனி வீடுன்னா எடம் பெருசா வசதியா இருக்கும். அந்தளவுக்கு நம்பளால வாடகை தர முடியாதுங்க. ஸ்டோர்ல இருக்கறதுனால சிரமப்படும் போது ஒருத்தர்க்கொருத்தர் மனிதாபிமானத் தோட உதவிக்க முடியும்ங்க. 'தங்கத்துலயே கூடு செஞ்சிருந்தாலும் அதுல தங்குறதா, இல் லையான்னு முடிவு செய்யிறது கிளியோட மனசைப் பொறுத்ததுங்கற மாதிரி இந்த தென் னங்கீத்து வீட்லயே நாங்க – எங்க பையன்ங்க எல்லாம் சந்தோஷமா, மனசு நெறைவா இருக் கோம்ங்க."

திருச்சி மலைவாசல் அருகே சுப்பய்யர் ஸ்டோர்ஸ். ட்ரஸ்ட் ப்ராபர்ட்டி. நகரின் மையத்தில் பழங்கால வீடுகள், கட்டடங்கள் எல்லாம் உருவ மாற்றம் பெற்று விண்ணை நோக்கி 'விர்'ரென்று வளர்ந்து கொண்டே யிருக்கின்றன. சாதாரண மனிதர்கள் வசிக்கும் இந்த ஸ்டோர்ஸ் மட்டும் எந்த மாற்றத்தையும் தன் மீது ஏற்றுக் கொள்ளாமல் புராதனச்

இருபது வருடங்களாகக் குடியிருந்து வரு கிறார்கள் சந்தான கோபாலகிருஷ்ணன் - கலோச்சனா தம்பதி. இ.ஆர். மேனிலைப் பள்ளியில் ஓவிய ஆசிரியராகப் பணிபுரிகிறார் சந்தான கோபாலகிருஷ்ணன். அவர் சொல் கிறார்:

"75 ரூபா மாச வாடகைக்கு வந்தோம். இப்போ 200 ரூபா மாச வாடகை. இந்த ஸ்டோர்க்குள்ளாற முன்பின் தெரியாத ஒருத் தர் அத்தனை சுலபமா உள்ள வந்துட்டு வெளியே போய்ட முடியாது. "நீங்க யாரு சார்... யாரைப் பாக்க வந்திருக்கீங்க"ன்னு முதல் வீட்லயே விசாரிக்க ஆரம்பிச்சிடுவாங்க...

.....நாம வெளிய போயிடுற நேரத்துல நம்பளப் பாக்க யார் வந்துட்டுப் போனாலும் நாம வந்ததும் பக்கத்து வீட்டுக்காரர் நமக்கு வெவரமாச் சொல்லிடுவார்.

"ஒரு தடவை. பக்கத்து வீட்ல ரெண்டு நாள் வெளியூர் போய்ட்டாங்க. அந்த வீட்ல 80 வயசுல ஒரு வயோதிகர். அவருக்கு இணைப் பழமாக 70 வயசுல மாமி. ரெண்டு பேரையும் விட்டுட்டுப் போய்ட்டாங்க. துணி காயப்போடுறேன்னு வயசானவர் மொட்டை மாடிக்குப் படியேறும்போது தவறிப் போய் படியில உருண்டுட்டார். முனகல் சத்தம் கேட்டு நாங்க ஓடிப் போய் முதலுதவி செஞ்சி அவரை ரெண்டு நாள் ஆஸ்பிடல்ல வெச்சுப் பாத்தோம். டிஸ்சார்ஜ் ஆகி வயசானவரை



• பாலாம்பாள்



• குமார் லெக்ஷ்மணன்

ஸ்டோருக்கு கூட்டிட்டு வர்றோம். அப்பதான் வெளியூர் போனவங்க ஆட்டோவுல வந்து எறங்குறாங்க. இதே தனி வீடுன்னா அந்தப் பெரியவர் அவுரால முடிஞ்சவரைக்கும் முன இட்டே படுத்திருக்க வேண்டியதுதான்."

"ஒரு ஸ்டோர்ல குடியிருக்கறவங்க யாரை நாங்க வெளியில பாத்தாலும் 'நம்ப ஸ்டோர்க் காரங்க'ன்னுதான் பாப்போம். இவுரு இஞ்சி னியர். இவுரு வாத்யார், கிளார்க், பியூன்னு வித்தியாசமா நெனைக்க மாட்டோம்" என் கிறார்கள் சந்தான கோபாலகிருஷ்ணன் – கலோச்சனா.

**ந**கரின் மையப்பகுதியான பெரிய கடை வீதியில் இருக்கும் சந்துக்கடை ஏரியா. மிகவும் நெருக்கமான வீடுகளும் குறுகலான சந்துகளும் நிறைய கொண்டது. புத்தம் புதிதாக ஒரு வரைக் கொண்டு போய் ஒரு சந்துக்குள் விட்டு விட்டு நாம் மறைந்து விட்டால் அவர் வழியைக் கண்டு பிடித்து கடை வீதியையோ காந்தி மார்க்கெட்டையோ தொட்டு விடுவதற் குள் மயக்கமே வந்து விடும். சந்துக் கடைப் பகுதியில் இருந்த மிகப் பழமையான ஸ்டோர் கள் எல்லாம் இன்று கைமாறிப் போய் மூன்று மாடி, நான்கு மாடிக் கட்டடங்களாக வடிவம் பெற்று விட்டன.

உரிமையாளர்களும் சேர்ந்து குடியிருக் கும் ஸ்டோர்ஸ்களில் உள்ளே நுழைய விடா மல் 'செக்போஸ்ட்' போல நம்மைத் தடுத்து நிறுத்தி விடுகிறார்கள். 'நாங்க யாரையுமே தொடர்ந்து ரொம்ப வருஷமா குடி வெச்சிக் கறதில்லீங்க. ரெண்டு வருஷம். அதிகமாப் போனா மூணு வருஷம்தான். வேற குடிய மாத்தி வெச்சிடுவோம். பத்து வருஷம், பதினைஞ்சி வருஷம்னு இருந்தாங்கன்னு வெச்சிக்கங்க. அவுங்க அனுபவ பாத்யதை அது இதுன்னு கோர்ட்டுக்குப் போய்டுவாங்க. அப்புறம் கோர்ட்டுக்கும் வீட்டுக்கும் யார் சார் அலையறது?'

காவிரி ஆற்றங்கரையிலிருந்து தெற்கே ரெண்டு பர்லாங் தூரத்தில் இருக்கிறது வீர முத்து நகர். கூப்பிடு தூரத்தில் ரயில்வே லைன். லைனை ஒட்டி கருவேல முட் செடிகள் புதர்களாய் மண்டிக் கிடக்கின் றன. அந்தப் பகுதியில் வசிக்கும் பெண் கள் அனைவருக்கும் அதி நவீன கழிப்பிட மாய் அந்தக் கருவேல முட்செடிப் புதர் களே காட்சி தருகின்றன. கழிப்பிட வசதி என்பது ஸ்டோர்வாசிகளுக்கு இன்னமும் நடைமுறைக்கு எட்டாப்பழமாக இருப் பது கண்ணெதிரே தெரிகிறது.

வீரமுத்து நகரில் சித்திரப் பாண்டியன் ஸ்டோர். எல்லாம் பத்துக்கு பத்தடி சதுரம் கொண்ட அறைகள். நூறு சதுர அடி கொண்ட நான்கு சுவர்களுக்குள்ளேதான். ஒவ் வொரு வீட்டிலும் ஐந்து பேர் ஆறு பேரென அதற்குள் உண்டு, உறங்கி, வாழ்ந்து வருகிறார்கள்.

ஸ்டோர்வாசியான துரைசாமி (வயது 46) சொல்கிறார்:

"நா ஒரு ஜவுளிக்கடையில வேல பாத் துட்டு இருக்கேன். மாசச் சம்பளம் 1300 தாங்க. என்னோட சம்சாரம் பக்கத்துல பேரீச்சம் பழக் கம்பெனிக்கு தினக்கூலியா போய்ட்டு வருதுங்க. புள்ளைங்கள சேத்து நாங்க அஞ்சு பேர். மாச வாடகை ரூபா 150. எங்க வருமானத் துக்கு முடியாதுங்க. இதுல என்னா எங்க ளுக்கு இருக்கற சந்தோஷம்ன்னா... ஸ்டோர்ல எல்லாருமே தாயா புள்ளையா சொந்தக்காரங் களை விட நெருக்கமா... அன்பா... வாழ்ந் துட்டு இருக்கோம் சார்."

"சொந்தக்காரங்க யாரும் ரெண்டு மூணு நாள் 'விருந்தா' வந்து தங்கிட்டுப் போகணும்ன்னா..."

"என்னது... விருந்தா? விருந்தும் மருந்தும் மூணு நாள்ங்கறதெல்லாம் பழைய காலம். இப் பல்லாம் விருந்தும் மருந்தும் மூணு மணி

நேரம்தான் சார்'' என்று சொல்லி விட்டுச் சிரிக்கிறார் துரைசாமியின் இல்லத்தரசி.

யதார்த்தம் நமது நெஞ்சைச் சுடுகிறது.

திருச்சி சங்கரன் பிள்ளை ரோடு. எஸ்.ஆர். காலேஜ் அருகில். மிகவும் பழமை யான ஸ்டோர். தமிழிலும், ஆங்கிலத்திலும் சுண்ணாம்புக் காரையால் எழுதப்பட்டு நம்மை அன்புடன் வரவேற்கிறது, 'சுதந்தர விலாஸ்' ஸ்டோர்.

மிகச் சரியாக 1947 ஆகஸ்ட் 15 அன்றே இந்த ஸ்டோருக்கு கிரஹப்பிரவேசம் செய்த தால் சுதந்தர விலாஸ் என்று பெயர் சூட்டப் பட்டதாகக் கூறுகிறார்கள்.

லெக்ஷ்மி – சபரிதாசன் தம்பதி இருபது வருஷமாய் சுதந்தர விலாஸில் வசித்து வரு கிறார்கள். சபரிதாசன் வானொலி ஆர்ட் டிஸ்ட். லெக்ஷ்மி சபரிதாசன் சொல்கிறார்: "நான் பிறந்ததுலேர்ந்து எனக்கு ஸ்டோர் வாழ்க்கைதாங்க. கே.கே. நகர்ல சொந்தமா எடம் வாங்கி வீடு கட்டி குடி போனோம்ங்க. ரெண்டு மாசம்தான் அங்க இருந்தோம். 'வெறிச்சோன்னு' ஆய்டிச்சி. அந்த வீட்டை அப்படியே வாடகைக்கு விட்டுட்டு திரும் பவும் மலரும் நினைவுகளோட இந்த ஸ்டோர்க்கே வாடகைக்கு வந்துட் டோம். ஸ்டோர்ல கெடைச்ச 'சந்தோஷம்', மனசு விட்டுப் பேசுறதெல்லாம் தனி வீட்ல கெடைக்கலைங்க. சுதந்தரம்ங்கற பேர்ல தனிமைதாங்க அந்த வீடுகள்ல நெறைஞ் சிருக்கு".

சுதந்தர விலாஸில் வசிக்கும் (80 வயது) பிச்சம்மாள் கூறுகிறார்:

"மடி... ஆசாரமா... இருக்கறச்சே அந் தந்த நாள்ல ஸ்டோர்ல உள்ளவா எல்லாம் கோவாப்ரேட் பண்றா. ஒருத்தர்க்கு ஒருத் தர் அன்பா பேசிண்டு 'ஸ்னேகமா' இருக்கா. இதுவே போதும்னு எனக்குத் தோன்றது."



• பிச்சம்மாள்

ஸ்டோர்வாசி என். பாலாம்பாள் சொல்கிறார்:

"ஸ்டோர்ன்னா ரொம்பவும் பாதுகாப் பான எடம்ங்க. வயசுக்கு வந்த பொம்பளப் புள்ளங்களக்கூட தனியா விட்டுட்டு நாம ஊருக்குப் போய்ட்டு வரலாம். பக்கத்தாத்து மாமி பாத்துக்குவாங்க. எங்களுக்குள்ள சின்னச் சின்ன விஷயங்கள்ல மனஸ்தாபம் வந்தாலும் அது பெரிசா மாறாதுங்க. ஒரு அஞ்சு நிமிஷம்தான். அப்புறமா சரியாய்டும். ஒத்துமையா... மனசுக்கு நிம்மதியா இருக் கோம்ங்க. இதைவிட வேறென்னங்க வேணும்?'' என்று நம்மிடமே கேட்கிறார்.

இதே ஸ்டோர்வாசியான குமார் லெக்ஷ் மணன் (தனியார் பள்ளி ஆசிரியர்), "எங்க ஸ்டோர்ல பதினெட்டு வீட்டுக்கும் தனித் தனியா மின்சார சப்ளை இருக்குங்க. அத னால யாருக்கும் எந்தப் பிரச்னையும் இல் லீங்க. நாங்க இளைஞர்ங்க எல்லாம் ஒண்ணு சேந்து வருஷா வருஷம் சுதந்தர தினத் தன்னிக்கு தேசியக்கொடி ஏத்தி விழா நடத்து றோம். பதினெட்டு வீட்ல எந்த வீட்ல விசேஷம்ன்னாலும் நாங்க எல்லாரும் இருந்து ஜோரா நடத்தி வைப்போம்ங்க."

சுதந்தர விலாஸ் ஸ்டோர்வாசிகளிட மிருந்து நாம் விடைபெற்றுக் கிளம்பும்போது வேகமாய் வந்தார் ஒரு பெண்மணி. 27 வருஷ மாய் இந்த ஸ்டோரில் வசிக்கும் லெக்ஷ்மி சுப்ரமணியன், "இது வரைக்கும் பத்திரிகை யில வராத செய்தியை இதோ இவுங்க சொல் லுவாங்க'' என்று சாந்தா சுப்ரமணியனை நமக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அவர் 1948 லிருந்து சுதந்தர விலாஸில் வசித்து வருகிறார்.

''இந்த ஸ்டோர்ல நாங்க குடி வந்த துக்கப்புறம்தான்...



• துரைசாமி

மகாகவி பாரதியோட மறைவுக்குப் பின்னால் பாரதியோட மனைவி செல்லம்மாவும் மகள் தங் கம்மா பாரதியும் 13-ஆம் நெம்பர் வீட்ல வந்து குடியிருந்தாங்க. அதே நேரத்துல மகாகவியோட பேத்தி லலிதா பாரதி தன்னோட கணவரோட 4-ஆம் நெம்பர் வீட்ல குடியிருந்தாங்க. 1951லேந்து 1955 வரைக்கும் இந்த ஸ்டோர்ல தான் அவுங்க குடியிருந்தாங்க. எனக்கு நல்லாவே நெனைப்புல இருக்கு. செல்லம்மாவுக்கு மகா கவி போலவே நேரான பார்வை, கண்டிப் பான குணம் இருந்திச்சு. 1955ல அவுங்க எல் லாம் டெல்லிக்குப் போய்ட்டாங்க. பாரதி யோட மனைவி இந்த ஸ்டோர்ல வாழ்ந்தாங் கன்னு சொல்றதே எங்களுக்கு எல்லாம் ரொம் பவும் பெருமையா இருக்கு."

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



• முரளி

• பானுமதி

**பஸ்ஸுக்குக் காத்திருக்கிற நேரத்துல நடந்தே போயிடலாம்...! – இது சகஜமான அலுப்பு வாக்கியம். உண்மையில், காத்திருக்கும் காலத்தில் என்ன நடக்கிறது? கொளுத்தும் வெயிலில் சிலரைக் கேட்டோம்...**

**தாம்பரம் பேருந்து நிலையம்:**

*முரளி:* இது சேன்ஜ் அவர், அதுனால தான் பஸ் ரொம்ப நேரமா வரலை. நானும் ட்ரான்ஸ்போர்ட்லதான் டெக்னிகல் அஸிஸ்டெண்ட்டா வேலை பாக்கறேன். கிழக்குத் தாம்பரத்துல மணிமேகலை தெருல வீடு இருக்கு. சீக்கிரம் பஸ் வந்துட்டா நல்லது.

*பானுமதி (முரளியின் மனைவி):* இது ரொம்ப தொந்தரவான ஏரியா. இங்கே என்ன யோசிக்க முடியும்? பஸ் எப்ப வரும்னுதான் யோசிச்சிட்டு இருக்கேன். (பக்கத்து டீக்கடையில் சத்தமாக, டேப்ரிகார்டரில் 'வெள்ளரிக்கா பிஞ்சு வெள்ளரிக்கா' ஒலித்துக் கொண்டிருக்கிறது)

*ராகவன்:* நான் பழந்தண்டலத்துலருந்து காய்கறி வாங்கறதுக்காக தாம்பரத்துக்கு காலைல எட்டரை மணிக்கு வந்தேங்க. 52 Bக்கு நிக்கறேன். இன்னும் காணோம். வயல்ல நெல்லு போட்டுருக்கேன். இந்த வருசமாவது வெள்ளாமை நல்லா வருமான்னு யோசிச்சிட்டிருக்கேன்.

**சாலை டோரியம் (MEPZ)**

*அய்யப்பன்:* நான் இங்கதான் பால்மர் லாரி கம்பெனில வேலை பாக்குறேன் சார். பஸ்ஸுக்காகக் காத்துக்கிட்டு இருக்குறப்போ பஸ் ஸ்டாண்ட்ல நிக்க முடியுதா பாருங்க! சுதந்தரம் வாங்கி அம்பத்தொரு வருஷம் ஆச்சு. இந்த பஸ் ஸ்டாண்டுல ஒரு நிழற்குடை கூட இல்லை. போதாததுக்கு, பின்னாடி மீன் வியாபாரம், குப்பைங்க. நாத்தம் தாங்க முடியலை. இந்த பஸ் ஸ்டாண்ட்ல ஆர்டினரி பஸ் கிடைக்கிறது ரொம்பக் கஷ்டம். எக்ஸ்பிரஸ் பஸ், LSS பஸ்ஸெல்லாம் இங்கே நிக்காது. அதைத்தான் யோசிச்சிட்டு இருக்கேன்.

*ஓர் காஸ் (மனைவி எஸ்கருடன்):* ஆண்டவர் யேசுவைத்தான் நினைச்சுட்டு இருக்கேன்.



• ராகவன்

# காத்திருக்கும் நேரம்

அவரைத் தவிர வேற எந்த சிந்தனையும் இல்லை. இப்பதான் சர்ச்சல இருந்து நேரா வர்றோம்.

**சந்தர்குமார்:** செங்கல்பட்டுல இருக்குற எங்கக்காவுக்கு உடம்பு சரியில்ல. போனும் போனும்னு நினைச்சு தள்ளித்தள்ளிப் போகுது. இங்கே தான் ஃபேன்ஸி ஸ்டோர் வச்சிருக்கேன். சட்டுனு கடைய மூடிட்டுப் போக முடிய மாட்டேங்குது. வியாபாரமும் சரியில்லை. செங்கல்பட்டுக்குப் போகணும்னா 30, 40 ரூபா செலவாய்டுது. ஆனா, பாத்துட்டு வந்தா அவங்களுக்குக் கொஞ்சம் ஆறுதலா இருக்கும் இல்லே?

## குரோம்பேட்டை

**முகுந்த்:** காலேஜ்ல பசங்க எப்படில்லாம் இருக்காங்கன்னு, நானும் ஸ்ரீகுமாரும் பேசிக்கிட்டிருந்தோம். நாங்க ரெண்டு பேரும் எம்.ஐ.டில பி.டெக் பண்றோம். இன்னிக்கு எங்க காலேஜ்ல மீட்டா ஃபெஸ்ட் (MITA FEST). அதாவது இன்டர் காலேஜியேட் காம்பெடிஷன் நடக்குது. சன் டீவி ரமேஷ் பிரபாதான் நடத்தறார். பாட்டுக்குப் பாட்டு, சினிமா க்விஸ் எல்லாம் நடந்துட்டிருக்கு. அதைப் பத்தி தான் பேசிக்கிட்டிருக்கோம்.



• ஐயப்பன்

**பானுமதி:** அஸ்தினாபுரத்துக்கு மட்டும் ஏன் நிறைய பஸ் வர மாட்டேங்குதுன்னு யோசிச்சிகிட்டு இருக்கேன். தினமும் இதே பிரச்னை. நான் கூடுவாஞ்சேரில, ஆஸ்பத்திரில ஃபார்மஸிஸ்டா வேலை பாக்குறேன். பஸ் வரும், வரும்னு மணிக்கணக்கா காத்திருப்பேன். வந்தாலும் கூட்டமா வரும். கடைசில வெறுத்துப் போய் ஆட்டோல போய்டுவேன்! ஆட்டோவுக்கு 25 ரூபா ஆய்டுது. பஸ் நேரத்துக்கு வந்தா நல்லாருக்கும்.

## டி.பி. மருத்துவமனை ஸ்டாண்ட்

**ரங்கராஜன்:** நான் ஒரு கூரியர் கம்பெனில வேலை பாக்கறேன். ஞாயித்துக்கிழமை கூட லீவு விட மாட்டேங்கறாங்க. அதைத்தான் யோசனை பண்ணிகிட்டு இருக்கேன்.

**ராதாகிருஷ்ணன்:** எனக்கு சொந்த ஊர் ஊத்துக்கோட்டைங்க. இந்த பூந்தமல்லி பஸ்ஸ பத்திதான் நினைச்சுக்கிட்டு இருக்கேன். நான் பஸ்ஸுக்காக நிக்கலை. நான் இந்த ஆஸ்பத்திரில (TB ஹாஸ்பிடல்) அட்மிட் ஆயி மூனு நாளாச்சு. அம்மா, சொந்தக்காரங்க எல்லாம் என்னைய பாக்க வந்தாங்க. அவங்களை ஏத்திவுடுறதுக்காக நிக்கிறேன். இனிமே இவங்க பூந்தமல்லி போயி, அங்கிருந்து திருவள்ளூர் போய் ஊத்துக்கோட்டை பஸ்ஸைப் புடிக்கணும். இவங்களை ஏத்திவிட்டுட்டா திரும்ப ஆஸ்பத்திரிக்குள்ளே போயிடுவேன். இதோ, கூட நிக்கிறாரே, இவரு பேரு முருகன். இவரும் நம்ம கேசுதான். வேற என்னா?

**— கே. பாலசுப்ரமணியன்**

படங்கள்: **எம். சண்முகம்**



• லூகாஸ்



• சந்தர்குமார்



• முகுந்த்



• பானுமதி



• ரங்கராஜன்



• ராதாகிருஷ்ணன்



# ஐயோ

"டண் ட டான்... டண் ட டான்...

இந்த வடிகட்டி எப்படி இருக்கு பாருங்க!"

ஏஷியன் ஸ்கை ஷாப்பிங் நாரீமணி கணக்காக கையில் ஒரு பாத்திரத்தை வைத்துக் கொண்டு ஸ்டைலாக நின்றாள் என் மனைவி சரஸு.

பணத்துக்கு ஏதோ தலைவலி!

"என்ன அப்படிப் பார்க்கறீங்க? உங்க அண்ணனோட மச்சினியின் கல்யாணத்தில் தாம்பூலப் பையுடன் எவர்சில்வர் பேசின் கொடுத்தார்கள். கடைக்காரனிடம் கொடுத்து அதில் ஓட்டை போட்டுக் கொண்டு வந்தேன். அருமையான வடிகட்டி தயார்!"

என் கலகம் பொய்க்கவில்லை.

"எந்தப் பத்திரிகையில் வந்த ஐடியா இது? இதுக்கு எவ்வளவு கூலி தண்டம்?"

"கூலி என்ன பிசாத்துக் கூலி? முப்பதே ரூபாய்தான். ஐடியா அருமையா இருக்கா இல்லையா? அதைச் சொல்லுங்க முதலில்."

"ஐடியாவில் தீயை வை! புது வடிகட்டியே இருபத்தி ஐந்து ரூபாய் கொள்ளாது. காசுக்கு வேட்டு வைக்காத வீட்டுக் குறிப்புகளே உன் கண்ணில் படாதா?"

"நான் செய்யற காரியம் எதுவும் உங்களுக்கு புடிக்காதே. இதையே உங்க அருமைத் தங்கை செய்யட்டும். ஆகாசத்துக்கு புகழுவீங்க."

நொடித்துக் கொண்டு திரும்பினாள்.

"ஏய், கழுதை இதப் பாரு. என் பீரோவைத் திறந்தால் ஒரே குப்பையும் கூளமுமா கொட்டுது. யார் வேலை இது?"

"குப்பை, கூளமாகவா இது உங்களுக்குப் படுது? நவராத்திரி கொலுவிற்காக தெர்ம கோல் துண்டுகள், வத்திப் பெட்டி, மெழுகுவர்த்தித் துண்டுகள், ஜிகினா பேப்பர், அட்டைப் பெட்டிகளைச் சேர்த்து வைக்கப்பட்ட கஷ்டம் எனக்குத் தெரியும்! இது அத்தனையும் கொலுவில் பார்க் வைப்பதற்கு வேண்டும். 'மாதர் மகிமை' நவராத்திரி மலரில் வந்த குறிப்புகளின்படி அத்தனையும் இருக்கு அடுத்த நவராத்திரி கொலு படு ஜோரா

# வீட்டுக் குறிப்புகள்!

**ரா.ச. கிருஷ்ணன்**

இருக்கும் பாருங்க."

"பாலி, அடுத்த நவராத்திரிக்கு இப்பத்தி லிருந்தே இவ்வளவு குப்பையை சேர்த்து வைக்க என் பீரோதானா கிடைச்சது. என் துணி மணிகள் வைக்கக் கூட இடமில்லை!"

"இடமில்லை என்றால் நீங்கள் வேறே பீரோ வாங்கிக் கொள்ளுங்கள். இந்த சாமானை யெல்லாம் வைக்க வேறே இடம் கிடையாது."

போயே போய் விட்டாள்!

**வீ**ட்டுக் குறிப்புகள், சமையல் குறிப்புகள் என்று பத்திரிகைகளில் வருவதையெல்லாம் படித்து விட்டு இப்படித்தான் கூத்தடிக்கிறாள். தொல்லை பொறுக்க முடியவில்லை.

'உங்கள் வீட்டில் பிளாஸ்டிக் வாளியின் கைப்பிடி கழண்டு விட்டதா? தூக்கி எறிந்து விடாதீர்கள். பிடியின் கீழ்ப்புறம் ஒரு கம்பியை நீளவாக்கில் இழுத்துக் கட்டி விட்டு மேலே கைப் பிடியின் நடுவில் படம் மாட்டும் ஹுக்கை இணைத்து விடுங்கள். அருமையான ஷர்ட் ஹேங்கர் தயார்!

இது எந்த மஹானுபாவி எழுதிய வீட்டுக் குறிப்போ தெரியாது. வீட்டில் ஒரு ப்ளாஸ்டிக் வாளிக்கும் கைப்பிடி கிடையாது. அவை இப்போது ஷர்ட் ஹேங்கராக அவதாரம் எடுத்து விட்டன.

ஆபீஸில் என்னை இப்போது, "ஆஷ்ட்ரே அருணாசலம்" என்று கூப்பிடுகிறார்கள்.

ஏன் தெரியுமோ?

மறுபடியும் வீட்டுக் குறிப்புதான் குற்ற வாளி!

தேங்காய் கொட்டாங்குச்சியை சுத்தம் செய்து பாலீஷ் போட்டு மூன்று டூத் பேஸ்ட் மூடிகளை ஒட்டி ஆஷ்ட்ரேவாக எல்லோருக்கும் விநியோகம் நடக்கிறது.

இத்தனைக்கும் எனக்குத் தெரிந்து யாரும் சிகரெட் பிடிப்பதில்லை.

அங்கிங்கெனாது எங்கும் நிறைந்த கொட்டாங்கச்சி ஆஷ்ட்ரே, வீட்டில் என்னை பய முறுத்துகின்றன!

கொலாஜ் டெகரேஷன் என்று குறிப்பு ஒன்று தத்து பித்தென்று ஒரு பத்திரிகையில் வந்தாலும் வந்தது...

விசை காலம். பத்திரிகைகளில் வரும் படங் களை எல்லாம் கத்தரித்து, தாறுமாறாக அட்டை களில் ஒட்டி இப்போது வீடே சலூன் போலக் காட்சி அளிக்கிறது.

காலி ஹார்லிக்ஸ் பாட்டில்கள், காலி டின் கள் 'காக்டஸ்' பூந்தொட்டிகளாக மாறி இறைபடு கின்றன. பூந்தொடப்பம் கூட அலங்காரப் பொருளாக மாறி நடு ஹாலில் அமர்ந்திருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

வீட்டில் பல்லிகளை வளர்க்கலாம் – கொசு, பூச்சிகளின் தொல்லை இராது. வீட்டில் ஒட் டடை அடிக்காதீர்கள் – சிலந்தி வலையில் பூச்சி கள் சிக்கி, அவற்றின் நடமாட்டம் குறையும் என்பது போன்ற விபரீத வீட்டுக் குறிப்புகள் நல்ல காலமாக இன்னும் வரவில்லை.

அப்படி வந்தாலும் சரசு நிச்சயமாகக் கடை பிடிப்பாள்.

**எ**ன்ன இது? சமையலறையில் கட்டுக் கட்டாக முருங்கைக் காய்கள்?

"ஏய் சரசு! என்ன ஏதாவது மொத்த வியாபாரம் செய்ய உத்தேசமா? திருச்சி மெயின் ரோடு மார்க்கெட்டே நம்ம வீட்டிற்கு வந் திருக்கு?"

"உங்க இடக்குப் பேச்சு கிடக்கட்டும். முருங்கைக் காய் அல்வா பண்ணப் போறேன். கூடமாட ஒத்தாசைக்கு வாங்களேன்."

"அட ராமா, முருங்கைக் காய் அல்வாவா?"

"ஆமாம். 'சமையலோ சமையல்' பத்திரி கையில் வந்திருக்கு. முருங்கைக் காயை வேக வைத்து, விழுது எடுத்துக் கொண்டு கிலோ விழுதுக்கு இரண்டு பங்கு சர்க்கரைப் பாகு வைத்து, அரை கிலோ நெய் விட்டுக் கிளறி..."

'சமையலோ சமையல்' பத்திரிகையில் 'சைடு எஃபெக்டு'களுக்குப் பரிகாரம் சொல்லிச் சிறப் பிதழ் ஏதும் போடுவார்களா என்று கவலை யுடன் காத்திருக்க ஆரம்பித்தேன்! ●



# ஆதி வார்த்தையும் ஆதிபெண் தெய்வமும்

எங்கிருந்து
வருகிறது கங்கை?
எங்கிருந்து புறப்படுகிறது காவிரி?
எங்கிருந்து
தோன்றுகிறது கவிதை?
அடுத்த வரி வார்த்தை
யாருக்குத் தெரியும்?
கவிதையை
கவிஞன்தான் எழுதுகிறானென்று
நம்புகிறீர்களா?
சொல்லுங்கள், சிந்தியுங்கள்.
ஆதி வார்த்தை
அடுத்த வார்த்தை
அடுத்தடுத்த வார்த்தைகள்
அருவித் தண்ணீர் போல வருகிறது

மேற்கு மலைத் தொடரெல்லாம்
காடுகள்
மிளகுக் கொடிகள், முந்திரித்
தோப்புகள்; தேக்கு மரங்கள்.
தேயிலைத் தோட்டங்கள், சந்தனக்
காடுகள்
வாசனைத் திரவியங்கள்
இன்னும் இன்னும் என்று
மலைபடுபொருள்கள்
மனசுக்குள் வந்து வந்து
கஷ்டப்படுத்திக்
கொண்டேயிருக்கிறாள்
மூளியாய்ச் சிதைந்து,
சிதிலமாகி நிற்கும் கண்ணகித்தாய்.

— விக்கிரமாதித்யன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நிங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்

CREATORS NOT JUST BUILDERS

**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone: 4340224/4340210/-4342667. Fax: 044-2344333
E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesdebuilders.com

